சிவாஜ கந்தோதை

உ

விநாயகன்றுணை.

# கொங்குமண்டல சதகம்.

விஜயமங்கலம்

கார்மேகக் கவிஞர்

இயற்றியது




இது

திருச்செங்கோடு

விவேகதிவாகரன் பத்திராதிபர்

தி. அ. முத்துசாமிக் கோனால்,

பல கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு

ஆராய்ந்து

நூதனமாக எழுதிய உரை முதலியவற்றேடு

கொங்குமண்டல ஊர்த்தொகை யுரையுஞ்செய்து

பழயகோட்டை

ராயபஹதூர்

ஸ்ரீமான் - நல்லதம்பிச் சர்க்கரை

உத்தமக் காமிண்ட மன்றுடியாரவர்கள் விருப்பத்தின்படி

சென்னை:

சாது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை ரூ 1-4-0.

உருத்ரோத்காரி௵ சித்திரை௴.

1923.




உ

விநாயகன்றுணை.

# முகவுரை.

" கண்ணவனைக் காண்கவிரு காதவனைக் கேட்கவாய்
பண்ணவனைப் பாடப் பதஞ்சூழ்க—வெண்ணிறைந்த
நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானைப்பொன்
கையொத்து நேர்கூப்பு க."

கொங்குமண்டல சதகம் என்பது, தொண்டை மண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், சோழமண்டல சதகங்களைப் போல நூறு கட்டளைக் கலித் துறைச் செய்யுட்களாற் கொங்கு மண்டலச் சிறப்பை உணர்த்தக் கருதிப் பாடப் பட்ட ஒரு நூல். இது விஜயமங்கலத்திருந்த கார்மேகம் என்னும் ஒரு ஜைன வித்துவானால் பாடப்பட்டது. இம்மண்டலத்துப் பண்டைக்கால நிலப்பரப்பு, தெய்விக விளக்கம், சித்தர், சமயாசாரியர், முடியுடைவேந்தர், குறுநில மன்னர், வள்ளல், புலவர் மற்றும் பலவகை மாந்தர்களின் நீதி - வீரம் - கொடை - ஆண் பாலர், பெண்பாலர் கல்வி - நட்பு - கற்பு - நன்றி மறவாமை - அடக்கமுடைமை - புலவர்களை ஆதரித்து வந்த அருமை - புலவர்களின் பெருமை இன்னும் பல பழக்க வழக்கங்களைச் சுருக்கிக் கூறப்பட்டுளது.

இக்கொங்குமண்டலத்தின் பழய வரலாறு தெரிந்துகொள்ளப் பல நாள் முயன்று என்னால் நடத்தப்பட்ட விவேகதிவாகரன் என்னும் மாதாந்தப் பத்திரி கையிற் சில முறை கொங்கு என்று தலைப்பெயரிட்டு எழுதி வந்தேன். துணை செய்வாரின்மையால் முடிவு பெறவில்லை. 1912-ம் வருஷத்தில் 40 செய்யுட்க ளடங்கிய கொங்குமண்டல சதக ஏட்டுச்சுவடி யொன்று கிடைத்தது. அதிற் பழமையான விழுமிய செய்திகளிருக்க நோக்கிக் கழிபேருவகை கொண்டு தேடி யுஞ் சதக முற்றிலுங் கிடைக்கவில்லை. கொங்குமண்டலத்தில் அருந்தமிழ்க் கன்னைபோலும் வள்ளன்மைக் கொடிவழியுற்ற பழயகோட்டைப் பட்டக்காரர் ராய்பஹதூர் ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடி யாரைக் கண்டு என் கருத்தை விளக்கினேன். முறுவலரும்பி அவ்விருப்பம் எனக்கும் உண்டு அமைந்து செய்யும் பொறுப்பேற்றுக் கொள்வாரைக் காண்கிலேன் என்று ஒத்த அங்கீகரித்தனர்.

சில நாட்டுப் புலவர்களையும் பல ஏட்டுப் பிரதிகளையும் தருவித்துக் கொடுத்தனர். 60 செய்யுளுக்கு மேலுள்ள பிரதி மாத்திரங் கிடைக்கவில்லை. இந்நூலாசிரியரின் நெருங்கிய உறவினரான பூந்துறை ம-ா-ா-ஸ்ரீ பதுமநாப அய்யர் அவர்கள், நூறு செய்யுளுமுள்ள பழமையான ஓலைச்சுவடி ஒன்று உதவினர். அது ஒவ்வொரு செய்யுளுந் தனித்தனிக் கதை கொண்டுளதாற் பல கதைகள் விளங்கவில்லை. வரலாறு கண்டெழுதினலன்றி எல்லோர்க்கும் பயன்படாதெனக்கொண்டு இம்மண்டல முற்றிலுஞ் சென்று அவ்வவ் நாட்டில் எழுந்தருளியுள்ள தெய்வங்கள், உபகாரிகள் மீது பழய புலவர்களாற் பாடியுள்ள புராணம், குறவஞ்சி, பள்ளு, காதல், உலா, ஊஞ்சல், மெய்க்கீர்த்தி மாலை முதலான ஏடுகளைக் கண்டுபிடித்துங் கோயிற் பூசகர், மாணிக்கத்தாள் சாசனம், (பட்டயம்) நாட்டுக் குருக்கள், நாட்டுப் புலவர் இவர்களைத் தேடிக் கண்டு கேட்டுச் சில ஒருவாறு விளங்கின. சங்க நூற் பதிப்புகள் மதுரைச் செந்தமிழ்ப் பிரசுரங்களிற் சில, நமது இராஜாங்கத்தாரால் எடுத்து வெளிப்படுத்தியுள்ள சிலாசாசனங்கள், என்னாற் கண்ட சில சாசனங்கள், செப்பேடுகள் முதலியன இதற்குத் துணையாக நின்று பண்படுத்தின. இவற்றால் இச்சதகத்துக் கதைகள் தெரிந்தன. ஆகலின் கருத்துரை - வரலாறு - மேற்கோள்கள் எழுத ஒருவாறு இயன்றன. 99-வது செய்யுளில் கொங்கு வேள் மாக்கதை என்னும் உதயணன் கதையின் விவரம் குறிக்கப்பட்டுளது என்றாலும் முழு விவரம் தெரியாமையால் ஒன்றும் எழுதவில்லை. தெரிந்தவர்கள் கருணை கூர்ந்து அறிவிக்குமாறு வேண்டுகிறேன்.

செய்யுட்கருத்து, சரித்திரப்போக்கு நாட்டு வழக்கு இவற்றை ஒத்த சாசனங்களிற் சில்வற்றிற்குக் கால அளவை காட்டியும் இடமுடைமை கூட்டியுமிருக்கிறேன். ஆராய்ச்சிக் குறைவால் பிழைபட்டிருப்பின் அறிஞரவற்றை நன்கு விளக்கி ஒப்புமுறையைக் காட்டி மகிழ்விப்பின் நன்றியறிதலுடன் மறுபதிப்பில் திருத்தி வெளிவிடுகிறேன்.

ஒரு நூலைப் பதிப்பிக்குங் காலத்தில் உளவாகுங்காலப் போக்கு, பொருட்செலவு, உழைப்பு முதலியவற்றைக் காட்டிலும், அவற்றைத் தேடுதலினும் பரிசோதித்தல் முதலியவற்றினும் உளவாகுங் காலப்போக்கு முதலியன எத்தனையோ மடங்கு அதிகமென்பது பழயநூலச்சிட்டார்க்கே நன்கு தெரியும்.

இதனை ஆராய்ச்சி செய்து அச்சிடுதலிற் சிறிதும் எனக்குப் பொருட்கவலை உண்டாகாதபடி பழயகோட்டைப் பட்டக்காரர் ஸ்ரீமான் **நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்** அவர்கள் கைம்மாறு கருதாது பேரன்புடன் பொருளுதவி செய்தனர். இவர்களது பெருந்தகைமையும் வண்மையும் வித்தியாபிமானமுமளவிடற்பாலன. இந்நூல் திருத்தமாக விரைவில் வெளிவர வேண்டுமென்று பல வழியிலுந் துணைபுரிந்தவர்களிற் றலைமை பெற்றவர்கள் குட்டைப்

பாளயம் ஸ்ரீமான் - அர்ஜுன கவுண்டரவர்கள். அவ்வப்பொழுது ஆங்காங்கே உதவி செய்த கனவான்கள் :—

ஸ்ரீமான் டாக்டர் P. சுப்பராயன் அவர்கள், M. L. C. திருச்செங்கோடு மிட்டா ஜமீன்தார்

,, S. முத்துசாமிக் கவுண்டரவர்கள், சித்தளந்தூர் மிட்டா ஜமீன்தார்

,, N. இராஜாவுக் கவுண்டரவர்கள், காட்டுபாளயம் மிட்டா ஜமீன்தார்

,, S. சுப்பராய கவுண்டரவர்கள், புத்தூர் மிட்டா ஜமீன்தார்

,, துரைசாமிக் கவுண்டரவர்கள், பூந்துறை மிராசுதார

,, ஆண்டமுத்துக் கவுண்டரவர்கள், அப்பிச்சிமார்மடம்

,, திவான் பஹதூர - காளிங்கராயரவர்கள், ஜமீன்தார் ஊற்றுக்குழி

,, ஜகமண்டலாதிபதி சந்திரகோபண மன்றாடியாரவர்கள், ஜமீன்தார் புரவிபாளயம்

,, வெங்கடசுப்பு வணங்காமுடி வாணவராயரவர்கள், ஜமீன்தார் சமத்தூர்

,, கணபதிக் கவுண்டரவர்கள், மிட்டா ஜமீன்தார் கொக்கராயன்பேட்டை

இந்நூற் பரிசோதனைக்குக் கருவியாக இருந்த பிரதிகள் 6. முற்றுமுள்ளது. அபூர்த்தியானவை 5. அவை வருமாறு :—

| | |
|---|---|
| பழயகோட்டை அரண்மனை சம்பிரதி ஸ்ரீமான் இராமய பிள்ளையவர்கள் பிரதி | 1 |
| சந்தேகவுண்டன்பாளயம் ம-ள-ள-ஸ்ரீ குமாரஸாமிப்புலவரவர்கள் பிரதி | 1 |
| தென்கரை நாட்டுப்பட்டக்காரர் பிரதி | 1 |
| சிலம்ப கவுண்டன் வலசை ம-ள-ள-ஸ்ரீ வேல்மணிப்புலவர் பிரதி | 1 |
| ம-ள-ள ஸ்ரீ பாலசுப்பிரமணிய உபாத்தியாயரால் காங்கேயம் பட்டக்காரர் பிரதி | 1 |
| பூந்துறை ம-ள-ள-ஸ்ரீ பதுமநாப அய்யர் பிரதி | 1 |

இந்நூலைப் போலவே பின் பதிப்பிக்க எண்ணியுள்ள நூல்கள் ஒவ்வொன்றையும் எண்ணிய வண்ணம் நிறைவேற்றுதற்பொருட்டும் பிரதியுதவி, பொருளுதவி முதலியன புரிந்தோர் பெருவாழ்வடையும் பொருட்டும் திருவருள் சுரக்கும்படி எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய இறைவனுடைய திருவடித் தாமரைகளைப் பிரார்த்திக்கின்றேன்.

தி. அ. முத்துசாமிக் கோனார்.

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

---

மஹாமஹோபாத்தியாய
பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாத அய்யரவர்கள்

**விருத்தம்.**

பூமலி புலவர் பிறாக்குவந் தளிக்கும் புண்ணியர் சரித்தா லாய
தூமலி பயனை நன்குதேர்ந் தெங்குந் தூருவியே பலபட வாய்ந்து
பாமலி கொங்கு மண்டல சதகப் பனுவலைப் பதிப்பித்தீந் தனனால்
தேமலி முத்துச் சாமிப் பேர்ப்புலவன் திருச்செங்கோ டுறைதவத் தினனே.

---

மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான்
ஸ்ரீமான் - மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள்

**விருத்தம்.**

தன்பெயரைச் சிவபெருமான் றிருவாக்கா லொருபாக்குத் தலைமை யாக
முன்பெயரு மைப்பாட்டிற் சிறந்தகொங்கு நாட்டினிசை முதிர்செங் கோட்டிற்
பொன்பெயல்செய் மாரியெனக் கவிமழையை மிகப்பொழியும் புலவர் மெச்சுங்
கொன்பெயரா துமையாயர் குலத்துமுத்து சாமிப்பேர் கொண்ட நல்லோன்.

சிலவருடந் தானேயா ராய்ச்சி செய்தும் பலகலையுஞ் சேரக் கற்ற
நலவருடன் கேட்டறிந்துந் தமிழ்த்தெய்வந் துணையாக நாளு நின்று
நிலவருடன் பாற்செயவுங் கிடைத்தகொங்கு மண்டலச்சீர் நீடு நிற்கும்
பலவருடம் போற்பொழியுஞ் சதகநூ லுரைகண்டு படித்துப் பார்த்து.

நாடினைத்து நகரினைத்தந் நாட்டிலவ தரித்துநன் னூல் நலமுற் றோங்கப்
பாடிவைத்த புலவர்தமிழ்ச் சங்கமே வியபுலவர் பாவலோர்க்குத
தேடிவைத்த நிதியளித்த மன்னர்தொகை யினைத்து மற்றைச் சீரினைத்தென
ரூடியுற்ற பொருள்போலக் காட்டுமா றிறுதியிலே யமையச் சேர்த்து.

திரட்டியச்சிற் பதிப்பித்துப் பற்பலபுத் தகங்களாச் செய்து முன்னம்
புரட்டியிராம் நீங்குதற்கு விவேகதிவா காரனைநல்கு முறைபோல் யாரும்
புரட்டிமயங் காவண்ண மெய்யுணரத் தந்தனனிப் புலவர் கோனுக்
கிரட்டியன்பு செய்வதலான் மற்றினியென் கைம்மாறென் றியற்றற் பாற்றே.

திருவாவடுதுறை யாதீன வித்துவானும
மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் சைவ நூற்பரிசோதகருமாகிய
ஸ்ரீமான் - சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்கள்

**விருத்தம்.**

தென்னாட்டுப் புலவரே மிகச்சிறந்த புலவரெனத் தெரிந்து மெச்சிப்
பொன்னூறங் கோடிநிதி யுதவுகொங்கு மண்டலத்தார் பொருந்து மேன்மை
முன்னோன்பாற் செயும் பத்தி நல்லொழுக்க முதற்குணங்கண் முறை விளங்க
வொன்னாரும் மகிழ்சதக முயர்கார்மே கக்கவிஞ ருரைத் திட்டாரால்.

அனையதனை யாய்வோர்க ளகமகிழக் குறிப்புரையொன் றமைத்துச் சேற்றி
வனையுநீ ருலகமெலா முலவவிடுத் தோரெவரேல் வையத்திற் சீர்
புனையுமொரு விவேகதிவா கரனையுநிக் கச்செய்தோர் புலவர் சூழுந்
தனைநிகர்செங் கோட்டுமுத்துச் சாமிகவோ ளூரெனும்பேர் தாம்பெற் றோரே.

---

திண்டுக்கல் முனிசிபல் ஹைஸ்கூல் தமிழ்பபண்டிதர்
ஸ்ரீமான் - கு. வீராசாமி பிள்ளையவர்கள்

**நேரிசை யாசிரியப்பா.**

திங்கள் கங்கைசேர் செஞ்சடை நிமலன்
பொங்கர வணியும் புனிதன் புராந்தகன்
அர்த்த நாரிய னடியவ ருளத்தில்
கர்த்தனாய்த் தோன்றுங் கண்ணுதன் மூர்த்தி
இறைமலை பெற்ற மறைமுதற் செல்வி
யுறையிடப் பாகக் கறைமிடற் றண்ணல்
சங்கு மைந்திணைத் தரையினிற் புனித
கொங்கு மண்டலச் சங்கர னருளால்
ஆயகலை வல்ல வர்த்தா ரிக்கோன்
தூயமா தவத்தாற் றோன்றிடுங் குரிசில்
வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பான்
நிலம்புகழ் சைவ நெறிகண் டேர்ந்தோன்
சைவ சமயா சாரிகள் பதமே
உய்வகை யென்ன உளங்கொளுந் தூயோன்
சந்தமார் கவியைத் தகவுடன் பாடுஞ்
செந்தமிழ்ப் புலவர் சேகர முடையோன்
விதரணக் கதிரை வேலுளர் தேறச்

## சிறப்புப்பாயிரம்

சதாவ தானஞ் சாற்றுநல் லாசான்
மருவுசெங் கோட்டு மான்மிய மன்றிப்
பொருளமை வெஞ்சைப் புராணமு முரைத்தோன்
ஔவையொன் றில்லாக் கண்ணக னுலகில்
ஔவை பாடிய வைவே லசதி
நந்த கோப னுனுயர் மூலர்
முந்து கழுவுள் முன்னெனிர் மரபோன்
மூத்தமி ழுணர்ந்த வித்தகச் செல்வன்
முத்துச் சாமி யெனும்பெயர்ப் பெரியோன்
பிண்டி நீழற் பெம்மா னடியுளங்
கொண்டகார் மேகங் கூறுங் கொங்கு
மண்டல சதகம் வியப்புடைத் தென்று
தண்டமிழ் சுலவுந் தரையெலாந் தேடி
நன்கா ராய்ந்து நயக்கும் பொருளொடு
பன்னலங் கவினப் பண்டிதர் வியப்பப்
பொழிப்புரை யோடு மேற்கோள் புதுக்கி
கழிபெருங் காதலாய்க் கற்பவர் கேட்பவர்
எளிதி னுணர விலக்கணக் குறிப்புடன்
அளியிலளித்தே வச்சிற் பதித்து
நலம்பெற வருளின னுவலர்
பலரும் போற்றிப் பயன்பெறு மாறே.

---

திருசிராப்பள்ளி S. P. G. கல்லூரித் தலைமைக் கணக்காயனார்,
ஸ்ரீமான் - மு. வெங்கடசாமி நாட்டாரவாகள்

### விருத்தம்.

உலகமெலா நிறையறிவின் கருவிருந்த தெனும் பெருமைக் குரிமை சான்ற
அலகில்புகழ்த் தமிழகத்தே யன்பினுக்கோர் நிலைக்களமாங் கொங்கு நாட்டின்
நலமலிசீர் தெரித்துரைக்குஞ் சதகமாந் தமிழ்நூலை நன்கா ராய்ந்து
நிலவுபல மேற்கோளும் வாலாறுந் தோற்றியுரை நிலவச் செய்தே.

பொறியெழுத்து வடிவுகொடு போதருமா புரிவித்தான் புலமை மிக்கான்
மறியழுத்துங் காதலத்தா னடியவரைப் பேணுமுயர் மாட்சியாளன்
நறைபழுத்த தமிழ் வளரச் சைவமலந் தழைத்தோங்க நன்மையான
துறைதெரிந்தே டுவைபூத்தவரு முத்துசா மிப்பெயாகொள் தோன்றல் தானே.

---

கோயமுத்தூர் கவர்ன்மெண்டு காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமான் - அ. கந்தசாமி பிள்ளையவர்கள்

விருத்தம்.

நினைத்த மாத்திரை மனம்புரி பவமெலாம் நீங்கும்
கனைத்த வாக்கினாற் புரிபவந் துதிக்குமுன் கழலும்
தனைத் தடங்கணாற் காணுமுன் உடற்பவந் தணக்கும்
அனைத்த மாண்பின தம்மசெங் குன்றெனு மசலம்.

இம்ம லைக்கணே வழிவழியெம்மை யாளுடைய
அம்மை யப்பனுந் தனிமுதல் அர்த்தநா ரீசன்
எம்மை வல்வாம் வேண்டினும் ஈந்து வீற்றிருக்கும்
கொம்மைமா மதிற் றிருக்கொடி மாடச்செங் குன்றூர்.

இத்த லத்தினன் விவேகதி வாகர னெனும்பேர்ப்
பத்தி ரத்தோடு சைவச மாசமும் பரிப்போன்
மெத்து சேதுப திமகா வேந்தருள் பரிசோன்
முத்து சாமிநா மத்தினன் சரிதநூல் முதல்வன்.

எனை மண்டிலந் தம்மினும் வள்ளலர் புலவர்
மானவீரர்க ளருந்தவர் விம்மித மலிந்த
தான கொங்குமண் டிலசத கத்தினை யாய்ந்து
போன போனபல் விடந்தொறும் புதுவது போற்றி.

ஆண்டு பற்பல வொழிந்த சிலையெழுத் தாதி
வேண்டு சாதன மைதிக மிவையெலா மிகுத்து
யாண்டு மொப்பிலா விளக்கமுங் கூட்டியிங் களித்தான்
ஈண்டு பேருப காரமிஃ தொப்பவே றெதுவே.

---

குமாரமங்கலம் கி. மு. ப. ஆறுமுகம் பிள்ளையவர்கள்



ஆசிரியப்பா.

பூவிரிந் தோங்கப் பூவிரிந் தொளிரும்
காவிரிந் தெங்குங் காவிரி தங்கும்
பருமணி கொழிக்குந் திருமணி முத்தா
நதிவளம் பலவுங் கதிவளங் குலவும்
சீர்தருங் கற்பகத் தார்தரு நிழற்கீழ்
அரசுவீற் றிருக்குஞ் சுரபதி சுரரும்
பொன்னுல கென்ன மண்ணுல குன்னப்

# சிறப்புப்பாயிரம்

பொங்குதண் டலைசூழ் கொங்குமண் டலத்தில்
தலைதனைக் கொடுத்த நிலைபுகழ்க் குமணன்
ஓவா நிலை பெறுஞ் சாவா நிலைதரும்
ஆமல கக்கனி தாமுல குக்கினி
தாகவன் றௌவைக் ககமகிழ் வெய்த
உதவிய வதிக னுயர்நிதி யாளன்
மஞ்ஞை நடிப்ப வளர்குளிர் நடுக்க
மென்ன மயிலுக் கிதய முருகி
போர்வை போர்த்த புகழ்ப்பெரும் பேகன்
எழுகடல் குடித்த விழுமிய குறுமுனி
புகழ்தருங் கொல்லிப் பொருப்பன் வரையாது
வாரிக்கொடுத்த ஓரிப் பெரும்வளல்
புதிய கோட்டைகளெலாம் புகழ் தருமாதி
பழைய கோட்டைப் பதிவளர் கோமான்
தனிமுகற் கவிஞன் தாய்முகேறச்
சேய்முக நோக்கச் சிந்தை மகிழ்ந்த
சாந்தப் பெருங்கடல் சர்க்கரைக் கோமான்
சங்க மருவுஞ் செங்குன் றூர்க்கிழார்
எங்கும் புகழுங் கொங்கு வெளிர்
என்னூலாரு மியாண்டும் வழங்க
நன்னூல் முன்னம் நவில்பவ ணந்தி
முடியாப் பொருள்விரி அடியார்க்கு நல்லார்
பற்பல வீரர் பகர்கொடை யாளர்
விற்பன விவேக விழுமிய மேலோர்
அற்புதமாக வமர்ந்திடுங் கொங்கு
மண்டலசதகம் வரைந்தனன் விஜய
மங்கல மூதூர் வந்தகார் மேகம்
அன்னவான் றமிழ்ப்பொரு ளறிஞர்க டேற
அம்மை யப்ப ராயசெங் குன்றூர்
தன்னில் வந்த சத்திய சற்குணன்
தென்மொழி வடமொழி திகழாந் திரமுதல்
பன்மொழிக் கடலும் பருகும் படரிசை
இலக்கண விலக்கியத் தெழுவாம் பிசைத்தோன்
செப்பிய வாகமத் திப்பிய பொருளும்
சைவ சித்தாந்தத் தெய்வ நன்னூலைக்
கற்றுணர்ந் தடங்கு நற்றவப் பெரியோன்

நங்கோட்டந் தவிர் செங்கோட்டு மான்மியம்
ஞானப் பேரொளி ஞான வியாகரன்
விரிசடைக் கடவுள் விளக்க முற்றிலகு
வெஞ்சமாக் கூடல் மேதகு புராணம்
தெள்ளிய தமிழாற் செப்பிய வள்ளல்
திருவா வடுதுறைத் தேசிகனன்பாய்
வருவாய் நோக்கு மனமகிழ் சீலன்
பூம்பழ னிப்பதி மாம்பழக் கவிஞன்
பன்னாளிருந்து சின்னாளறிந்து
மெச்சின னென்று விருது சில வழங்கும்
கோதுபதி யாதவன் சேதுபதி யாதவன்
தம்முன் னெடுநாள் வம்மினென் றழைத்தே
தள்ளரு நட்பின் சார்புறத் தழுவி
உள்ள நெக்குருக வுரோமஞ் சிலிர்ப்பப்
பேர்பெறும் வரிசைச் சீர்தரப் பெற்றோன்
சதகந் தனக்குச் சாதகமாக
நாற்றிசை மேற்றிசை போற்றிசை பரவ
பற்பல ரறியப் பார்மே விதனை
அற்புதந் தாநல் லஞ்சன மேய்ப்ப
விரிவுரை பதவுரை விளங்கும் பொழிப்புரை
தெளிவுற வோருரை செய்தச் சேற்றினன்
அட்டாவதானத் தரும் புகழ் பெற்ற
வித்தக ஞான விவேகமார்
முத்தமிழ் முத்துச் சாமிமொய் தவனே.

---

‘ நவசக்தி ” ஆசிரியர்

ஸ்ரீமான் - திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள்

**விருத்தம்**

மக்கடமை முதலளித்த மாண்புடைய தமிழ்நாட்டில் மன்னு நாடு
மிக்கமலை புனல்வளமும் வேளாளர் மெய்வளமும் மேவு நாடு
எக்கலையு முறைநாடென் றிசைப்புலவர் திருக்கூட்ட மெய்து நாடு
குக்குடத்தான் கோயிலொடு குழைக்காதன் கோயில்கொளுங் கொங்கு நாடு. (க)

இந்நாட்டி னறிவொழுக்க மேந்நிலையா ரறவொழுக்க மீகை யீரம்
மன்னாட்டுப் படைமிடையும் வள்ளன்மார் கொடைமடமும் மறவோர் வீரம்
சொன்னாட்டுப் புலவருரை துகளறுத்தோர் நிறையுரையும் துலங்கு மற்றப்
பன்னாட்டத் துறைப்பரப்பில் படிந்துமுகந் துளங்கொண்டு பரிவா லம்மா. (௨)

பார்மீது சதகமெனப் பைந்தமிழ்நூல் பலகற்ற பயனா லென்றும்
ஓர்மூன்று குடையுடையான் அடியுடையான் உளசமய மொன்றும் நோவாச்
சீர்மேவிச் சினங்கடிந்து செம்மையறம் வளர்த்துநலஞ் சிறந்த கோமான்
கார்மேகங் கவிமேக மெனப்பொழிந்த கவித்துறையின் கவின்றா னென்னே. (௩)

கார்பொழிந்த கவிநீருங் கவித்தோடக் கால்கோலிக் கருத்தி லாழ்ந்து
தேர்புலவ ராராய்ந்து திரிபறுக்கக் காட்டுகளுந் தேடிக் கூட்டி
ஊர்பலவு மாண்டுகளா யோடியுழைத் துரைகண்டே யூன்று மச்சுத்
தேர்புகுத்தித் தமிழருக்குச் சிறப்பாக விருந்தளித்த செல்வன் யாரே. (௪)

வெங்கோட்டச் சூர்கடிந்த வேற்கரத்தன் திருவருட்கு வைப்பா யுள்ள
செங்கோட்டுப் பதிவந்தோன் திருமூலர் குலத்துதித்தோன் சேரஞ் ஞானம்
இங்கோட்டு நூலாய்ந்து மியனூல்கள் பலயாத்து மெந்தை வேளைப்
பைங்கோட்டு மலர்கொண்டு பணிமுத்துச் சாமியெனும் பாவல் லோனே. (௫)



உ

விநாயகன் றுணை

# நூலாசிரியர் வரலாறு



"மலரவன் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவனும் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு."

கொங்குமண்டலத்திலே குறுப்பு நாட்டிலே விஜயமங்கலம் என்னும் ஊரிலே ஸ்ரீ வத்ஸகோத்திரம், ஔபாக்கிய சூத்திரம் விருத்தானிய யோகசாகை காசிபப்பிரவரமான ஜைனப் பிராமண குலத்திலே பதுமநாப அய்யர் என்பார் ஒருவர் இருந்தார். அவர் அவ்வூரில் எழுந்தருளியுள்ள (ஜைன) ஸ்ரீ சந்திரப்பிரப தீர்த்தங்கரர் ஆலய பூஜை செய்து வரும் பரம்பரையினர். அவருக்கு அருமையாகப் பிறந்த ஆண் குழந்தைக்கு ஜினேந்திரன் எனப் பிள்ளைத் திருப்பெயரிட்டு வளர்த்து வந்தனர். தந்தையாரிடத்து அச்சிறுவன் வடமொழி தென்மொழி பயின்றுர். இருமுறை படித்தல் அல்லது கேட்டலால் எவ்வளவு வன்மையான செய்யுளும் பாடமாய் விடும் தான் கற்கும் நூல்களில் ஐயவினு வினவினுல், நீளநினைந்து பண்டிதர்கள் விடைகூற வேண்டி வரும். ஆனல் மிகுந்த தாழ்மையுங் கேண்மையும் வாய்மையுமாகப் பேசுவர். இவ்வாறு மிக்க புத்தி கூர்மையும் நேர்மையுமாய்க் கேட்போர் உவக்குமாறு மாதுரிய சாதுரியமாகப் பேசும் இயல்பு வாய்ந்து வந்தார், நெருங்கிய பங்காளிகள் வாழ்ந்துள்ள பூந்துறைக்கு வந்தார். இவரது கல்வி நலனை அறியுமாறு அவ்வூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீபாரிச தீர்த்தங்கரர் பரமாக ஒரு வெண்பாக் கூறுமாறு அவ்வாலய பூஜகர் வினவினர்.

"பச்சை மணிவடிவாய்ப் பாரில்விசுவ சேனனுக
மெச்சு மகவாய் வெளிவந்த—உச்சிதனும்
பாரிச நாதன் பதநினைந்தோர் வாழ்வரே
சீரிசைநா லின்பஞ் சிறந்து."

என மனனஞ் செய்துள்ளார் போல விரைவாகக் கூறினர். இதிற் சமய உணர்ச்சி மிக்குப் பொதிந்து கிடத்தலைக் கேட்ட அங்குள்ளார் மனங் களித்தார்கள். சைவ முதலிய வேனைய சமயநூல் ஆராய்ச்சியை உணர்தல் கருதி, ஸ்ரீ சுப்பிரமணியர்மீது ஒரு செய்யுள் கூறுமாறு வேண்டினர்.

"ஆறு விழியிலுறு மாறுபொறி நீர்க்கரையில்
ஆறுமக வாயொன்றா யன்னைசத்தி—வீறுகொடு
ஆறுபடை வீடுற் றசுரரறத் தேவர்தொழும்
ஆறுமுக னம்மையளிப் பான்."

என மனக்களிவால் மகிழ்ச்சி ததும்பப் புகன்றனர். இளவயதிற் பொருட் செறிவான கவிகளாய் விரைவிற் கூறும் வன்மையோடு சமயப் பொறுமை இருத்தலுங் கண்டு சந்தோஷித்தார்கள். பின்னர் இவரது அன்னையை ஈன்றோர் வசித்துள்ள சேது சமஸ்தானத்தைச் சார்ந்த அநுமந்தக்குடிக்குச் சென்று ஆருகத சமய நூல் முறையோடு கற்றுப் பின்பு பாண்டிநாடு, சோழநாடு, தொண்டை நாடுகளிற் சைவ முதலிய மற்றச் சமய நூல்களும் கருவி நூல்களுஞ் செவ்வனே அறிந்தும் பிறர்க்கு எடுத்துரைத்தும், அங்கங்கு உள்ள சமஸ்தானங்களில் பிரசங்க மாரி பொழிந்தும் வந்தனர். இடைவிடாது பெருமுழக்காகச் சொரியுஞ் சொன்மாரி கவிமாரிகளை நோக்கிய செந்தமிழ்வல்லார் இவரைக் **கார்மேகம்** என்றழைத்தனர், அதுமுதல் இவருக்குக் **கார்மேகக் கவிஞர்** எனப் பெயராயிற்று. இளமைக் காலத்தே கவி சொல்லல், பொருள் கூறல், பிரசங்கித்தலான வன்மை வாய்ந்து நாற்றிசையுமுள்ள கல்விமான்களைக் கண்டு பழகி விஜயமங்கலம் வந்துசேர்ந்தனர். அப்பொழுது இவருக்கு வயது இருபது இருக்கலாம். பின்னர் மைசூரைச் சார்ந்த கொல்லாபுரத்தில் **சாந்தம்** என்னுங் கன்னிகையை விவாகஞ் செய்வித்தார்கள். வேட்டகத்தே சில நாள் வசிக்க நேர்ந்தது. அப்பால் விஜயமங்கலம் வந்து சேர்ந்தனர். நாம் தோற்றிய இக்கொங்குமண்டலத் தேற்றமிகத் தோற்ற ஒரு சிறு நூல் சாற்ற வேண்டுமென் றெண்ணினார். சங்க நூல்களிலும் இதிகாசங்களிலுங் காணப்படுவதைக் குறித்துக் கொண்டார். ஒவ்வொரு நாடுகளுக்குஞ் சென்றார். அங்கங்குள்ள சமஸ்தானங்களைக் கண்டும், செந்தமிழ்ப் புலவர்களையுந் தலவாசிகளையுஞ் சந்தித்து அளவளாவிப் பழஞ் சரித்திரங்களை வினவி அறிந்தனர். சென்ற இடங்களில் பிரசங்கங்களால் உவப்பிப்பர். கேட்ட வினாவிற் கேற்ற பொருளமைத்துக் கவி கூறி மகிழ்விப்பர். இவ்வாறு கொங்குமண்டல மெல்லாஞ் சுற்றிப் பார்த்து நுணுகி ஆராய்ந்து அறிந்த சரிதங்களைத் திரட்டி கொங்குமண்டல சதகம் என இந்நூலியற்றினர். இதன் உட்பொருள்களை ஆய்ந்தோர் கொண்டாடினர் என்பர்.

இதைத் தவிர வேறு நூல்கள் இவர் இயற்றியுள்ளதாக இதுவரைத் தெரியவில்லை. அவ்வவ்வமயங்களிற் கூறிய சில செய்யுட்கள் கிடைத்தன.

### க்ஷத்திரியனுக்கும் நாவிதனுக்கும் சிலேடை

**முடிவாங்கி வைத்து முதுமங் கலஞ்செய்**
**வடிகத்தி யத்த மருவி—படிபுகழச்**
சத்திரம்வைத் துள்ள தராதரா மாயாகேள்
க்ஷத்திரிய னோர்நாவி தன்.

### ஓலைச் சுவடிக்கும் ஒணானுக்கும்

வரிகள் கடுமையாய் வல்லவரை யுற்று
பெரியதலை கால்கொம்பைப் பெற்று—மருவுதலால்
கோணுமே லேயுதவு கொப்பணவே ளேசுவடி
யோணுநே ராமென் றுணர்.

நீர்ப்பாசன நன்னில நிதியம் நேருஞ் சாவு வாழ்வுகளிற்
பார்ப்பார்க் களித்தோர் பேறெங்கே பார்த்தோம் புலவர்க் கிழிபழங்கூழ்
வார்ப்பா ரேனும் பூமியுள வரையும் புகழ்ச்சி யோங்குமெனும்
நேர்ப்பாக் கற்றோர்க் குதவுதமிழ் நேயாவாணூர்ச் சர்க்கரையே.

வீமண மளாவுசிறு காலறுகா லுழுதாது மென்றுாட்டுவ
வீமணவி மூவிழைபூம் பொழிறிகழுஞ் செங்கோட்டின் மேவிவீர
வீமணவோ வணனருளாற் பகைநூறி நிமிடகவி விளம்பவல்ல
வீமணநா வலநினது சல்லாப மொழிபழுது விரும்பினேனே.

### திருச்செங்கோடு வீமணக் கவிராயர் கூறியது

தலையவிடா மறை யொளித்த பேட்டடியிற் சூட்டணந்தன் றலைகீழாக
வலையவணங் கப்புலவி நீங்குவன வடல்விஜய மங்கை யோங்கு
இலையசந் திரப்பிரப நாயகரை யேத்துமனத றிடரை யெல்லாம்
கலையவரு கார்மேகக் கவியரசே வந்தனனிற் காண வென்றே.

### இவர் மதம்—சமணம்

காலம்—இந்நூலுட் கூறும் படிககாசுத் தம்பிரான், தளவாய் ராமப்பய்யர் முறையே கி. பி. 1699 - 1672-ல் இருந்தவர்களானதால், இவர்களை பாடிய இவா இற்றைக்கு 220 வருஷங்களுக்குப் பிற்காலத்தவராகக கருதப்படுகிறார்.

துந்துபிஸு மார்கழிமீ 12உ
திருச்செங்கோடு.

தி அ. முத்துசாமிக்கோனர்.

## கொங்குமண்டல சதகச்
## செய்யுளகராதியும், அவற்றுள்ள விஷயங்களும்.

| பாட்டு முதற் குறிப்பு | விஷயம் | பக்கம் | பாட்டு |
|---|---|---|---|
| குலசேகரன் | ஆதிசைவர் | 61 | 55 |
| கையாரக்கான | வையாவிக்கோபபெரும்பேகன் | 45 | 44 |
| கொடையிற் பெரியோய் | ஆணூர்ச் சர்க்கரை | 80 | 67 |
| கொல்லியும் | மலைகள் | 7 | 5 |
| கொற்றையில் | வேணுவுடையார் | 116 | 94 |
| சங்ககிரி துரு | சர்க்கரை தாலிகொடுத்தது | 78 | 66 |
| சங்கிராம | பல்லவராயன் சிறுவன் | 90 | 73 |
| சாதலை நீக்கு | அதிகமான் | 42 | 42 |
| சிவனேபரம் | இராமாநுஜர் | 82 | 68 |
| சீராரர்வளவ | காவிரி உற்பத்தி | 8 | 8 |
| செஞ்சொற்கறைசை | தலங்கள் | 7 | 4 |
| செய்தவ | கபிலதேவர் | 73 | 62 |
| சொல்காப்பிய | சீயகங்கன் | 47 | 46 |
| சொல்லிக்கலைய | உலகுடையான் | 99 | 82 |
| சொற்றவருதோர் | முத்தரசர் | 39 | 39 |
| தவநித | அவநிதன் | 123 | 100 |
| தாணுமுலகி | கொல்லிப்பாவை | 23 | 25 |
| திரிபுவனச் | மும்முடிப்பல்லவராயன் | 89 | 72 |
| திருத்தகு | நூலாசிரியர் | 4 | 3 |
| திருமணி | நதிகள் | 7 | 6 |
| திருக்கூட்டத்தா | ஞானசம்பந்தர் | 50 | 48 |
| திருத்துபுகழ் | ஆணூர்ச் சர்க்கரை | 53 | 51 |
| தீத்திகழ்மேனி | பழனி | 19 | 22 |
| தூன்னுமறை | ஆட்கொண்டான் | 32 | 32 |
| தெய்விகமான | அசதி | 46 | 45 |
| தென்பாண்டி | கோபணமன்றுடி | 69 | 59 |
| தேசுற்றிலகு | பூந்துறைக்குப்பிச்சி | 64 | 56 |
| தொங்கவைத்துள்ள | வாணராயன் | 118 | 96 |
| தொல்லுலக | செய்யான் பல்லவராய | 115 | 93 |
| தோற்றிய | கொங்கணர் | 37 | 37 |
| நதிசூடும் | எறிபத்தர் | 24 | 27 |
| நந்துபடித் | திருப்பாண்டிக்கொடிமுடி | 11 | 12 |
| நல்லார் புகழ் | பசக்காளி மன்றுடி | 103 | 85 |
| நறைவயல் | நந்திக்கு மறுமுகம் | 16 | 19 |
| நாட்டினைக் | குமணன் | 41 | 41 |
| நாலாகலை | நாடுகள் | 6 | 3 |
| நிலவுல | [illegible] | 25 | 28 |
| நீடுந்தமிழ் | [illegible] | 8 | 7 |

 செய்யுளகராதியும் அவற்றுள்ள விஷயங்களும்

# இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள்.

அகநானூறு
அசதிக்கோவை
அமரவிடங்கர் குறவஞ்சி
அத்துவித வெண்பா
அப்பிரமேயதலபுராணம்
அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்
அவிநாசிகவுண்டன் வண்டுவிடு தூது
அவிநாசிப்புராணம்
ஆசிரிய நிகண்டு
இரட்டையா பாடல்
இருப்புலிப்பள்ளு
இலக்கண சூத்திரம்
உதயணன் கதை
உரிச்சொல் நிகண்டு
ஐங்குறு நூறு
கந்தப்புராணம்
கம்பர் கவி
கம்பராமாயணம்
கரபுராநாதர் புராணம
கருவூர்ப்புராணம்
கவானர்; பெண்ட்லண்டு லெட்டர்
குமண சரித்திரம்
குறுந்தொகை
கொடுமுடிப்புராணம்
கோபணமன்றாடிகோவை
சங்கற்ப நிராகரணம்
சம்பந்தர் தேவாரம
சித்திரமடல்
சிறுபாணாற்றுப்படை
சித்தாண்டீசுரர் மோகனிமாலை
சிந்தாமணி
சிலப்பதிகாரம்
சிவஞானபோதம்
சிவபெருமான் திருவந்தாதி
சுந்தரமூர்த்தி தேவாரம்
சுப்பிரமணியர் பாசுரம்
தக்கராமாயணம்
தமிழறியும் பெருமாள் கதை
தனிப்பாடல்கள்
திருச்செங்கோட்டுப் புராணம்
திருப்பணிமாலை
திருச்செங்கோட்டுக் குறவஞ்சி
திருத்தொண்டர் புராணம்
திருமந்திரம்
திருவள்ளுவமாலை
திருப்புகழ்
திருவாவடுதுறைப்புராணம்
திவாசகம்
திருவானைக்காப் புராணம்
திருமுருகாற்றுப்படை
திருமுறைகண்டபுராணம்
துடிசைப்புராணம்
தொண்டைமண்டலசதகம்
தொல்காப்பியம்
நந்தமண்டலசதகம்
நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி
நல்லதம்பிச் சாக்கரை காதல்
நற்றிணை
நன்னூல்
நாலடி
நாவலர் சரிதை
நீதிநூற் சிறப்புப்பாயிரம்
நெடுஞ்சடையன் மெய்க்கீர்த்தி
பதிற்றுப்பத்து
பவானித்தல புராணம்
பழமொழி
பழனிப்புராணம்
பாம்பண கவுண்டன் குறவஞ்சி
பாரதம்
பிரபந்நாமிருதம் (வடமொழி)
புலிப்பாணிப்பலதிரட்டு
புறநானூறு
பெரிய புராணம்
பேரூர்ப்புராணம்
பொருநாற்றுப்படை
மங்கலவாழ்த்து
மதுரைக்காஞ்சி
மலைபடுகடாம்
மருத்துவ சாஸ்திரம்
முளசையார் மெய்க்கீர்த்தி
வெஞ்சமாக்கூடற்புராணம்
வேம்பத்தூரார் திருவிளையாடல்

## இதில் எடுத்துக்காட்டியுள்ள சிலாசாசனங்கள்.

சிவமயம்.

# கொங்குமண்டல சதக உரையாசிரியர் இயற்றியன.

## விநாயகர் காப்பு.

கலிவிருத்தம்.

பொற்பு நீடு புரிசடை யத்தனா
கற்பு நீடு கனிமனைந் தீன்றவோ
வெற்பு நீடு மிளிர்களிற் றின்சரண்
அற்பு நீடு மகத்து ணிறுத்துவாம்.

## அர்த்தநாரீச்சுரர் துதி.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

எல்லாப் பொருளுந் தானுகி யெதினும் பொருந்தா திசைகருமறைச
சொல்லாய்ப் பொருளாய்ச் சொலாநிலையாய்த் துரிசற் றவர்த மனத்தி
னில்லாப் பிழம்பா யிருசாய னிலவி யமுதி னொருவடிவாய் [னன்றி
நல்லா ளிடத்து விளங்குமர்த்த நாரிப்பரனை வணங்குவமால்.

## சுப்பிரமணியர் துதி.

வேறு.

ஒழுக்கமே விழுப்ப மேலா முணர்ச்சியு மில்லாப் பொல்லாப
புழுத்தநா யனைய ரேனும் புண்ணியா முருகா வென்று
வழுத்துவோர் துயர மேக வான்மழை பொழிதன் மான
பழுத்தநல் வரத்தை யூற்றும் பணிகிரி குகனை யுள்வாம்.

## அவையடக்கம்

எண்சீரடியாசிரியவிருத்தம்.

அரவிந்தத் தடததுதித்து மதின்வசித்து மதனி
னலர்ந்தமலர்த தேன்சுவைசற றறியாத்த வளைபோற
பரவிந்தக் கொங்குமண் டலததுதித்தும் வசித்தும
பழகுவனு யினுமதன்றன் பழஞ்சரித மோரேன்
திருவிந்தை யிலகுமிம்மண் டலசதகத் தினுக்கோர்
சிற்றுரையு மேற்கோளுந் தேர்ந்தவர லாறுந்
தரவந்த வென்றுணிவுக் கியாவர்களே யிகழ்வார்
தன்னூரி னபிமானந் தணந்தவரு மிலரே.



விநாயகன் றுணை.

# கொங்குமண்டல சதக

## மூலமும் உரையும்.

---

### பாயிரம்.

#### காப்பு.

அறுசீரடியாசிரியவிருத்தம்

பூமலி செம்ம னத்தார் புரிவினைக் கிடா கற்றி
நாமலி தீம னத்தார் நசைவினைக் கிடரி யற்றிக்
கோமலி யுருவ மூன்று கூறிரு திணைபொ ருந்தித்
தேமலி மருப்பொன் றேந்து தேவனைப் பணிகு வோமால்.

(**கருத்துரை**) நல்ல மனமுடையார் தொடங்கிய செயல்களுக்கு நேரும் இடையூறுகளை நீக்கியும், அச்சமான கொடிய உள்ளத்தினர் ஆசை கொள்ளுந் தொழில்களுக்குத் தடையுண்டாக்கியும், மேன்மையுள்ள (பூதக்கால் - தெய்வ உடல் - யானைத்தலை) மூவகை வடிவில் (அஃறிணை - உயர்திணை) இருதிணை பொருந்தி ஒற்றைக் கொம்பாக விளங்கும் மூத்த பிள்ளையாரை வணங்குவாம் என்பதாம்.

(மேற்கோள்) என்னரே யாயினும் யாவதோன் றெண்ணுதல்
முன்னரே யுனதுதாண் முடியுறப் பணிவரேல்
அன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுவன
யுன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ.—(கந்தப்புராணம்.)

மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்பெண்மை
வடிவென்று மஃதின்மையோர்
மருங்குண்மை யாலாண்மை வடிவென்று மீதுகீழ்
மாறிய திருக்காட்சியால்
அணிகொண்ட உயர்திணைய தென்றுமஃறிணை யென்றும்
யார்க்குமு கிளர்க்கவரிதாம்
ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரண
மஞ்சலித்துத் துதிப்பாம்......—(அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்.)

பாச மங்குசந் தேசுறு மெயிரேண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதங் கடகம் பொங்கிழை யார
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே. —(சங்கற்ப நிராகரணம்.)

## அவையடக்கம்.

### வேறு.

கடல்சூழ் புவியிற் கண்டமற் றாங் கானுஞ் சுவரிற் கீறிமகிழ்
மடமார் சிறுவர் போற்கொங்கு வளமுஞ் சீரு மோராதேன் [திண்
திடமாய் வினவி நோக்கியிசை தெளிவோர் முன்னிம் மண்டலத்
தடைவாங் கதைகள் பொதிசதக மாக்கி லறிஞ ரிகழாரே.

(ப - ரை) சமுத்திரம் வளைந்த விரிந்த பூமியிலுள்ள, கண்டங்கள் தீவுகள் முதலிய பிரிவுகளை, நிற்குஞ் சுவரில் கோடிட்டு எழுதிக் களிக்கின்ற அறியாச் சிறுவர்களைப்போலக், கொங்குமண்டலத்தின் வளமும் சிறப்பும் அறியாதவனாகிய எளியேன் (அவற்றை) நன்றாகக்கேட்டுப் பார்த்துச் சொல்ல வல்லார்முன் அக் கொங்கு மண்டலத்தின் முறையான கதைகளடங்கிய சதகம் என்னும் பிரபந்தத்தை இயற்றுவேனேல் (அதைக்) தவறு என்று விவேகிகள் இகழமாட்டார்கள் என்பதாம். (உ)

(மேற்) அறையு மாடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ. —(கம்பராமாயணம்.)

## ஆக்கியோன்

திருத்தகு சரித மாய்ந்து தேர்பவர் தமக்குச் சற்றம்
வருத்தமி லாது கொங்கு மண்டல சதகஞ் சொன்னான்
வரிக்குயில் கூவும் பிண்டி மரத்துமுக் குடைக்கீழ் நின்ற
கருத்தனைக் கருத்து ளுன்னுங் கார்மேகக் கவிஞன் றானே.

(க - ரை) வரியையுடைய குயில்கள் கூவுகின்ற அசோகினடியில் மூன்று குடைகள் நிழலைச்செய்ய வீற்றிருந்தருளும் அருகதேவனைச் சிந்தியாநின்ற கார்மேகக் கவிஞன், கொங்கு மண்டலத்தின் சிறந்த சரிதங்களைத் தெரிந்து கொள்வாருக்கு வருத்தம் நேராதபடி எளிதாகக் கொங்கு மண்டல சதகம் என்னும் நூலைச் சொன்னான் என்பதாம். (ங)

மாவிலிருக்குங் குயிலை அசோகிலிருப்பதாகக் கூறப்பட்டது, மாவும் அசோகும் மன்மதனுக்குக் கணையாக மலரைக் கொடுத்தலானும், மாதர்கள் மேனிக்கு அசோகந்தளிர் மாந்தளிரையே கூறுதலானும் இவையிரண்டும் ஒருங்கே வசந்த காலத்தின் கண்ணே தளிர்விடுதலானும் அக்காலத்திற் றளிரைக் கோதித் தின்றல் குயிலுக்கு இயற்கையாதலால் இதனிடத்துந் தங்கியிருத்தல் கூறலாமெனக.

(மேற்) முழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல்
வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினங்
குழாத்தொடு மிரைகொளக் குளிர்ந்து கூங்குயில்
விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே. —(சிந்தாமணி.)

பாயிர முற்றிற்று.

---

## நூல்.

---

### நாடு.

*கட்டளைக் கலித்துறை.*

பொற்பு மிகுகொங்கு நாடு செழித்திடப் பூமியெங்கும்
நற்பய னுற்றுச் சுகித்திடு மென்ன நவிற்றபழஞ்
சொற்பெற வெல்லா வளமும் பொருந்திச் சுரபியொடு
வற்சக மோங்கி வளர்வதன் றேகொங்கு மண்டலமே.

(க - ரை) பொலிவு மிகுந்த "கொங்குநாடு செழித்தால் இப்புவியிலுள்ள எந்நாடும் நல்ல பலனைப் பெற்றுச் சுகம் அடையு" மென்று சொல்கின்ற பழமொழிக்கு இணங்க மாடு கன்றுகள் விருத்திகொண்டது கொங்குமண்டலம் என்பதாம். (க)

(மேற்) "கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்"—(ஒரு பழமொழி.)

எல்லை.

மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழனி மதிகுடக்குக்
கதித்துள வெள்ளி மலைபெரும் பாலை கவின்வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்று மேவிவிண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு சீர்கொங்கு மண்டலமே.

(க - ரை) கிழக்கில் மதிற் (கோட்டைக்) கரையும், தெற்கில் பழநியும், மேற்கில் வெள்ளியங்கிரியும், வடக்கில் பெரும்பாலையும் நான்கு திக்கின் எல்லையாகக் கொண்டு வளப்பம் பொருந்தித் தேவர்களுந் தங்கியுள்ளது கொங்கு மண்டல மென்பதாம். (உ)

வெண்பா.

வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்குக்
குடக்குப் பொறுப்புவெள்ளிக் குன்று—கிடக்கும்
களித்தண் டலைமேவு காவிரிசூழ் நாட்டுக்
குளித்தண் டலையளவு கொங்கு.

நாடு - இணைநாடு.

நாலா கலையலை வாரிதி மாந்தி நயம்பொருந்தத்
தோலா மொழிக டிகழ்நா வலரென் றுஞ் சுகம்பொருந்த
நாலாறு நாடு மிணைநாட்டுங் குஞ்சரி நாதனுடன்
மாலால கண்ட ரமர்பதி சேர்கொங்கு மண்டலமே.

(க - ரை) பலகலைக் கடலையுண்டு சுவையுடைத்தாய்த் தோல்வி பெறாது பேசவல்ல நாவலர்கள் எந்நாளும் இன்பம் நிறைந்து வாழும் இருபத்து நான்கு நாடுகளிலும் அவற்றைச் சூழ்ந்த இணைநாடுகளிலும் முருகவேள் கோயிலும், திருமால் கோயிலும், சிவாலயங்களும் நிறைந்துள்ளது கொங்குமண்டலம் என்பதாம்.

நாடுகள்.

| | | |
|---|---|---|
| பூந்துறை நாடு | தலையநாடு | வாழவந்தி நாடு |
| தென்கரை நாடு | தட்டயநாடு | அண்ட நாடு |
| காங்கேய நாடு | பூவாணிய நாடு | வெங்கால நாடு |
| பொன்கலூர் நாடு | அரையநாடு | காவடிக்கநாடு |
| ஆறை நாடு | ஒருவங்க நாடு | ஆனைமலை நாடு |
| வாரக்கநாடு | வடகரை நாடு | இராசிபுர நாடு |
| திருவாவினன்குடி நாடு | கிழங்கு நாடு | காஞ்சிக்கோயினாடு |
| மணநாடு | நல்லுருக்கநாடு | குறும்பு நாடு. |

இணை நாடுகள்.

| | | |
|---|---|---|
| பருத்திப்பள்ளி நாடு | விமலை நாடு | சேல நாடு |
| ஏழூர் நாடு | தூசூர் நாடு | இடைப்பிச்சநாடு முதலியன. |

* வடக்குத்தலை மலையாம் என்று பாடபேதமுண்டு.

வடகொங்குக்குப் பெரும்பாலையும், மேல்கொங்குக்குத் தலைமலையும் வடக்கெல்லையாக இருத்தலின் இவ்வித பாடபேதம் ஏற்பட்டிருக்கிறது.

## தலம்.

செஞ்சொற் கரைசை திருவானி கூடல் திருமுருகர்
தஞ்சத்தென் புக்கொளி *பேரூர் குரக்குத் தளியுடனே
வெஞ்சனற் கூடல்செங் குன்றா ரறப்பளி வெண்ணெய்மலை
மஞ்சு திகழ்கரு வூர்சேர் வதுகொங்கு மண்டலமே.

(க - ரை) திருப்பாண்டிக கொடிமுடி, பவானி, திருமுருகன் பூண்டி, அவிநாசி,*பேரூர், குரக்குத்தளி, வெஞ்சமாக்கூடல், திருச்செங்கோடு, அறப்பள்ளி, வெண்ணெய்மலை, கரூர் முதலிய திருப்பதிகள் சேர்வது கொங்குமண்டலம் என்பதாம். (௧)

## மலை.

கொல்லியும வைகை யலைவாய் பழநிபொற் கொங்கணவா
†வில்லியு மோதி வராகந் தலைமலை வெணணெய்மலை
அல்லியை சென்னி கிரிகஞ்ச வெள்ளி யரவகிரி
வல்லியு ளானை மலைசூழ் வதுகொங்கு மண்டலமே.

(க - ரை) கொல்லிமலை - வைகைப் பொன்மலை - அலைவாய்மலை - பழநி மலை - பொன்னூதிமலை - கொங்கணவர் மலை - சேர்வராயன்மலை - ஓதியூர்மலை - வராகமலை - தலைமலை - வெண்ணெய்மலை, சென்னிமலை - கஞ்சமலை - வெள்ளி மலை - நாககிரி - ஆனைமலை சூழ்வது கொங்குமண்டலம் என்பதாம். (௨)

## நதி.

திருமணி தொப்பைபூங் காவேரி வானியுஞ் செய்யநதி
தருமணி காஞ்சி பொருனைநள ளாறொடு சணமுகமுங
குருமணி பாலை நதிவாழை ‡ காரி குடவனதி
வருமணி சண்பகஞ் சிற்றாறு சூழ்கொங்கு மண்டலமே

---

*பேரூர், குரக்குத்தளி-அறப்பள்ளி-தேவாரவைப்புத்தலங்கள். வெண்ணெய் மலை திருப்புகழ் பெற்றது.

† வில்லி - சேரன் = சேர்வராயன் மலை.

‡ காரியாறு - கரிச்சுருவி = பாரத்துவாசம்.

(க - ரை) திருமணிமுத்தாறு - தொப்பையாறு - பவானியாறு - செய்யாறு - நொய்யலாறு - ஆம்பிராவதி - நள்ளாறு - சண்முகநதி - பாலையாறு - வாழையாறு * பாரத்துவாசநதி - குடவனாறு-சண்பகநதி - சிற்றாறு சூழ்ந்துள்ளது கொங்குமண்டலம் என்பதாம். (சு)

## குடிவளம்

நீடுந் தமிழ்மன்னர் மூவர்க்கு மம்பொனெடுமகுடஞ்
சூடும் பெருமை படைத்துயர் மக்களின் சோர் வகற்றிக்
கூடும் பலவுண வூட்டுவே ளாளக் குடிசிறந்து
மாடும் பெருகி வளர்வதன் றோகொங்கு மண்டலமே.

(சு - ரை) சேர சோழ பாண்டியா என்னும் தமிழ் வேந்தா மூவாக்கும் மகுடஞ் சூடும் பெருமையை அடைந்து, எல்லா உயிர்க்கும் உழவுத்தொழிலாற் பல உணவுப் பொருள்களை யுண்டாக்கி ஊட்டி வளர்க்கும், வேளாண்மைக்குடிச்சிறப் புற்றுப் பசு முதலியன நன்கு வளர்ச்சியுறுவது கொங்கு மண்டலம் என்பதாம்.(எ)

* * *

(மேற்) புலிக்கொடி கயற்கொடி பொருவிற் கொடியுடை
வேந்தர் நாட்டுறை வேளாண் மாக்கள்
சோழியரென்றும் பாண்டியரென்றுங்
கொங்கரென் றும்பெயர் கொண்டன ரவருள்.

* * *

முன்னமுரைத்த முத்தமிழ் வேந்தரும்
எங்கள்மு வருக்கு மியன்முடி சூட்டுதற்
குங்கள யமைத்தன முயர்ந்து கொள்வீரெனக்
கொண்டு மகிழ்ந் தவனையார் கோத்தன்மையரோ.

* * *

--(நீதிநூற் சிறப்புப்பாயிரம்-மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை)

## காவிரி உற்பத்தி.

சீரார் வளைவ னிலம்புன லூடாச் செழிப்புறவும்
போரார் வாநதி பெய்துறு பாவம் பிரிந்திறவும்
ஏராரும் பொன்னி புவியுள முன்ன குடமுநவி
வாரார் பெருமை படைத்தது நீள்கொங்கு மண்டலமே.

(க - ரை) சோழமண்டலம் நீர்ப்பாசனமாகவுங், கங்கை நதி தனது பாவங்களை நீக்கிக்கொள்ளவும் வாய்த்தது காவேரி நதி. அந்தக் காவேரி அகத்திய முனிவர் கைக்கரகத்திருந்து தரையில் விழுதற்கு முதலில் இடங்கொடுத் துதவியது கொங்குமண்டலம் என்பதாம். (அ)

வரலாறு:— பார்வதி தேவியார் திருமண நாளில் தேவர் முதல் யாவர்களும் மேருமலையில் ஒருங்கு சேர்ந்தார்கள். சுமையேறிய வடதிசை அழுந்தியது. தென்புவி மேலெழுந்தது. பூமி மட்டமாகுமாறு அகத்தியரைத் தென் மலையான பொதியையிற் போயிருக்கச் சிவபிரான் கட்டளையிட்டனர். தமிழ்த் தேர்ச்சியுற்று அகத்தியர் காவிரி நதியைக் கைக்கமண்டலத்தில் அடக்கிக் கொண்டு கொங்கு நாடடைந்தனர். சூரபதுமன் முதலினோர் துன்பத்துக்கு ஆற்றாத இந்திரன், வேற்றுருவங் கொண்டு சீகாழிப்பதியில் நந்தனவனத் திருப்பணி செய்து கொண்டிருந்தனன். நீர் இன்றிச் செடிகள் காய்ந்தமை கண்டு வருத்த முற்று ஆனைமுகப் பிள்ளையாரை வேண்டினன். வெண் காக்கை வடிவு கொண்ட விநாயகர், அகத்திய முனி நிலத்தில் வைத்திருந்த கமண்டலத்தைக் கவிழ்த்தனர். உள்ளடங்கியிருந்த காவேரி நதி நிலத்திற்பட்டுப் பெருக்கெடுத்துச் சீகாழி வழிச் சென்றது.

(மேற்) கோங்குறு முனிவன் பாங்கர்க் குண்டிகை மீதிற்பொன்னி
சங்கர னருளின் வந்த தன்மையும் புணர்ப்பு முன்னி
ஐங்கரன் கொடியாய் நண்ண அகத்திய னவனேன் றோரான்
இங்கொரு பறவை கோல்லா மெய்திய தென்று கண்டான்.

என்னலுங் காஞ்சி தன்னி லெம்பிரா னுலக மீன்ற
அன்னைத னன்பு காட்ட வழைத்திட வந்த கம்பை
நன்னதி போல விண்ணும் ஞாலமும் நடுங்க வார்த்துப்
பொன்னியா றுலகந் தன்னிற் பொள்ளெனப் பெயர்ந்த தன்றே.

—(காந்தம் - காவிரி நீங்குபடலம்.)

## ஆனைமுகனைத்தொழுவோர், குட்டிக்கொள்ளல்.

ஐங்கைப்புத் தேனைத் தொழுகின்ற போர்க ளகங்கசிந்து
செங்கைத் துணைமுட்டி யாய்த்தலை யிற்குட்டிச் சீர்பெறுநற்
றுங்கப் பணிவிடை முற்றோன்று தானஞ் சுரர்மகிழு
மங்குற் பொழிறிகழ் காவேரி சேர்கொங்கு மண்டலமே.

(க - ரை) விநாயகக் கடவுளை வணங்குவோர், தலையிற் குட்டிக்கொள்ளுங் கொள்கையானது, முதலில் உண்டான இடமானது கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு:—காவிரி நீர் அடங்கிய கரகத்தைக் கவிழ்த்து ஓடிய காக்கை, சிறுவனாக நிற்கக்கண்டு, புடைத்தற்காக, அகத்தியர் பின் தொடர்ந்து, பின்பு விநாயகர் எனத் தெரிந்தனர். அறியாது குட்டுதற்காக அடிகளைத் தொடர்ந்த என் பிழையைப் பொறுத்தருளல் வேண்டும்; அக்குட்டு எனக்கே ஆகுக என இருகைகளையும் சேர்த்து அகத்தியர் குட்டிக்கொண்டனர். இதுபோலக் குட்டிக்கொண்டு பணிவோர் வணக்கத்திற்குப் பெரிதும் மகிழ்ந்தருளல் வேண்டுமெனத் துதித்தனர். அவ்வாறே அருள்புரிகின்றனம் என்ற வரத்தை விநாயகக் கடவுள் கொடுத்தனர். ஆனதால் குட்டிக்கொண்டு வணங்கும் வழக்கம் முதலில் கொங்குநாட்டில் நிகழ்ந்தது.

(மேற்) என்னே தமியே னெனவே யினிநின்
முன்னே நுதலின் முறையா லிருகை
கொன்னே கொடுதாக் குனர்தங் குறைதீர்த்
தன்னே யெனவந் தருள்செய் யெனவே
—(காந்தம்-காவிரி நீங்கு படலம்)

## வெஞ்சமாக் கூடல்

சிறுவே தியவடி வாகி விருத்தைையைக் கிட்டியெந்தன்
அழகாகு மக்க ளடகுகொண் டம்பொ னருடியென்றேற்
றெழுகாத லாற்றமிழ் பாடிய சுந்தரற் கீந்தவொரு
மழுவேந் தியவிகிர் தேசுரன் வாழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) சுந்தரமூர்த்தி நாயனார்க்குப் பொன் கொடுக்கவேண்டுமென்பது கொண்டு, மூத்த பிள்ளையார் முதலிய திருக்குமாரர்களை ஈடுவைத்துப் பொருள் பெற்று ஈந்த விக்ருதேசுரர் விளங்கும் வெஞ்சமாக் கூடலும், கொங்குமண்டலம் என்பதாம். (௩0)

வரலாறு:—பேரூர் முதலிய மேல் கொங்குநாட்டுத் தலவழிபாடு செய்து கொண்டு வரும் சுந்தரமூர்த்தி நாயனார்க்குப் பொன் கொடுக்கத் திருவுளங்கொண்ட விகுருதபுரிநாதர், ஒரு முதிய அந்தண வடிவுகொண்டார். மூத்தபிள்ளையார் முதலிய திருக்குமாரர்கள் சிறுவர்களாய்ப் பின்றொடர்ந்து வர, நாளும் உள்ளன்புடன் பூசித்து அவ்வூரில் வசிக்கும் ஒரு கிழமையுற்ற ஆய்மகளிடம் சென்றார். இக்குழந்தைகளை ஈடாக வைத்துக்கொண்டு பொன் தரவேண்டுமென்றிரந்தனர். அதற்கு இசைந்த அக்கிழமாது ? அம்முதியார் குறிப்பிட்ட அளவு பொருள் உதவினள்; ஏற்றுக்கொண்ட தம்பிரானார், திருமுன்பதிகமோதிய வன்றொண்டர்க்கு உதவியருளினர். [இது வெங்கால நாடு.]

(மேற்) கொள்ளைவண் டிமிரு நாட்பூங் கோதையோர் பாகர்முன்பு
கள்ளமி லுள்ளத் தன்பு கனிந்துள கிழவி யார்பாற்
பிள்ளைக ளீடு காட்டிப் பெற்றசெம் பொன்னை யெல்லாந்
தெள்ளிய தமிழ்ப்பா சொன்ன திருத்தொண்டர்க் குவந்த ளித்தார்.
—(திருவெஞ்சமாக்கூடற்புராணம்)

## திரு ஆநிலை

வீழுஞ் சடையார் பசுபதி யீச்சுரர் வெண்ணெய்மலை
சூழும் புகழொடு தோற்றிய நாடொழு தர்ச்சிக்கநீ
ராழுங் கடல்புவி யண்டமெ லாமுற வண்டர்தொழு
வாழும் பசுவுற் பவமான துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பசுபதி ஈச்சுரரைப் பூசித்துக் கடல் சூழ்ந்த பூமியையும் மற்று முள்ள அண்டங்களையும் பிரமனைப்போற் படைத்தற்றொழிலைப் பூண்ட காம தேனு பிறந்தது வெண்ணெய் மலைசூழ்ந்த கருவூர். அது உள்ளது கொங்கு மண்டலம் என்பதாம். (கக)

வரலாறு:—ஒரு காலத்திற் காமதேனு கரூர்ச் சிவபெருமானைப் பூசித்து வணங்கிற்று. பிரமதேவனைப் போல் உலகத்தைப் படைக்கும் ஆற்றலைப் பெறு வாய் எனத் திருவாய்மலர்ந்தருள அவ்வாறே பெற்றுச் சராசரங்களை முன்போலப் படைத்தது. அக்கரூருக்கு வடதிசையிலே புசிப்பு நிமித்தம் வெண்ணெய் மலை யென ஒன்று வகுத்துப் பூசித்துக்கொண்டிருக்கிறது. இதனால் இத்தலத்துக்கு திரு ஆநிலை யெனப் பெயராயிற்று. [இது வெங்கால நாடு.]

வருதிரீ சுரபி தொல்லை மறையவன் போல வேலை
பொருதிரை யாடை ஞாலத் தெமையருச் சனைபுரிந்து
தருததி சராச ரங்க ளனைத்தையு மெனமுன் றூழா
விரைமலர் தூவித் தேநு விடையொடும் போயிற் றன்றே.
—(கரூர்ப்புராணம்)

## திருப்பாண்டிக்கொடுமுடி

நந்து படித்துறை சூழ்கறை யூர்தனி னம்பரைப்பூத்
தந்து படித்தருச் சிக்கவொட் டாத்திருத் தார்முடியும்
முந்து படிக்கு ளடங்கக் குறுமுனி முன்கையினால்
வந்து பிடிக்கு ளடங்கிய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பூச்சாத்த முடியாதவாறு உயர்ந்துள்ள சிவலிங்கப் பெருமானது திருமுடியானது, குறுகிய வடிவுள்ள அகத்தியர் கைப்பிடியிலடங்கப் பூமியுள் தாழ்ந்த மகுடேசுரர், எழுந்தருளியுள்ள கறையூர் (திருப்பாண்டிக் கொடுமுடி) இருப்பது கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு :—கமண்டலத்துளடக்கிக் கொண்டுவந்த காவேரி ஆறுனது, கீழே படிந்து ஓடுமாறு காக்கை வடிவேற்று விநாயகர் கவிழ்த்தனர். பின்பு பெருகி ஓடுங்காவேரி மீது, முனிவர் சினந்தார். பெண் வடிவாகக் காவேரி, முனிவரெதிர் தோன்றி ஐயா, சிவபெருமான் கட்டளையிட்டவாறு விநாயகர் கவிழ்த்தது தெரிந்தும் என்மீது சினங்கொள்ளல் தருமமோ எனவே, முனிவர் ஆலயத்துட் புகுந்தார். மகுடேசுரர் ஒரு திருவிளையாடலாகப் பாதலத் தழுந்தினுர். பிராட்டியார் திருமணச்சேவை காணுது என்னை அகற்றிவிட்டதுமன்றி, இங்குத் தரிசிக்கவும் வகையின்றிப் பாதலத்துச் செல்கின்ருரே என்று ஓடிப்பிடித்தார். அக்கைப் பிடியளவே சிவலிங்கப் பெருமான் நின்றருளினுர். அவ்வண்ணமே நாளும் மகுடேசுரர் அங்கு விளங்குகின்ருர். [இது மேல்கரை அரைய நாடு. ஈரோடு தாலூகா.]

(மேற்) விரிதிரைப் பொன்னி போக விணையமுற் றினமென் றின்னேன்
பரிவுறப் போது கின்ருன் பாதலத் தடைது மென்றே
இருநிலத் திழிதல் காணு முனிவர னேங்கி மாழ்கி
பிரிவுரு வகைசெங் கையாற் பிடித்தனன் பிடிக்குள் நின்ருன்.
—(கொடுமுடிப்புராணம்.)

## திருச்செங்கோடு அர்த்தநாரீச்சுரர்.

நெடுவா ரிதிபுடை சூழுல கத்தி னிமலியுமை
யொடுவாகு பெற்ற திருமேனி காணு முயிர்கட்கெல்லாம்
நடுவாக நின்ற பரஞ்சோதி தானர்த்த நாரிச்சிவ
வடிவான துந்திருச் செங்கோடு சூழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) கடல்சூழ்ந்த பூவுலகத்தில் உமாதேவியாரோடு சிவபெருமான அர்த்தநாரீசுவரர் என்ன ஒரு வடிவான திருச்செங்கோடு மேவியது கொங்கு மண்டலம் என்பதாம்.

வரலாறு:—கைலாயத்தில் சிவபெருமானை வணங்குவதற்குப் பிருங்கி முனிவந்தனர். பரமசிவந் தவிர மற்றுள்ளனவெல்லாம் அழிவுள்ளனவாகலின் பார்வதியாரை வணங்கேன் என நினைந்து பரமசிவத்தை மாத்திரம் வணங்கிச் சென்றனன். மற்றொருநாள் சிவபெருமானும் உமாதேவியாரும் ஓர் ஆசனத்தமர்ந்து திருமேனி பிரிவு தோன்ருது இறுக அணைந்து வீற்றிருத்தலைக் கண்ட பிருங்கி முனி, வண்டு வடிவுகொண்டு பறந்து கழுத்துச்சந்தின் வழிபுகுந்து சாமியைமாத்

திரம் வலஞ் செய்தனன். தேவியார் சினந்து என்னை அவமதித்தனை யாதலின் என் கூறுஆன பொருளையும் நீக்கிவிடு; எனவே பிருங்கி உடலிலுள்ள ஊன்முதலி யன கழன்று நழுவிவிட்டன. வலுவற்று முனி விழச்சாயவே, எம்பெருமான் மற்றொருகால் தோன்றச்செய்தனர். கிரணமின்றிச் சூரியனில்லை, சூடின்றி நெருப்பில்லை ஆதலின் சக்தியின்றிச் சத்தன் (சிவமில்லை)என்ற உண்மைகாணாது மயங்கினையெனப் பெருமான் தேற்றினர். பிருங்கி மகிழ்ந்து பார்வதி பரமேசுரனை வணங்கிச் சென்றனன். சிவம் வேறு நாம் வேறாக இருத்தலினாலன்றோ ஒரு முனிவன் நம்மை இகழ நேர்ந்தது என்ற கருத்தினால் தேவியார் கேதாரம், காசி, காஞ்சி, திருவண்ணாமலை முதலிய தலங்களில் தவம்புரிந்து திருச்செங்கோட்டில் எழுந்தருளிக் கேதாரவிரத மியற்றிச் சிவபாஞ்சுடரின் இடதுபாகம் பெற்று ஸ்ரீ அர்த்தநாரீசுரர் என விளங்குகின்றனர். [இது கீழ்கரைப் பூந்துறைநாடு. சேலம் ஜில்லா.]

(மேற்)

பணிமலயி லெழுந்தருளிப் பரைக்கொருபா கங்கொடுத்த பரிசின் றோற்றம்
அணிமணித்தண் டுச்சியின்மூன் றங்குலியை வளைத்தமைத்த வனப்புக் கோப்பா
மணிவரைமா துமையிடத்து வைத்தணைத்து மகரகுழை வலத்தே நாலத்
தணிவிலொளி தயங்கியதண் டரளமணித் தோடிருபா லாகித் தானே.

—(திருச்செங்கோட்டுப்புராணம்.)

வெந்தவெண் ணீறணிந்து விரிநூ றிகழ் மார்பினல்ல
பந்தண வும்விரலா ளொரு பாக மமர்ந்தருளிக்
கொந்தண வும்பொழில்சூழ் கொடிமாடச்செங் குன்றூர் நின்ற
அந்தணனைத் தொழுவா ரவல மறுப்பாரே.

—(திருஞான - தேவாரம்.)

வானி கூடல் திருநண்ணாவூர்

காலி லரவ மிருசுட ரைப்பற்றுங் காலத்திலே
மேலுல கம்பெறு வோர்புனல் மூழ்க விரும்புதலும்
கோல மிகுந்தப வானியும் பொன்னியுங் கூடுதுறை
வாலிப காசிநண் ணாவூர் பயில்கொங்கு மண்டலமே.

(க - ரை) பொன்னுலகத்தைப் பெற விரும்புகின்ற சிலாகள், சூரிய சந்திர கிரகண காலங்களில் பவானி நதி காவேரியுடன் கலக்குகிறதான கூடுதுறையில் முழுகுகிறார்கள். அந்த வாலிப காசியான திருநண்ணாவூர் உள்ளது கொங்கு மண்டலம் என்பதாம். (கச)

வரலாறு:—பவானிகூடல் திரிவேணி சங்கமமாகும். காவேரி நதியே கங்காநதி, பவானிநதியே யமுனை. பராசர முனிவரால் உண்டாக்கிய ஆலயத்

திருந்து வரும் அமுதநதியே காசிக்ஷேத்திரத்திலுள்ள பவானி. ஆதலால் இம் மூன்று நதிகள் கூடலே திரிவேணி சங்கமாயிற்று. [இது வடகரை நாடு.]

(மேற்) பொன்னியே கங்கை யமுனையே பவானி பொருவரும் பராசரன் வகுத்த
மின்னவி ரமுத நதியதே வானி யல்லது வேறல விந்தத்
தன்னிகர் பிறிதில் தலந்திரி வேணி சங்கம மாதலாற் றென்பாற்
கன்னிமா மதில்சூழ் காசியின் மேலாய்க் கவினுமிக் கடிநக ரன்றே.
—(பவானித்தல புராணம்.)

## திருமுருகன்பூண்டி.

கனத்த வடிக்கொண் முலையாள் பரவைதன் காதலினாற்
சொனத்தி லடிக்கொளும் பேராசைச் சுந்தரர் சொற்றமிழ்க்கா
அனத்தி னடையுடை யாள்பாகன் றெனமுரு காபுரிசூழ்
வனத்தி லடித்துப் பறித்தது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பரவை யாரின் காதலாற் பொருளாசைகொண்ட சுந்தர மூர்த்தி நாயனாரிடத்திற் பதிகங்கேட்க விரும்பிய திருமுருகன் பூண்டி எம்பெருமான், நாயனாரின் திருக்கூட்டத்தார்கள் சுமந்து கொண்டுபோகும் பொன் முடிப்புகளைப் பறித்துக்கொண்டதும் கொங்கு மண்டலம் என்பதாம். (கரு)

வரலாறு:—கொடுங் கோளூருக்குச் சென்று சேரமான் பெருமாள் நாயனாரால் கொடுக்கப்பெற்ற நிதிக்குவைகளைச் சுமந்துகொண்டு அடியார்கள் முன் னடக்க, வன்றொண்டர் திருமுருகன் பூண்டிக்கு அருகுவந்தனர். முருகாவுடையார் சிவகணங்களை வேடர் வடிவாகச் சென்று வழிப்பறி செய்து வருமாறு தூண்டினர், அவ்வாறே செய்தனர். இதனை அறிந்த நாயனார் முருகன் பூண்டி ஆலயத்தையடைந்து திருப்பதிகம் பாடினார். பறித்தபொருளைக் கொடுக்குமாறு சிவபெருமான் கட்டளையிட்டபடியே கோபுரவாயிலில் கணநாதர்கள் குவித்தார்கள். ஒவ்வொரு தலங்களிலும திருவிழாவில் நடக்கும் வேடுபறி இந்த நிகழ்ச்சிதான். [இது ஆறை நாடு.]

(மேற்) முடியசேர சடை வுடையார் முருகவளம் பதியுடையார்
கூடிவேடு மூர்த்தருடன் கொள்ளைகொண்ட பொருளல்ல
தேடுமேல வளநாடு புரந்தருளுஞ் சேரலர்கோன்
பாடுபெற அளித்தபொருள் பறிகொண்டா ரெனப் பகர்ந்தார்.
—(திருவவிநாசிப்புராணம்.)

கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொத்தெனக்குத்திக் கூறைகொண் டாறலைக்கு மிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ் முருகன்பூண் டி மாநகர்வாழ்
இடுகு நுண்ணிடை மங்கைதன்னொடு மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே.
—(சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்.)

## திருஅவிநாசி.

பூவென்ற சீரடி யாரூர்ப் பரவைதன் போகங்கொளும்
பாவென்ற செந்தமிழ்ச் சுந்தரன் பாடிப் படர்குளத்தில்
ஆவென்ற வாயின் முதலைகொள் பிள்ளையை யன்றுகொண்டு
வாவென் றழைத்த வவிநாசி சூழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) பிள்ளையைக் கொண்டு வாவென்று சுந்தரமூர்த்தி பதிகம்பாட, விழுங்கிய பிள்ளையைக் குளக்கரையில் முதலை உமிழ்ந்த அவிநாசியையுடையது கொங்கு மண்டலம் என்பதாம். (கக)

வரலாறு:— திருநாவலூரார் என்னுஞ் சுந்தரமூர்த்தி நாயனார் அவிநாசிக்கு எழுந்தருளிய பொழுது ஒரு வீட்டில் மங்கலவொலியும், அடுத்த வீட்டில் அழுகுரலுங் கேட்டது. மூன்று ஆண்டின் முன் சில சிறுவர்கள் குளக்கரைக்குச் சென்றார்கள். ஒரு சிறுவனை முதலை விழுங்கி விட்டது. அச்சிறுவனுடன் சென்றவனுக்கு இன்று உபநயனம்; அது மங்கலவொலி. நம் குழந்தை இருந்தால் உபநயனம் நடத்தலாமே என்று அவன் தாயார் அழுமொலி இது என வன்றொண்டர்க்கு அங்குள்ளார் அறிவித்தார்கள். குழந்தையை இழந்த தாயார் படுந்துயர் பொறாத நாயனார் அக்குளக்கரை சென்று "காலனைக் குழந்தையைக் கொடுக்கச் சொல்" என்று பதிகம் ஓதியருளினார். மூன்று ஆண்டுக்குரிய வளர்ச்சியுடன் சிறுவனை முதலை கரையில் கக்கிற்று. [இது ஆறை நாடு.]

(மேற்) உரைப்பாருரையேன் றுள்குறவல்லா ருச்சியின்மீதே யொளிவிடுசுடரே
யரைக்காடரவா வாதியு நடுவு மந்தமுமளவு மல்லவுமானாய்
புரைக்காடவை சூழ்புக்கொளியூரா புகழவிநாசிப் புண்ணியமுதலை
கரைக்கான் முதலையைப் பிள்ளைதரச்சொல் காலனையென்றே கட்டுரை
செய்தார்.—(அவிநாசிப்புராணம்.)

உரைப்பாருரையிகந் துள்கவல்லார் தங்களுச்சியா
யரைக்காடரவா வாதியு மந்தமுமானாய்
புரைக்காடு சோலைப் புக்கொளியூரவிநாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.
—(சுந்தரமூர்த்திதேவாரம்.)

## பேரூர்த் தாண்டவமூர்த்தி.

பாகான சொல்லிதென் பேரூர் மரகதப் பார்ப்பதிமா
நாகா பாணர்பட் டீசுரர் பாதத்தை நம்பியெங்கும்

போகாத கோமுனி பட்டி முனிக்குப் பொதுநடஞ்செய்
வாகான மேலைச் சிதம்பர மூங்கொங்கு மண்டலமே.

(க - ரை) கோமுனி பட்டிமுனி காண, மரகதவல்லி சமேதரான பட்டீசுரன் நடனஞ் செய்தது மேலைச் சிதம்பரமான பேரூருங் கொங்கு மண்டலம் என்பதாம். (கஎ)

(மேற்) கோமுக முனியும்பட்டி முனிவனுங் குறுகியேத்த
வேமுறு பூதநாத ரிடனறத் துவன்றிப் போற்றக்
காமுறு விசும்பிற் றேவர் கடிமலர் மாரிதூர்ப்பத்
தீமுழங் கங்கைவள்ள றிருநட நவிற்றலோமே.
[இது ஆறை நாடு]—(பேரூர்ப்புராணம்)

பாரூருமரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்கணேற்ற
னூரூரன்றருமனூர் தமர்சேக்கி லிடும்போது தடுத்தாட்கொள்வான்
ஆரூரன்றம்பிரா னாரூரன் மீகொங்கி லணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாமன்றே.
—(சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்.)

பட்டிப்பெருமான் பள்ளனது.

கடுவாள் விழியிணை யாரூர்ப் பரவை கலவிவலைப்
படுவார் தமிழ்ச்சுந் தரர்பாடற் கேயப் பரிசின்மையால்
நெடுவாளை பாயும் வயலூடு போகி நெடியபள்ள
வடிவாகி நின்றதும் பேரூர்ச் சிவன்கொங்கு மண்டலமே.

(க - ரை) சுந்தரர் பாடிவருவார், கொடுக்கப் பொன்னிலையே என்று ஒளித்தார் போலப் பட்டிப் பெருமானார், பள்ளவடிவு கொண்ட பேரூருங் கொங்கு மண்டலம் என்பதாம். (கஅ)

(மேற்) உயர்ந்தவுந்தாமே யிழிந்தவுந்தாமே யெனமறையோலமிட்டுரைக்கும்
வியந்ததஞ்செய்கை யிரண்டினுளொன்று வேதியனாகிமுன்காட்டிப்
பயந்தரு மிறைவர் மற்றதுங்காட்டப் பள்ளனாய்த் திருவிளையாட்டால்
நயந்தபூம் பணையின் வினைசெய வன்பர் நண்ணிமுனண்ணினரம்மா.
—(பேரூர்ப் புராணம்)

நந்திக்கு மறுமுகம் வளர்ந்தது.

நிறைவயல் வாய்ச்சுந் தரர்க்கொளித் தாரதை நந்திசொலப்
பிறைமுடி வேணியர் பட்டீச் சுரர்பெரு மண்வெட்டியாற்

குறைபட வெட்டி விழுமுக நந்திசெய் கொள்கையினால்
மறுமுக மீண்டு வளர்ந்தது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சுந்தரமூர்த்தி நாயனார் வருவதைத் தெரிந்து (பள்ள வடிவாக) வயலில் ஒளித்திருந்ததை நந்திகேசுரர் காட்டச், சினந்த பட்டீசப்பெருமான் திருக் கையிற் கொண்ட மண் வெட்டியால் வெட்டிய முகம் மறுபடி வளர்ந்த பேரூர் கொங்கு மண்டலம் என்பதாம். (கசு)

வரலாறு:— பட்டிப்பெருமான் பள்ள வடிவு கொண்டு வயலுக்குப் போகும் பொழுது சுந்தரருக்கு என் இருக்கையைத் தெரிவிக்காதே என்று கட்டளையிட்டுச் சென்றனர். சுந்தரர் சுவாமி எங்கே எனவே, கட்டளையை மீறுவதும், அடியா ரிடத்துப் பொய் கூறுவதுந் தவறென்று கண் சாடையாற் காட்டினர். தெரிந்த வன்றொண்டர் வயலுட்சென்று பெருமானை வணங்கினர். நாயனாருடன் கரை யேறிய பட்டிப் பெருமான் ஆலயத்துட்சென்று மண்வெட்டிகொண்டு இடபதேவர் முகத்தை வெட்டினர். நந்திகேசுரர் வணங்க முகம் வளர்ந்தது. [இது ஆறை நாடு. கோயம்புத்தூரை அடுத்துள்ளது.

(மேற்)

பண்வணயி லேரிற் பூட்டிப் பகட்டோடு முழாது வைத்தால்
நண்ணிய தொண்டர்க் குண்மை நவிற்றுரு திருப்பை சொல்லென்
றண்ணல்வேள் விடையைச் சீறி யானனஞ் சரிந்து வீழ
மண்ணகல் கருவி தன்னால் வள்ளலார் துணித்திட் டாரால்.
—(பேரூர்ப்புராணம்.)

## அகத்திய முனி.

வாதாபி வில்வல னான துணைவர் மடியவினை
தீதாற வேகும்ப சம்பவ னன்று சிவக்குறிகண்
டேதாளி லர்ச்சனை செய்து தொடர்பவ மேகமகிழ்
மாதா மதர்நிறை சூழ்தான முங்கொங்கு மண்டலமே.

(க - ரை) வாதாபி வில்வல னென்னும் இரண்டு அசுரர்களும் மடியச் செய்த பாவம் நீங்கும் பொருட்டு அகத்திய முனிவர் சிவலிங்க பூசை செய்தது கொங்கு மண்டலம் என்பதாம். (உ0)

வரலாறு:— அகத்திய முனிவர் தென்றிசை நோக்கி வருங்காலத்தில் வாதாபி வில்வலன் என்னுந் துணைவர் இருவரும் முனிவரை வரவேற்று, அமுது செய்தருளும்படி வேண்டினர். வாதாபி ஒரு செம்மறிக் கடாவானன். வில்வலன் அக்கடாவைச் சேதித்துப் பக்குவஞ் செய்து படைத்தனன். முனிவர் உண்ட

னர். வழக்கம்போல வில்வலன் அடாவாதாபி எனக் கூவினன். வயற்றின் சுழற்றல் நேரிடும்போதே இது அசுரர்கள் மாயவித்தை என அறிந்து மந்திரத்தைச் சபித்துத் தன்வயற்றைத் தடவினர். வாதாபி ஜீர்ணமாய் விட்டான். வில்வலன் நிடுக்கிட்டு முனிவரைக் கொல்லும் பொருட்டு நெருங்கினான். ஒரு தருப்பைப் புல்லை விட்டு அவனை மாய்த்தனர். உடனே அக்குடகு நாட்டை நீங்கிக் கொங்கு நாட்டுக்கு வந்து மேன்மை பொருந்திய சிவலிங்கப்பெருமானைக் கண்டு பூசித்து இரு பிரமஹத்தியையும் போக்கிச் சுகப்பட்டனர். துடியலூரிற் பூசித்ததாகத் துடிசைப் புராணம் கூறுகிறது.

(மேற்) ஆசில் கோங்கினுக் கணித்தி னேரிடை
வாச மீதென மகிழ்ந்து வீற்றிரீஇ
ஈச னார்தமை யிலிங்க மேனியி
னேச நெஞ்சினு னிணைந்து தாபித்தான்.

மங்கை பாகனை மற்றும் பிற்பகல்
சிங்க லின்றியே சிறந்த பூசைசெய்
தங்கண் மேவினு னவன்க ளாகிய
துங்க வெம்பவந் தொலைந்து போயதே.

—(காந்தம் - காவிரி நீங்குபடலம்.)

தவநெறி யிடைவிடாச் சரத மாமுனி
பவமறு துடிசையம் பதிபுக் காங்கமர்
சிவபெரு மானையுந் தேவி தன்னையும்
உவகையி னொடுதொழு தொருங்குற் றனரோ.—(துடிசைப்புராணம்.)

துடியலூர்—சுந்தரருக்கு விருந்து செய்தது

வேட்டுவ வேட மெடுத்து வழித்துணை மேவிவிளங்
காட்டு முருங்கை யிலைகாய்நெய் பெய்து கறிசமைத்துப்
பாட்டு முழக்குவன் றொண்டருக் கன்னம் படைத்துநரை
மாட்டுதிப் போன்றுடி சைப்பதி யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) வழி தெரியாது மயங்கும் ஆளுடைய நம்பிக்கு, வேட வடிவு கொண்டு வழி கூட்டி வந்து, காட்டு முருங்கையிலை காய்க் கறியுமாக்கி விருந்து செய்த விருந்தீசுரா விளங்குந் துடியலூருங் கொங்கு மண்டலம் என்பதாம். (உக)

வரலாறு:— மூவாண்டின் முன் விழுங்கிய முதலை வாயினின்று பிள்ளை வரப்பாடிய சுந்தரமூர்த்தி நாயனார், அவிநாசியினின்றும் புறப்பட்டுச் செல்லும் வழியில் தடந்தெரியாது அடர்ந்த காட்டிற்றிகைத்தனர். உலக மீன்ற கன்னி

வேடச்சியாயும், எல்லாம் வல்ல கடவுள் வேட வடிவாயுந்தோன்றி வழி காட்டிக் கொண்டு துடியலூர்க்குள் புகுந்தனர். அம்மையு மப்பரும் மறைந்து விட்டனர். வன்றொண்டர், ஆலயத்துட் சென்று அகத்தீசரையும், அருந்தவச் செல்வியம்மை யையும் முறையுற வணங்கிப் பாடிப்பணிந்தனர். உணவருந்திச் செல்க என ஆகாய வாக்குப் பிறந்தது. கணநாயகர் பலவகையான உணவுடன் காட்டு முருங்கையிலை காய்கறியுட னாக்கிப்படைத்தனர். பரிசனங்களோடு விருந் துண்டு கடவுளைப்பாடி வணங்கி விடை கொண்டு சென்றனர். [இது ஆறை நாடு.]

(மேற்) சொல்லருங் கிராத வேடந் துணைவியுந் தானுங் கொண்டு
மெல்லவே நடந்து வந்து மேதினி புகழ வன்று
ஒல்லுநர் தம்மை நோக்கி யுயங்குத லொழித்தி யென்று
வல்லுரந் தன்னி னல்ல வழிதனைக் காட்டி யாங்கே.

கடிய தானமுட் கான முருங்கையி
னெடிய காயட காதிய நெய்சுவைப்
பொடி விராய பொறித்த புளிக்கின
முடிவி லாத முதிர்கறி பாகரோ.—(துடிசைப் புராணம்.)

நெட்டிசையின் றமிழ்முனிபூ சனையுகந்த துடிசையில்வாழ் நிமலர்ப் போற்றி
அட்டில்வினைப் புனமுருங்கை யட கறிநல் லமுதுவிருந் தளிக்க வுண்டார்.
-(திருவவிநாசிப் புராணம்.)

திருவினுயக ஞகிய மாலுக்கருள்கள் செய்திடுந் தேவர் பிரானை
யுருவினுனை யொன்றுவறி யொண்ணு மூர்த்தியை விசயற்கருள் செய்வான் [தம்
செருவிலேந்தியோர் சேழற்பின் சென்றுஞ் செங்கண்வேடனு யென்னுடும் வந்
மருவினுன்றனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத்தை மறந்தென்னினைக் கேனே.
- (சுந்தரர் வாள்கொளி புத்தூர் தேவாரம்.)

பழநி.

கீர்த்திகழ் மேனி சிவன்கையி லோர்கனி தேவர்மெச்சி
ஏத்திய நாரதர் நல்கக்கணே டேயிப மாமுகத்து
மூத்தவன் கொள்ள விளையோனை யீசன முகந்திருத்தி
வாய்த்த பழநியென் றோதின துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) நாரத முனிவர், சிவபெருமான் திருவடியில் ஒரு மாம்பழத்தை வைத்து வணங்கினர். அதனை விநாயகக் கடவுள் பெற்றுக் கொண்டனர். சினங் கொண்ட குமாரக கடவுளைத் திருத்திப் பழம் நீ என்று சொன்னதுங் கொங்கு மண்டலம் என்பதாம். (உஉ)

வரலாறு:— பிரமதேவன் முன் நாரத முனிவர் வீணை வாசித்தனர். மகிழ்ந்து நான்முகன் ஒரு மாங்கனி உதவினன். பெற்ற கனியைக் கைலாயத்துச்சென்ற முனிவர் சிவபிரான் திருமுன் வைத்துப் பணிந்தனர். இரண்டு திருக்குமாரர்களையும் நோக்கி இவ்வுலகை வலமாக வந்து முன்னே கேட்பவர்கள் இக்கனியை அடையலாம் என மலைமகள் பாகன் கட்டளையிட்டனர். இளைய பிள்ளையாகிய கந்தவேள் சுற்றி வருவதன் முன், மூத்த பிள்ளையார் கடவுளை வலமுற்று எல்லா அண்டமும் சுற்றி வந்து விட்டேனென்று கையேந்தினர். கருததறிந்த கடவுள் அக்கனியைக் கொடுத்தனர். பின்வந்த குமாரவேள் சோர்வுற்றுக் கயிலையை நீங்கித் திருஆவினன் குடி சேர்ந்தனர். உமையம்மையுடன் கங்காதரக் கடவுள் அங்குச் சென்று முருகனை எடுத்தணைத்து *"பழம் நீ" யே என இனிய மொழியால் இளைய பிள்ளை பிணக்கினைத் தீர்த்தனர். இதனால் அத்திருப்பதிக்குப் பழனி எனப்பெயராயிற்று. போதினி எனவும் முன்னாள் வழங்கினர் என்பர். [இது வையாபுரி நாடு]

(மேற்)

ஈசனுருகி மடியினில் வைத்தேன்று மிளையோயறிவுடைமை
தேசு தருநம் வானுதற்கண் மணிநீ சிறுவனேபெரிமை
வாச நறுமென் கனியுமொரு கனியோ மதுரமொழிவாயாற்
பேசவரிய மறை ஞானப்பிள்ளை பழநியெனப்புகன்றார்.

—(பழனித்தல புராணம்.)

## இடும்பன்.

அலைகொண்ட பாற்கடற் சற்ப சயனத் தரியயனுந்
தலைகொண் டிறைஞ்சும் பதாம்புயத் தாருக்குச் சற்குருவாய்
நிலைகொண் டிருக்குஞ்செவ் வேளுக் கிடும்பன்மு னீண்டசிவ
மலைகொண்டு வந்ததும் வைகாவூர் சூழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) மால் அயன் வணங்கும் பரமசிவத்துக்குச் சற்குருவான, திருவாவினன்குடி முருகவேளுக்கு இடும்பன் சிவமலை கொண்டு வந்து வைத்தது கொங்கு மண்டலம் என்பதாம். (உரு)

வரலாறு:— சூரபதுமன் முதலிய அசுரர்களுக்கு அஸ்திர சஸ்திர வித்தைகளைக் கற்றுக் கொடுக்குங் குருவானவன் இடும்பாசுரன் என்பான். முருகநாத

* பழம் நீ என்னுஞ் சொற்றொடர் "அல்வழியெல்லா மெல்லெழுத்தாகும்" என்னுந் தொல்காப்பியப் புள்ளி மயங்கியற் சூத்திர விதியால் மகரங் கெட்டு பழநீ எனப்புணர்ந்து, "நீயெனொரு பெயர் நெடு முதல் குறுகும்" என்ற உருப்பியற் சூத்திரப்படி பழநியென முடிந்தது.

னல் அசுரர்கள் நாசமான பின் நல்லறிவினால் உருமாறி மனைவியோடு பொதிய மலையில் முனிவரோடு இருந்தனன். அகத்தியரை அடைக்கலம் புகுந்தனன். வடக்கே உள்ள பூர்ச்சவனத்தை யடைந்து அங்குள்ள சிவ சத்தியென்னும் இரண்டு சிகரங்களைக் கொண்டு வருவாயானால் போகம் முத்தி இரண்டும் வரு மெனக் கூறினர். அகத்தியர் உபதேசித்த திருவுருவத்தைத் தியானித்துக் கொண்டு இரண்டு மலைகளையும் காவடி (தோட்சுமை) யிற் கொண்டு வந்தான். வழியில் வில்லம்புகளுடன் காவலனைப்போல் முருகவேள் தோன்றி எதிர்த்தனர். வழி மயங்கித் திருவாவினன் குடியைச் சேர்ந்தான். பசி தாகக் களைப்பால் தோட்சுமையை நிலத்தில் வைத்தான். தெளிந்து மறுபடி தூக்கினன். அசைய வில்லை. சந்தேகித்து மலைமேலேறிப் பார்த்தான். தண்டத்தைத் தாங்கிய ஓர் இளைஞனிருக்கக் கண்டான். அசுரனே! இம்மலையை விட்டுச்செல் எனவே, குமரவேளின் மேற் பாய்ந்தான். இடும்பாசுரன் மாய்ந்தான். இடும்பி இரந்து வேண்டினள். கந்தவேளின் கிருபையால் இடும்பன் எழுந்தான். குகப்பெருமானைத் துதித்தனன். குற்றேவல் செய்துக் கொண்டிருக்க விதித்தனர். பின்பு அகத்திய முனிவர் தண்டாயுதக் கடவுளைப்பூசித்து இடும்பனை நோக்கி நீ குழந்தைப் பிரானுக்குக் குற்றேவல் செய்திருப்பையேல முத்தியடைவாய் என்றருளினர். அம்மலைகளே சிவமலை சத்திமலையாம்.

(மேற்)

அன்னதுவண மால்வரைக ளன்பினனி காவின்
மன்னிடு மிடும்பன்மணி நீல மொருதட்டும்
தன்னிகரில் மாமணியோர் தட்டினு நிறைத்து
நன்னரி னிறுக்குமொரு நாய்கவன நிகர்த்தான்—(பழனிப் புராணம்.)

மோக்கணீசுரர்.

ஏத்து சிவபத்தி யாமொரு செட்டிமு னீசுரனைத்
தோய்த்து முழுகித் தொழுவெழ வாங்கொரு சூழ்ச்சிகற்றோன்
பூத்த வனக்குடக் கோட்டூரில் மொக்கணி யைப்புதைக்க
வாய்த்த சிவலிங்க மானது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சிவதரிசன வழிபாடு செய்யும் ஒரு வணிகன் குடக்கோட்டூருக்கு வந்து, ஆடை தோய்த்து ஸ்நானஞ் செய்து நியமமுடித்து வருதல் கண்ட யோசனையுள்ள மற்றொருவன், குதிரைக்குக் கொள்கட்டும் பையை மணலில் நட்டுவைத்து (பூமாலை போட்டு அலங்கரித்து) இதோ சிவலிங்கமென்றான்; அன்பன் வணங்கினன். அது சிவலிங்கப் பெருமானாயிற்று. அக் குடக்கோட்டூரும் கொங்குமண்டலம் என்பதாம். (௨௧)

வரலாறு :—சிவதரிசனஞ் செய்து பின் உணவு அருந்தும் நியமம்பூண்ட ஒரு வணிககுல சிவநேசர் *கூடக்கோட்டூர் வழிவந்தார். ஆடை தோய்த்து முழுகிக் கரையேறிச் சிவலிங்க தரிசனஞ் செய்யவேண்டும் ; நீ முன் சொல்லிய சிவாலயம் எங்கு இருக்கிறது? என்று தன்னுடன் வந்த மைத்துனனை வினவினர். இதன் முன்னம் அவரது மைத்துனன், பரிகாசத்துக்காகக், குதிரைக்குக் கொள்கட்டும் பையில் மணலை நிரப்பிச் சிவலிங்கம்போல மண்ணில் நட்டு மாலை சாத்தி வைத்திருந்தான். ஐயா, இதோ சிவபெருமான் இருக்கிறார். தரிசித்துவாரும் என்று சுட்டினன். சிவபத்தர் மகிழ்ச்சிகொண்டு அச்சிவபெருமானை இருவிழிகளுங் குளிரக்கண்டு சுயம்பு மூர்த்தியெனக் களங்கமற்ற மனத்திலிருத்தித் தோத்திரம் புரிந்து வணங்கினர். உணவருந்தத் தொடங்கும்பொழுது மைத்துனன் இவரை நோக்கி அத்தான் ! இன்று சிவதரிசனமின்றிப் புசிக்கத் தொடங்குகின்றீரே என்றனன். தொழுது வந்தேனே எனவே, அது சிவலிங்கமல்லவே என்று மைத்துனன் சொல்லிக் கை கொட்டிச் சிரித்துப் பல பேர்களோடு திருமுன் சென்று முன் புதைத்து வைத்த கொள்ளுப் பையைத் தூக்கினன் ; அசையவில்லை. மண்ணைப் பறிக்கப் பறிக்க அடி காணவில்லை. சுயம்பு மூர்த்தியாகப் பாதாளம் வரை ஊடுருவி நின்றது. கண்டவர்களெல்லாம் ஆச்சரியப்பட்டு "உண்மைப் பத்திமான்கள் பாவித்தபடி சிவபிரான் விளங்குவார்" என்று நிச்சயித்தார்கள். சிவநேசச் செட்டியார் உள்ள முருகினர். இதனால் மோக்கணீசுரர் என்று திருநாமம் உண்டாயிற்று. [இது ஆறை நாடு.]

(மேற்) மோக்கணி யருளிய முழுத்தழன் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்.

—திருவாசகம் - கீர்த்தித்திருவகவல்.

பழுதில்கண் டுயின்றோ மில்லை பருப்புநெய் கரும்புக் கட்டி
எழிறரு மட்டித் திட்டே மிதவிய புல்லு மிட்டேங்
கழுவிய பயறுங் கொள்ளுங் கடலையுந் துவரை யோடு
முழுவதுஞ் சிறக்க விட்டே மோக்கணி முட்டக் கட்டி.

—(வேம்பத்தூரார் திருவிளையாடல்)

* இது ஆறை நாட்டுள்ள ஓர் ஊர். அவிநாசியினின்று சத்திய மங்கலம் போகும் பாதையில் ஐந்தாவது மயிலிலுள்ள சேவூரினின்று வடமேற்கே செல்லும் கொடி வழியில் சுமார் மூன்று மயில் தூரத்தே அழிந்த ஆலயமாக இருக்கிறது. ஊர் அழிந்து போயிற்று. கோட்டூர்ப்பள்ளம் என்ற பெயர் மாத்திரம் சொல்ல இருக்கிறது. செட்டியார் நீராடிய ஓடை தாழையூற்று என்கிறார்கள். இவ்வாலயத்தின் உத்ஸவ மூர்த்திகள் சேவூர் வாலீசப்பெருமான் கோயிலில் சுமார் முந்நூறு வருஷங்களின் முன் சேர்க்கப்பட்டதாம். இச்சரித்திரத்தைச் சுற்றுமுள்ள குடியானவர்களெல்லாரும் கூறுகிறார்கள்.

## கொல்லிப்பாவை

*தாணு முலகிற் கடன்முரா சார்ப்பத் தரந்தாமாய்ப்*
*பூணு முலைமட வார்சேனை கொண்டு பொருதுமலர்ப்*
*பாணன் முதலிலவ ராணுலுங் கொல்லியம் பாவைமுல்லை*
*வாணகை யாலுள் ளுருக்குவ துங்கொங்கு மண்டலமே.*

(க - ரை) மன்மதனும் மயங்கத்தக்க இளஞ்சிரிப்புச் செய்யும் கொல்லிப் பாவை விளங்கும் கொல்லி மலையும் கொங்கு மண்டலம் என்பதாம். (உரு)

வரலாறு:— உணவுப் பொருள்களான பலவகைப் பழம் தேன் முதலியன மிகுத்துள்ளது கொல்லி மலையாதலின், தவத்தின் பொருட்டுத் தனித்து வசிக்க விரும்பிய தேவர்களும் முனிவர்களும் அங்கு வசித்தார்கள். அசுரரும் இராக்கதரும் அங்கு வருவதற்குத் தலைப்பட்டார்கள். இவரால் முனிவர் தவத்துக்கு இடையூறு நேர்ந்தது. காற்று மழை இடி முதலியவற்றாலும் கேடு கொள்ளாத வாறு ஒரு *பாவையை விசுவகன்மாவைக் கொண்டு செய்வித்து, அம்மலையின் மேற்குப் பாகத்தில் நாட்டினார்கள். பலவகைச் சக்தியை அதில் ஊட்டியிருப்பதால் அசுரர் முதலாயினோரின் காற்று வாடை படினும் இளஞ்சிரிப்புக் கொள்ளும். கண்டவரது உள்ளத்தையுங் கண்பார்வையையுங் கவர்ந்து பெருங் காம வேட்கையை உண்டாக்கி முடிவில் உயிர்போக்கத் தக்க மோகனி வடிவமுடையது. இஃது இயங்குவதையும், நகைப்பதையுங் கண்டு மடந்தையாமெனமயங்கிக் காமநோய் கொண்டு மடிவரென்பதாம்.

(மேற்) திரிபுரத்தைச்—
சேற்றவனுங் கொல்லிச் செழும்பாவையு நகைக்கக்
கற்றதெலா மிந்தநகை கண்டாயோ.—(சித்திரமடல்.)

செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்
டவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினு
முருமுடன் றெரியினு மூறுபல தோன்றினும்
பெருநலங் கிளரினுந் திருநல வுருவின்
மாயா வியற்கைப் பாவை

---

*கொல்லி மலையில் எழுந்தருளிய அறப்பளீசுரர் ஆலயத்துக்கு மேற்றிசையில் இப்பாவை இருப்பதாகக் கொல்லி மலை அகராதி என்னும் சுவடியில் எழுதப் பட்டுள்ளது. இது-இக்காலத்துக் காணக்கிடைக்கவில்லை.

**கொல்லிக்குடவரைப்**
**பூதம் புணர்த்த புதிதியல் பாவை—(நற்றிணை)**

**பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்**
**கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய**
**நல்லியற் பாவை.—(குறுந்தொகை)**

*மூத்தீட்டு வாரிதி சூழுல கத்தினின் மோகமுறத்*
*தொத்தீட்டு தேவர்க்கு மற்றுமுள் ளோர்க்குஞ் சுவைமதுரக்*
*கொத்தீட் டியபுதுப் பூத்தேனு மூறுங் குறிஞ்சியின்றேன்*
*வைத்தீட் டியகொல்லி மாமலை யுங்கொங்கு மண்டலமே.*

**க - ரை** *தேவர் முதலிய மற்றெல்லோரும் ஆசை கொள்ளத் தக்க பூந் தேன் சொரிந்துள்ள கொல்லி மலையுங் கொங்கு மண்டலம் என்பதாம்.* (உகூ)

*வரலாறு:—*

(மேற்) கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா—(கம்பர் தனிப்பாட்டு)

**உயர்சா லுயர்வரைக் கொல்லிக் குடவயி**
**னகவிலைக் காந்த ளலங்குகுலைப் பாய்ந்து**
**பறவை யிழைத்த பல்க ணிறாஅற்**
**றேனுடை நெடுவரை—(நற்றிணை)**

## எறிபத்தர்.

*நதிசூடும் வேணிக் கருவூர்ப் பசுபதி நம்பருக்குப்*
*புதுமாலை கட்டுஞ் சிவகாமி யாண்டவன் போங்தெருவின்*
*மிதமீறிப் பூவினைச் சிந்துகை யான்விறன் மீறவெட்டி*
*மதயானை யைக்கொன் றெழுப்பிய துங்கொங்கு மண்டலமே.*

**(க - ரை)** *கரூர்ப் பசுபதி ஈசுரருக்காக மாலை கட்டுந்திருத்தொண்டினைக் கொண்ட சிவகாமி யாண்டார் பூக்கூடையைப் பிடுங்கி எறிந்த யானையைக் கொன்று பின்பு எழுப்பியதுங் கொங்குமண்டலம் என்பதாம்.*

*வரலாறு :—கரூரில் எறிபத்தர் என்பவர் அடியார்களுக்கு ஆபத்துவந்தால் அதற்குக் காரணமாக இருந்தவர்களை மழுவினால் வெட்டுகின்ற கோட்பாடுடையவர். சிவகாமியாண்டார் என்பவர் வழக்கம்போலப் பூக்கள் எடுத்துக்கொண்டு தெரு வழியாகவந்தார். அந்நாட்டை ஆளும் புகழ்ச் சோழனாது பட்டவர்த்தன யானை மதவெறியால் அப்பூக் கூடையைப் பிடுங்கிச் சிதறியது. இதனைக் கண்ட*

எறிபத்தர் அந்த யானையையும் பாகர்களையும் கொன்று நின்றார். இவரது அன்பின் திறத்தைக் கண்ட புகழ்ச்சோழர், சிவனடியாருக்குத் தீங்கு செய்த யானையை வளர்த்த என்னைக் கொல்வது அவசியமென்று தன் வாளை அவர் கையிற் கொடுத்தார். மிக்க மெய்ப்பத்தியுள்ள இச்சேவகருக்குத் தீங்கு இழைத்தோமே என்று எறிபத்தர், தன் கழுத்தை அவ்வாளால் அறுத்துக் கொள்ளத் தொடங்கினர். புகழ்ச் சோழனர் பயந்து நடுங்கி கையையும் வாளையும் பிடித்துக் கொண்டார். அளவிறந்த அன்பினால் அவ்விருவருக்கும் உண்டான துக்கத்தை நீக்கும் பொருட்டு ஆகாய வாக்கின்படி இறந்த யானையும், பாகர்களும் உயிர்த்தெழச் சிவபெருமானருளினர்.

(மேற்)

திருமருவு கருவூரா னிலயார் சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்தயானை, யரனெறியோ ரெறிபத்தர் பாகரோடு மறவெறிய வென்னுயிரு மகற்றீரென்று, புரவலனர் கொடுத்தபடை யன்பால்வாங்கிப் புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்காற், கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார்தாமுங் கணநாத ரதுகாவல் கைக் கொண்டாரே—(திருத்தொண்டர் புராணசாரம்.)

மதுரைத் தமிழாசிரியர்—செங்குன்றூர்க்கிழார்.

நிலவுல கத்திற் பலகலை தேர்ந்த நிபுணருளே
புலவர் திருவள் ளுவரென நேயம் பொருந்தவுரை
குலவு மதுரைத் தமிழா சிரியர்செங் குன்றூர்கிழார்
வலிமை யுறவரு செங்கோடை யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பூவுலகத்திற் பல கலைஞானங்களிற் சிறந்த புலவர், திருவள்ளுவர் என்று வெண்பாக் கூறிய மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழாரும் கொங்கு மண்டலம் என்பதாம். (உஅ)

வரலாறு:— திருவள்ளுவர், திருக்குறள் என்னும் ஒப்பில்லாத நூலைப்பாடி, அரங்கேற்றுதற்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரிடம் கொண்டு போயினர். அவர்கள் கல்விச் செருக்கால் இவரை மதித்து இருப்புக் கொடுக்கவில்லை. இச்சுவடிக்காவது இடங்கொடுத்தல் வேண்டுமென வள்ளுவர் கேட்டனர். ஒப்பினர்கள். குறள் நூலை வைத்தனர். தெய்விகமான சங்கப்பலகை, அச்சுவடி யளவாகச் சுருங்கி விட்டது. சங்கப்புலவர்கள் இறங்க வேண்டி நேர்ந்தது. வள்ளுவர் பின்பு வாசித்தனர். அதன் அருமை கண்டு வியந்து அச்சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும், ஆகாயவாணியும் ஔவை, இடைக்காடர் ஆகிய ஐம்பத்தொருவரும் தனித்தனி ஒவ்வொரு வெண்பாக் கூறினர். அவர்களில் ஒருவரான

மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழாரும் ஒரு வெண்பாக் கூறினர். இவைகளெல்லாஞ் சேர்ந்தது திருவள்ளுவமாலை. இவர்களுள்ளே "புலவர் திருவள்ளுவரன்றிப் பூமேல்" என்னும் வெண்பாக் கூறிய செங்குன்றூர் கிழார் பிறந்தவூர் செங்குன்றூரான திருச்செங்கோடு.

(மேற்) புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயராகு மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர்.—(திருவள்ளுவமாலை.)

## கனகசபையாக்கப் பொன் கொடுத்தது.

பற்றறுத் தாளும் பரமனா னந்தம் பயினடஞ்செய்
சிற்றம் பலத்தைப்பொ னம்பல மாகச் செயச்செலும்பொன்
முற்றிலுந் தன்னகத் தேவிளை வாவதை மொய்ம்பிறையுண்
மற்றும் புகழக் கொடுத்ததன் றோகொங்கு மண்டலமே.

(க - ரை) பரமசிவமானவர் ஆநந்த தாண்டவம் புரிந்தருளும் சிதம்பரத்தைக் கனகசபையாகச் செய்ய வேண்டிய தங்கம் அவ்வளவையும், தன்னிடத்து விளைந்த பொன்னையே கொடுத்து, அரசனும் வியக்கப்புகழடைந்தது கொங்கு மண்டலம் என்பதாம். (உகூ)

வரலாறு:— கீழ்கரைப் பூந்துறை நாட்டின் இணைநாடு பருத்திப் பள்ளி நாடு ஆம். அந்நாட்டில் உள்ள கஞ்சமலையில் ஒரு சிறு வாரி உற்பத்தியாகி வருகிறது. அது மகடஞ்சாவடி ரைல்வே ஸ்டேஷன் ஓரமாகத் தெற்கு நோக்கிச் செல்கின்றது. அதனைப் பொன்னி ஆறு என்பர். அதிலுள்ள மணலைக் கரைத்துப் பொன் சன்னமெடுக்கிறார்கள். உழைப்புக்குத் தக்க கூலிபோல் கிடைக்கிறதாம். எட்டரை மாற்றுண்டு. இதுபோற் கொங்கு மண்டலத்துட் பொற்கனி உள்ள இடங்களிருக்கின்றன வாதலால், ஆதித்தன் என்னு மரசன் கனக சபையாக்கப் பிரயத்தனப்பட்ட சமயத்தில் கொங்கு நாட்டில் விளைந்த தங்கத்தாலேயே பொன் ஒடு பாவினன்.

(மேற்)

சிங்கத் துருவணச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
திங்கட் சடையர் தமரதென் செல்வமே னப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்கும்வே ளூர்மன் னிடங்கழியே.
—(நம்பியாண்டார் நம்பிதிருவந்தாதி)

* கோனாட்டுக் கொடும்பாளூ ரிருக்குவெளிர் குலத்தலைவரிடங் கழியார் கோங்கிற் செம்போன், ஆனேற்றூர் மன்றின்முக டம்போன் மேய்ந்த வாதித்தன் மரபோர் நெற்கவர்ந்தோரன்பர், போனுப்ப ணிருளின்கட் காவலாளர் புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு, மானேற்றூரடியாரே கொள்கவென்று வழங்கியரா சாண்டருளின் மன்னினரே.

கம்பர்.

கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள் கண்ணின்முனே
பொன்னி கரைகடந் தாளென நிந்தை புவியினுளோர்
பன்னி யிகழா தமரெனக் கம்பரோர் பாச்சொலச்செய்
மன்னிய கங்கைக் குலத்தாரும் வாழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) "கன்னியழிந்தனள்" என்றத் தொடக்கத்துப் *பாட்டைக் கம்பர் பாடும்படி செய்த, கங்கா குலத்தவர்கள் வசிப்பது கொங்கு மண்டலம் என்பதாம். (௩௦)

வரலாறு :—குலோத்துங்க சோழன் காலத்தில் காவேரி நதி பெருகி வெள்ளங் கரைகடந்தது. இதனால் அந்நதியின் இருபாலும் உள்ள நிலம் ஊர் முதலியனவெல்லாம் கெட்டன. அரசனும் அதிகாரிகளும் குடிகளும் கூடினார்கள். கரை கட்டினார்கள். நிற்கவில்லை. குடிகளாகிய வேளாளர்கள் அரசனை நோக்கி ஐயா, தெய்விகப்புலமை வாய்ந்த கம்பர் பாடினால் கரை நிற்கும் என்றார்கள். அரசனும் குடிகளும் அங்கு இருக்கும் மஹா கவியாகிய கம்பரைப் பல முறையும் வேண்டினார்கள், "கன்னியழிந்தனள்" என்னுந் தலைப்பையுடைய ஒரு வெண் பாக் கூறினர். நதிப்பெருக்கு அடங்கியது, பெருமகிழ்வுற்ற அரசனுங் குடி களும், கொங்கு மண்டலமும் சோழ மண்டலமும் அழியாது ஆற்றுப்பெருக்கை அடங்கச் செய்த பேருபகாரத்துக்கு யாது கைம்மாறு செய்யவல்லோம்; ஆயினும் எது விரும்பினுஞ் உதவத் தயாராக இருக்கின்றோம் என்றார்கள். கம்பர் புன் னகையரும்பி அரசே! எப்பொழுதும் அரசனும் குடிகளும் நினைக்கத் தக்கதாக இருக்க வேண்டும். ஆதலின் குடிகள் கலியாண வரி ஒன்று ராஜாங்கத்துக்குச் செலுத்தி வருகிறார்கள். அதை இதற்கு உதவுவதே போதும்' என்றனர். உடனே சோழன் ஒரு சாசனம் எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தனன்.

* கோனாடு என்பது எறும்பீசர் மலைக்கு மேற்கு, மதிற்கரைக்குக் கிழக்கு, காவிரி நதிக்குத் தெற்கு, பிரான் மலைக்கு வடக்கு இந்நான் கெல்லைக்குட்பட்டது. மதிற்கரை தான் (கொங்குத்) தட்டய நாட்டின் கிழக்கு, எனவே சோழமண்ட லத்துக் கோனாடும், கொங்கு மண்டலத்துத் தட்டய நாடும் எல்லைச் சந்திப்பு நாடுகளாக உள்ளன.

இந்த நிகழ்ச்சியானது என்வல்லமையாலன்று, தெய்வத் தமிழால் நடந்தது. ஆதலின் இக்கலியாண வரியை அத்தமிழுக்கே உரிமையாக்குகின்றேன் என்ற கம்பர், அரசனையும் குடிகளையும் பார்த்துக் கூறினதாவது:—அரசே, குடிகளே! இத் தமிழ்நாட்டுப் பழங்குடிகளான புலவர் கூட்டத்தார்கள் இக்கொங்கு நாட்டில் வாழையடி வாழையாக வளர்ந்து வருகின்றார்கள். அரசர்களாலும் குடிகளாலும் ஆதரிக்கப்பட்டுத் தமிழை வளர்த்து வந்தார்கள். இப்பொழுது அவர்களின் செழிப்பு மலினப்பட்டு வருவதாகத் தோன்றுகிறது. ஆகையால் இக்கொங்கு நாட்டார் கலியாண காலத்தில் மணமகன், மணமகளை வாழ்த்துதல் (ஆசீர்வாதம்) அவர்களாற் சொல்லக்கேட்டு எனக்குக் கொடுத்த கலியாண வரியை அவர்களுக்குக் கொடுத்துப் புகழையும் பெருக்கத்தையும் அடையுமாறு விரும்புகிறேன் என்றனர். அரசனும் குடிகளும் இப்பேருதவிக் குணத்தை வியந்து பாராட்டி அப்படியே ஆகுக ஆகுக என்றார்கள். கம்பர் வாழிபாடி அப்புலவர்களிடம் கொடுத்துத் தலைமுறை தலைமுறையாகக் காலங்களில் வாழி கூறி வரிப்பணத்தைப் பெற்றுத் தமிழை வளர்த்து வாருங்களென்றனுப்பினர்.

(மேற்) கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போயினளென்—றின்னீர்
உரை கிடக்க லாமோ வுலகுடைய தாயே
கரை கடக்க லாகாது காண்.—(கம்பர் கவி)

கதுவி வருபொன்னி கரைகடவா வண்ணம்
பதுமமுகக் கம்பனவர் பாட — வதுவைவரி
மாடை யரைக்கழஞ்சு வண்கம்பர்க் கீந்தபரி
*சேடர் குலோத்துங்க னெழுத்து.

இக்கொங்கு நாட்டில் சோழர்கள் ஆதிக்கமிருந்ததற்குக் கரூர் சோழர்களது முடி சூட்டு தலங்களிலொன்றாகவுமிருந்தது மாத்திரமன்று. ஜயங்கொண்ட சோழேச்சுரம், கரிகாலச்சோழேச்சுரம், பராக்கிரம சோழேச்சுரம், விக்கிரம சோழேச்சுரம், குலோத்துங்க சோழேச்சுரம், குலோத்துங்க விண்ணகர முதலிய திருநாமமுற்ற சிவ விஷ்ணு ஆலயங்களுமிருக்கின்றன. பல சிலா சாசனங்களும் பிரபந்தங்களு மிருக்கின்றன. குலோத்துங்கன் காலத்தே காவேரி கரை கடந்ததென்றும், கம்பர் பாடக் கரையுளடங்கிற்றென்றும் கூறுகின்ற பிரபந்தங்களும் சாசனங்களும் பல. விரிவஞ்சி விடுத்தனம். குலோத்துங்கன் இரண்டாங் குலோத்துங்கனென்பது சரித்திர ஆராய்ச்சியாளர் துணிபு.

---

* ஏடர் - ஏடு = ஓலை எனவே சாசனம்.

குலோத்துங்கன் எழுதிய சாசனக் கருத்தை இப்பழய பாட்டு குறிப்பிடுகிறது.

## கொங்குப் புலவர் சபை.



வளவ னெழுத்துப் படிக்கம்பார்க் கான வகுப்பைவரி
தெளியும் பழந்தமி ழைவாணர் கொள்ளச் செய்துமரிமை
கொளவேற் றவர்தமைத் தேர்ந்தெடுக் குஞ்சபை கூடிவரு
வளமை மிகுதிருச் செங்கோடை யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) குலோத்துங்க சோழன் சாசனப்படிக்குண்டான, கலியாண வரியை, ஐந்து பிரிவினையுடைய புலவர் வகுப்பினரில் தகுதி வாய்ந்தவர்கள் இவர்களென்று பொறுக்கி எடுத்து உரிமை தரும், கொங்குப் புலவர் சங்கங்கூடுந் திருச்செங்கோடு கொங்கு மண்டலம் என்பதாம். (கூக)

வரலாறு :— பாணர் (வாணர்) என்பவர்கள் பழந்தமிழ்க் குடிகளுள்ளே மிகச் சிறந்த ஜாதியார். தங்கள் பாடல்களால் நாட்டில் பெருந்தன்மையையும் வீரச் செயல்களையும் வளர்த்து வருவார்கள். தம்முன்னோர்கள் பாடியுள்ள பாட்டுகளைத் தலை முறை தலை முறையாகப் பாடுவார்கள். புதிய பாட்டுகளையுந் தொடுப்பார்கள். வாணி தேவியே நாவினின்று செய்யுளாக உதிக்கிறாள்; ஆனதால் இவர்கள் தரும சீலர்கள் என்று போற்றப்படுவார்கள். ஒருவனை "நீ கெடுவாயாக" என்று அங்கதம் (அரம்) பாடுவார்களாயின் நிச்சயமாகக் கெட்டு விடுவானென்று நம்பிக்கை கொண்டுளதால் இவர்களிடத்து மாந்தர்களுக்குப் பயமுண்டு. வேந்தர்களும் வீரர்களும் இவர்களாற் பாடப்படுவதையே மேலான கௌரவமென்று போற்றி வந்தார்கள். அச்சமின்றி ஊர் ஊராகச் சென்று, இன்பச் சுவை முதிர்ந்த அகப்பாட்டுகளையும், வீரச் செயல் முதலியன சிறந்த புறப்பாட்டுகளையும் யாழ் இசைத்தும், இன்றியும் கேட்போர் அவசமாகும்படி பாடவல்லவராதலின் அச்செய்யுளிற் பொருந்த தம் செய்கை விரைவில் பரவிவிடுமென்பது துணிவு. வேற்றரசர்களிடத்துத் தூது போதற்கும் உரியராவர். தம் அரசனது வீரத்தையுஞ் சேனைவன்மையையும், மாற்றரசனது மெலிவையுங் கூசாமல் நேர் நின்று கூறிச் சமாதானஞ் செய்வர். போர்க்களத்திலிருக்கும் பொழுதும், கூட இருந்து ஆடல் பாடல்களால் மகிழ்விப்பர். அரசன் மனது மயக்கமுற்றால் அவர்களது முன்னோர்களின் வெற்றியையும் வீரத்தையும் எடுத்துக் கூறி ஊக்கமூட்டுவர். பகைவர்களிடங் கொண்ட பொருள்களை, அரசர்கள் மகிழ்ந்து கொடுக்கப் பெறுவர். அரசர், நீதி குன்றுவாராயின் இடித்துரைப்பர். ஒருகால் தம் அரசர் தோல்வி பெறுவாராயின், மாற்றரசனிடஞ் சென்று அவனைப் புகழ்ந்து பாடி விடுவித்தலும் புரிவர். மாண்டு போனாரேனும் அவர் மக்கள் முதலியோர்களுக்குப் பேருதவி புரிவிப்பர். கோயில் முதலிய இடங்களிலே காணப்படும் கல்வெட்டுகளை விட, நிலையான சாசனமாகும் என்று இவர்கள் பாடும்பாடல்களைத் துணிவுடன் எடுத்துரைக்கலாம். ஒருவன் புகழ் உலகத்திற் பரவ வேண்டுமென்றாலும்,

நிலைத்திருக்க வேண்டுமென்றாலும் இவர்களாற் பாடப்பெறுவதை விட மேலான தில்லை. சங்க நூல்களில் இவர்களது அரும்பெருஞ் செயல்கள் நன்கு விளங்குகின்றன.

**சிறுபாணாற்றுப்படை** யுரையிலே **பாணர்**-பாடுவோர். இவர்கள் இசைப் பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணரும் எனப்பலவகையின ரெனவும்,

**பொருநராற்றுப்படை** யுரையிலே, ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோரெனப் பலரென்றும்,

**மதுரைக்காஞ்சி** யில், **பாணர்** வருக, பாட்டியர் வருக, யாணர்ப் புலவரொடு வைரியர் வருக என்பவற்றின் உரையில் கவியாகிய புது வருவாயினையுடைய **புலவரோடே பாணர்** வருவாராக. **பாணிச்சியர்** வருவாராக. **கூத்தர்** வருவாராக எனவும்,

**மலைபடுகடாம்** உரையில் **கூத்தர்** ஆடன்மாக்கள் எனவும், கூறப்பட்டுளது. இப்பாண் குடி மக்களுக்கு விறல்பெற ஆடுதலால் **விறலியர்** எனவுங் கூறுவர் எனக் காணப்படுகின்றன.

இச்சதகச் செய்யுள் இரண்டா மடியில் "பழந் தமிழ் வாணர்" கொள்ள எனக் குறிப்பிட்டுளது. இதனை;—

> புரவலன் பரிசு கொண்டு மீண்ட
> விரவலன் வேயிறெறு மிருங்கா னத்திடை
> வறுமையுடன் வரூஉம் புலவர் பாணர்
> பொருநர் விறலியர் கூத்தர்க் கந்தப்
> புரவல னூர்பெயர் கோடை பராசு
> யாங்குநீ செல்கன விடுப்பதாற் றுப்படை.

என்னும் இலக்கண சூத்திரம் வலியுறுத்துகின்றது.

இந்நாளிற் கொங்கு மண்டலத்தார் கொள்ளும் ஐவாணர்களாவது: பட்டன் - புலவன் - பண்பாடி - தக்கைகொட்டி - கூத்தாடி என்பவர்கள். இதனைக் கொங்கு வேளாளர் கலியாணத்திற்பாடும் * **மங்கல வாழ்த்து** என்று நாளும் பாராட்டும் நூலில்:—

> பட்டன் புலவன் பண்பாடி தக்கையன்
> திட்டமாய்ச் சோபனஞ் செப்பிமுன் னேவர
> அரம்பை மேனகை அணிகோள் திலோத்தமை
> திரம்பெறு மூர்வசித் தெரிவையர்க் கோப்பாய்
> வண்மைசேர் கூத்தி வகைபெற நின்று
> நன்மை சேர்பரத நாட்டிய மாடிட.—என வருவது காண்க.

---

* மங்கல வாழ்த்துங் கம்பர் இயற்றியதாக வழங்குகிறது.

**பட்டன்** - தலைவனது புகழை எதிர்நின்று பாராட்டுவோன்.

**புலவன்** - இயற்றமிழால் இருந்து புகழ்வோன்.

**பண்பாடி** - இசைத் தமிழ் பாடுவோன்.

**தக்கைகொட்டி** - தக்கை யென்னும் ஒருவகை வாத்தியம் வாசிப்போன்.

**கூத்தாடி** - நாடகத் தமிழ் நடத்துவோன். எனவே இவர்களில் உயர்வு தாழ்வு வகையாகப் பல உட்பிரிவின ருளராகத் தோற்றுகிறார்கள்.

கொங்குமண்டலத்தார் **பெரிய நாடு** என்று பாராட்டும் கீழ்கரைப் பூந்துறைத் தலைமை நகரான திருச்செங்கோட்டில், மலை முதற்படி அருகிலுள்ள **அழகிய விநாயகர்** சந்நிதியில் படிகாரர்கள் சபை ஒன்று பனிரண்டு ஆண்டு அளவில் கூடுகிறது. அப்பொழுது இனிக் கம்பர் உரிமையிற் பங்கு பெறக் கூடியவர் இவரெனத் தேர்ந்து எடுத்துச் சபைத்தலைவரால் வெற்றிலை கொடுக்கப் பெறுவது. அதன் பின்னர்தான் புலவர் அட்டவணையிற் பெயர் பதியப்படுகிறது. இச்சங்க காலத்தில் அப்போது ஏற்படுஞ் சங்கத் தலைவரால், நியமன தாம்பூலந்தரப் பெறாதவர் பன்னூலாய்ந்த பாவலராயினும், படி (வரி)ப்பணத்தில் பங்கு கொடுக்கமாட்டார்கள். கலியாணம் முதலிய சபையில் வாழி சொல்லுந் தகுதியனல்லன் என்பது அச்சங்கத்தாரின் கொள்கை.

கொங்கு வேளாளர் கலியாணங்களில் இப்புலவர்கள் கம்பர் வாழி சொல்லாவிடில் மணச்சடங்கு பூர்த்தியானதாக இல்லை. புலவர் அப்பொழுது வாராவிடில் அவர்களது உரிமையான சன்மானத்தை எடுத்து வைத்த பின்னரே பார்ப்பார் முதலியோர்களுக்குப் பூரி முதலியன உதவும் வழக்கம் ஐந்து படிகாரரிருக்கிற நாடுகளில் இன்னும் நடந்து வருகிறது. விவாகஞ் செய்வோரிடத்தி ஏதேனுஞ் ஜாதி ஆசார முதலிய குறைகளிருந்தால் புலவர் வாழி சொல்லப் புகமாட்டார். புதிதாகப் பெண் கேட்கப் புறப்படும்பொழுதும், மற்றுஞ் சில ஜாதி ஆசார நற்காரியங்கள் பேசும்பொழுதும், செய்யுங் காலத்தும் தமிழ்ப்புலவர்களில் ஒருவரேனும் இருக்கவேண்டுமென்று கொங்கு வேளாளர்கள் விரும்புகிறார்கள். இது நாட்டதிகாரம் பெற்ற பழய பரம்பரையைச் சார்ந்தவர்களிடத்து இன்றியமையாதது. பெண்பாலாரும் புலவர்களை மிக்க உபசரிக்கிறார்கள். புதிதாக உள்ள ஐசுவரியவான்களை விடப் பழயபரம்பரையைச் சேர்ந்த ஏழையை மனதாரப் புலவர்கள் மதிக்கிறார்கள், இவர்கள் **சோ வேளாளர்**கள் என்கிறார்கள். கொங்கு வேளாளர்களைப் போல நன்மை தீமைச் சடங்கு ஆசாரங்கள் நடத்துகிறார்கள்.

புலவர் வகுப்பினர் கொங்குமண்டலமே அன்றிப்பாண்டிமண்டலத்துச் சங்கர நாராயணர் கோயில், ஊற்றுமலை-சொக்கம்பட்டி-புளியங்குடி-எட்டயபுரம் முதலிய இடங்களில் வசித்து வருகிறார்கள். இவர்களுள் வேறுபாடுகள் பல. இப்பொழுது புலவர் வகுப்பிற் சிற்சில இடத்து சாதிக்கலப்புக் கொண்டிருக்கிறதென்று சொல்வாருமுளர்.

## ஆட்கொண்டான்

துன்னு மறைப்பொரு ளெல்லாம் பொதிந்து சுவை முதிர்ந்து
பன்னும் புகழ்பெறு மைந் தாம்வேத மென்னுமப் பாரதத்தைத்
தென்னன் மொழியிற் சொலச்செய்து கன்னடர்ச் செற்றதமிழ்
மன்னன் வலியனாட் கொண்டான் முன்னோர்கொங்கு மண்டலமே.

(க - ரை) வேதப் பொருள்க ளுள்ளமைந்தமையால் ஐந்தாம் வேதமெனப் பாராட்டுகின்ற பாரத கதையைத் தமிழில் வில்லி புத்தூரரைக் கொண்டு பாடச் செய்த ஆட்கொண்டானது முன்னோருங் கொங்கு மண்டலம் என்பதாம். (௫உ)

வரலாறு:— பாரதத்தைத் தமிழில் பாடும்படி செய்வித்த ஆட்கொண்டான் என்பவன் வக்கபாகையிலே வசித்தவனென்று சொல்லப்பட்டாலும் அவன் மரபினர் கொங்கர்களே என்பதை மறுக்க முடியாது. அப்பாரதத்தில் "கொங்கர் பிரா னாட்கொண்டான்" எனக் கூறப்படுதலாலறிக. இந்த ஆட்கொண்டானின் முன்னோர்கள் சோழனது சேனாதிபதியாகச் சென்று அரசனால் காணி பூமிகள் கொண்டு வக்கபாகையில் தங்கி இருத்தல் வேண்டும். சோழியர் எந்நாட்டில் வசித்தாலும், தொண்டை மண்டலத்தார் எந்நாட்டில் வசித்தாலும் சோழியர் என்றும், தொண்டை மண்டலத்தார் என்றும் வழங்குதல் போலத் தொழில் நோக்கி எந்நாட்டிலிருக்கினும் கொங்கரைக் "கொங்கர்" என்றே வழங்குவர். ஆட்கொண்டான் என்னும் உபகாரி கொங்கன் என்பதை, வில்லிப்புத்தூரர் மகனார் வரந்தருவார் பாடிய பாரதச் சிறப்புப் பாயிரத்தில் —

எங்குமிவ னிசைபரப்பி வருநாளில் யாமுரைத்த விந்த நாட்டிற்
கொங்கர்குல வரபதியாட் கொண்டானென் றொருவண்மைத் துரிசி றேன்றி
வெங்கலியின் மூழ்காமற் கருநடப்போர் வெள்ளத்து விழாம லன்காற்
சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமற் றலைகண் டானே.

ஆற்றியவிச் செல்வத்தா ளளகையைவென் றிருங்கவிஞ ரமர ரூரை
மாற்றியபொற் றடமதில்சூழ் வக்கபா கையினறத்தின் வடிவம் போலத்
தோற்றியவக் கொங்கர்பிரான் சூழ்தமிழா னாட்கொண்டான் சுற்றத் தோடு
போற்றியவிப் புவிமுழுதுந் தன்றிருப்பேர் மொழிகொண்டே புரந்தா னம்மா.

இந்த ஆட்கொண்டானை இரட்டையார் பாடியது.

சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயகன் றமிழ்க்கொங்கர் கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பகசுத்திலே
யூணுக்கு வாரா திருப்பாய்வி ருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்றாக மெலிகின்ற தெவ்வாறு வேண்டிங்களே.

## கரிகாலன்.

நீரமை காவிரி நாட்டினை யாண்ட நிருபரினற்
பேருறு வான்கரி காலன் கரந்து பிழைத்ததன்றி
ஏருறு சிங்கா தனமேறக் கையா லெடுத்துமத
வாரணங் கண்டு கொடுபோன துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சோழமண்டலத்தை ஆண்ட வேந்தருள்ளே திறமை வாய்ந்த கரிகாற்சோழன் தன் உயிர் பிழைத்தல் காரணமாக மாறு வேடமாக இருந்து பிழைத்ததும், இவனைச் சிங்காதன மேற்ற யானை எடுத்துப் போனதுங் கொங்கு மண்டலம் என்பதாம். (௩௩)

வரலாறு :—உறையூரில் அரசுபுரிந்த உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி என்னுஞ் சோழன், அழுந்தூர் வேள்மகளை மணந்தனன். கருப்பமுற்றுப் பிரசூதி வேதனைப்படுங்காலத்தில், இன்னும் ஒரு முகூர்த்தத்தின் பின் பிறந்த பிள்ளை, சக்கிரவர்த்தியாவனெனக் கேட்ட அரசி, தன்னைத் தலைகீழாகக் கட்டும்படி கூறி நல்லோரை வந்தவுடன் இறங்கி ஆண்மகவை ஈன்றனள். இளம்பருவத்தே குமானின் பிதா உயிர் துறந்தனன். உள்நாட்டுக் குழப்பமும் வெளிநாட்டுச் சண்டையுமாக இருத்தலின் சிங்காசனமேறக் கூடவில்லை. பிழைப்பதே அரிதாக இருந்தது, மாறுவேடமாகக் கொங்கு நாட்டிற் புகுந்து ஊர் ஊராய்த் திரிந்து வாழ்ந்தான். உறையூரில் சோழசிங்காதனமேறத் தக்காரைத் தேடி வரும்படி, அக்கால வழக்குப்படி பட்டத்து யானையை விடுக்கத் தீர்மானித்தார்கள். *கழுமலத்தி லிருந்த யானையைக் கட்டவிழ்த்துவிட்டார்கள். அது கருவூர்ச் சென்று அங்கு நின்ற இளைஞனை கரிகாலனைத் தன் பிடரி மீது தூக்கிவைத்துக் கொண்டுவந்து அரசியற்கு உரிமையாக்கியது. தாயத்தார் இவனைச் சிறைக்குளாக்கினர். அச் சிறைக்கூடத்திற் றீயிட்டார்கள். அந்நெருப்பையும் மதிலையும் பொருட்படுத்தாது கடந்து வெளிப்போந்தனன். தன் மாமன் இரும்பிடர்த் தலையாரின் அருந்துணை பெற்று பகைவென்று அரசுரிமை பெற்றனன்.

சிறைக்கூடத்து நெருப்புற்றபொழுது அந்நெருப்பாற் கருகிய காலைப்பெற்றவனாதலின் **கரிகாலன்** எனப்பெயர் பெற்றான் என்பர்.

**(மேற்) கழுமலத்தில் யாத்த களிறுங் கருவூர்**
**விழுமியோன் மேற்சென் றதனால்—(பழமொழி.)**

---

* இக்கரிகாலன் கிறிஸ்துவுக்குமுன் முதல் நூற்றாண்டிலிருந்தவன். அதாவது இன்றைக்கு 2000 ஆண்டிற்கு முன்னவன் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேராணைப் பெற்று—கடைக்கால்
செயிரறு செங்கோல் செலீஇனன் இல்லை
உயிருடையா ரெய்தா வினை—(பழமொழி,)

முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்
இச்சகக் கரமே அளந்ததால்—செச்சேய்
அரிகான் மேற்றேன் றொடுக்கு மாய்புன னீர்நாடன்
கரிகாலன் கானெருப் புற்று.—(பொருனராற்றுப்படை.)

விண்ணுளார் மறைகள் வேதம் விரித் தோதுவார்
கண்ணுளார் சழலின் வெல்வார் கரிகாலனை
நண்ணுவார் எழில்கோள் கச்சிநக ரேகம்பத்
தண்ணலா ராடுகின்ற வலங்காரமே.
—(திருஞான—தே—திருக்கச்சியேகம்பம்.)

கரூர்ச்சித்தர்.

வாய்த்தம் பலவெச்சி லாலட்ட பந்தன மாண்புறமீன்
காய்த்து மாஞ்சொரி யச்செய்து பத்தி கனிந்துசெந்தேன்
தோய்த்த திருவிசைப் பாப்பா டொருசித்தர் தோன்றிவா
வாய்த்த கருவூர்ப் பதிசேர்வ துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) தம்பல எச்சிலால் அட்டபந்தனம் இறுகவும், மாம் மீன் காய்த்துச் சொரியவும், பத்திகனிந்த திருவிசைப்பா ஓதியருளிய (கரூர்ச்) சித்தர் பிறத்தற்கு வாய்ப்புற்ற கருவூர் சேர்வதுவுங் கொங்குமண்டலம் என்பதாம். (நசு)

வரலாறு:—கருவூரில் வேதியர் குலத்துதித்து உலகாயுதம் முதலிய சமய உண்மைகளை நன்காராய்ந்து சைவ சமயமே சற்சமயமென்று தேறி ஒழுகுவாராயினர். வேத ஆகமசாரங்களான திருவிசைப்பாக்கள் பல தலங்களுக்குச் சென்று ஓதியருளினர். சிவயோகங் கைவந்த சித்தர். மாதவஞ் செய்தாலும் மாதர்பாலிருந்தாலுந் தாமரையிலை நீர்போலிருப்பவர். பாண்டி நாட்டுத் திருக்குருகூரை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள திருமால் அடியார் கனவிற்றோன்றி, சித்தரை எதிர்சென் றழைத்துவந் துபசரியுங்களெனக் கட்டளையிட்டார். முன்னீசரை வணங்கி மது வேண்டுமெனக்-காளிகொணர்ந்தாள்•வன்னிமரத்தை மீன் மழைபொழியச் செய்தார். பொதிகை சேர்ந்து அகத்தியரைத் தரிசித்தார். தஞ்சாவூர்ப் பெரிய கோயிலிலே சிவபதிட்டைக்கு மருந்து இளகி இறுகாது அரசன் வருந்தினன். கருவூர்ச்சித்தர் வந்தாலல்லது காரியசித்தி பெறாதென ஆகாய

வாக்கு எழுந்தது. உருமாறி அங்கிருந்த போகநாதர் ஒரு காகத்தின் காலிற் சீட்டெழுதிக் கட்டினர். அது கண்ட கரூர்ச்சித்தர் வந்து ஆலயத்துட் புகுந்து தம்பல எச்சிலை உமிழ்ந்து பந்தனஞ் செய்தனர். பல்லாயிரம் பேருக்குத் தயாரான அன்னத்தைத் தானே உண்டு அத்தனை பேர்கள் வயிறும் நிரம்பும்படி செய்தனர். சீரங்கத்தில் ஒருமாது இவரைக் காமுற்றாள். அவளைத் திருப்தி செய்தனர். அரங்கநாதரை அழைத்து விலையேறப் பெற்ற மாணிக்க மாலையை வாங்கி அவளுக்குக் கொடுத்தார். கோயிலார் தாசியைப் பிடித்துக் கொள்ள அரங்கநாதர் தான் கொடுத்ததாகச் சான்று கூறினர். மது ஊன் அருந்துகிறாரெனக் கரூர்ப் பார்ப்பனர் அரசன் முன் கூறினர். அரசன் சித்தர் வசிக்குமிடத்தைப் பார்க்க அங்குப் பெரியோர்களது உபகரணங்களிருந்தன. சித்தர் அறிவித்தவாறு விப்பிர அகரத்தைப் பார்க்க, மதுக்குடங்களும் புலால்களும் நிறைந்திருக்கக் கண்டார்கள். இவ்வாறு பல சித்துகள் காட்டினர். இவர் அருமை யறியாத பார்ப்பனர் இவரைப் புடைக்கக் கருதி ஆம்பிரா நதிக்கரையிலிருந்து துறத்தினார்கள். ஓட்டமாக ஓடி ஆநிலையாலயத்துட் புகுந்து சிவபிரானைத் தழுவிக் கொண்டார். அரும்பெருஞ் சோதி தன்னுட்கரந்து கொண்டது.

(மேற்) வாகுறு சோழன் மனமகிழ்ந் திறைஞ்ச வளமிகு மாவுடை யாளோ
டேர்கெழு சிவலிங் கம்புணர்ந் தருள வெழில்பெறு மட்டபந் தனநற்
பாகிலை சுவைத்த பசையினை யுமிழ்ந்து பண்பொடு மிருகிடப் பயிற்றி
மோகமோ டரச னுக்கிய வமுத முழுதுமுண் டுயிர்தோறு நிரப்பி.
—(திருவாவடுதுறைப் புராணம்)

என்றவர் கவலித் துட்க வேய்ந்து சிற்றிலைக டேற்று
நின்றதோர் வன்னி தன்னை நீதரு கென்ற போழ்தின்
மின்றரு வானம் பூத்த மீனில மெய்த லேய்ப்ப
வன்றளித் ததுயார் மேலோர் கருத்தினை யளப்ப காண்பார்
—(கரூர்ப்புராணம்.)

கஞ்சமலைச்சித்தர்

பஞ்சமுகத்தி லுதித்திடு மாகம மாகமென்னுஞ்
செஞ்சொற் றிருமந் திரமுறை மூலர் திருமரபிற்
கஞ்ச மலைச்சித்தர் வாழ்வு மிரதங் காணிவனார்
மஞ்சு திகழ் கஞ்ச மாமலை யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சதாசிவ மூர்த்தியின் திருமுகத்தினின்று தோன்றிய ஆகமங் களின் ரசமாகத் திருமந்திர மருளிய திருமூல நாயனார் [illegible] கஞ்சமலைச்

சித்தர் வாழ்வதும், ரசம் முக்காணிகள் வளர்வதுமான கஞ்சமலையுங் கொங்கு மண்டலம் என்பதாம். (நரு)

(மேற்) மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்க
னிந்திரன சோமன் பிரம னுருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த வெழுவரு மென்வழி யாமே•—(திருமந்திரம்.)

இந்தக் கஞ்சமலையானது பூந்துறை நாட்டின் இணைநாடுகளி லொன்றான பருத்திப்பள்ளி நாட்டுக்கும் இராசிபுரநாட் டிணைநாடான சேலம் நாட்டுக்கும் பூவாணிய நாட்டுக்குஞ் சேர்ந்ததாக இருக்கிறது. இவ்விடத்து ஆண்டுகள் தோறும் மாசிமாதத்தில் வழலை (பூநீர்) விளைவதைப் பெறுதற்காகப் பல திசைகளிலிருந்தும் வாதிகள் வருகிறார்கள். இம்மலை வாரிகளிலொன்றான பொன்னியில் பொன் கனி எடுக்கிறார்கள். உஎ-ம் செய்யுளின் கீழ் நோக்குக.

போகநாதர் - புலிப்பாணி.

யோக வயித்தியஞ் சொல்ரச வாத மெலாக்கலையுந்
தேக நிலைபெறுங் காயகற் பங்களெண் சித்தியுஞ்சொல்
போக ருடன்புலிப் பாணி முதலிய புண்ணியரெலா
மாக முறவமர் வைகா நகர்கொங்கு மண்டலமே

(க - ரை) யோகம் வைத்தியம் ரசவாதம் நீண்ட ஆயுளைப்பெறுங் காய கற்பம் அட்டமாசித்தி முதலியவைகளைக் கூறிய போகநாதர், புலிப்பாணி முதலிய பெரியோர்கள் வசித்துள்ள வைகாவூர் (பழனி) கொங்கு மண்டலம் என்பதாம். ()

வரலாறு :— திருமாளிகைத் தேவர் கருவூர்ச்சித்தர் புலிப்பாணி முதலிய எண்ணிலாத மாணாக்கர்களையுடையவர் *போகர். இவர் ஒரு சித்தர். திருமாளிகைத் தேவர் சரித்தால் சைவசமயப் பற்றுள்ளவராகவும், கரூர்த்தேவரை நோக்க வாமாசாரமுடையவராகவுங் கருதப்படுகின்றார். தஞ்சாவூர் பிரஹதீசுரர் (பெரிய) கோயில் அட்டபந்தன காலத்தில் இவர் அங்கு எழுந்தருளியிருந்தமை, இந்நூல் நசு-வது செய்யுளின் கீழ் விளங்குகிறது. புலிப்பாணி மாந்த்ரீகம், ரசவாதம், வைத்திய முதலியவைகளிற் றேர்ந்தவராவர்.

*போகர், சீனதேசத்துப் புத்தசமயி என்றும் அங்கிருந்து கயா முதலிய புத்த தலங்களைத் தரிசித்துக் கொண்டு, தென்னாடு முற்றிலுஞ் சஞ்சரித்துப் பலநாள் இங்கிருந்து திரும்பிச் சீனதேசஞ் சென்றனரென்றும், புலிப்பாணியும் இவரோடு வந்து இங்கேயே தங்கி விட்டனரென்றுஞ் சொல்வாருமுளர்.

(மேற்)

தானான சிவகிரியிற் றண்டாயுதபாணி தாதாவைப் பூசித்தோர் பிரமனிந்திரன்
தேனான போகருட னிவர்கள்மூவர் தெளிவாக முன்யுகத்தில் மூவரப்பா
கோனான கலியுக மிருநூற்றைந்தில் கோற்றவனே புலிப்பாணி பூசித்தேன்பார்
மானான அட்டசித்தி கோடாசத்தி மைந்தனே சித்தரிட நடனந்தானே.
—(புலிப்பாணி பல திரட்டு.)

பழனி யாண்டவர் சந்நிதி முன்பு போகர் ஒடுக்க மடம் என்றும், மலையடிவாரத்தே புலிப்பாணி மடம் என்றும் இருக்கின்றன.

கொங்கணச்சித்தர்

தோற்றிய செம்பு தராவீயம் பித்தளை சூழ்பச்சிலைச்
சாற்றுட னாக ரசங்கந் தகமிட்டுத் தந்திரமாய்
தேற்றுந் தவம்பெற்ற கொங்கணச் சித்தர்முன் செம்பொன்செய்து
மாற்றுரை கண்டது பொன்னூதி யூர்கொங்கு மண்டலமே.

(க - ரை) செம்பு முதலிய லோகங்களுடன் பச்சிலைச்சாறு, ரச கந்தக முதலியன சேர்த்துப் பொன் செய்து மாற்றுக்காணும் கொங்கணச் சித்தர் வசிக்கும் ஊதியூர் மலையுங் கொங்குமண்டலம் என்பதாம். (௩எ)

வரலாறு:—மகத நாட்டரசனுக்குப் பிறந்த ஆண்மகவைச் சுரானந்த முனிவர் நோக்கி நீடித்து வாழ்வாயென ஆசி கூறிக் காப்பிட்டனர். சகல கலைகளுங்கற்ற அக்குமாரன் தேச சஞ்சாரத்தால் ஞானத்தைப் பெறலாமென்ற கருத்தைத் வேந்தனுக்கறிவித்தனன். பரிசனங்களுடன் வழியனுப்பினன். பலபதிகளிற்றங்கிப்பின் ஆதிபுரியை அடைந்தனன். அங்குச் சுரானந்த முனிவர் தோன்றி முக்கால அடைவு உணர்வித்துச் சென்றனர். கொங்கணராசனும் மேல் நாட்டு யாத்திரையாகப் புறபட்டுத், தென்கரை நாட்டில் கொங்கணேசரைத் தரிசித்து வணங்கியிருந்தனன். ஒருநாள் புன்னாகமர நிழலிலே சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து உள்ள முருகிப் பூசிக்குங்காலத்தே இறைவன் குருவடிவாகத் தோன்றி அட்ட சித்தியையும் சிவயோகத்தையுந் தெளிவுற உபதேசித்தனர். கொங்கணர் தாமிர முதலிய லோகங்களைப் பொன்செய்து விரும்பினோர்க்குக் கொடுத்தனர். தன்மீது எச்சமிட்ட ஆகாயத்திற் சென்ற கொக்கை விழித்துப் பார்த்துச் சாம்பராகச் செய்தனர். கோரக்கநாதர் சிநேகமுங் கொண்டனர்.

(மேற்) பாத பத்திரம் பற்பல மூலிகொண்
டோது நற்புட முள்வலி யெய்திய
சூத வேதைசிந் தூரத் துகளினால்
வாத சித்தி சனகம் வழங்கினன்.—(அப்பிரமேய தலபுராணம்.)

இது தென்கரை நாட்டுள்ளது. ஊதியூரச் சிவபெருமானுக்குக் கொங்கணேசா என்று திருநாமம். இங்கு அநுக்கிரகம் பெற்று வசித்தலால் இறைவன் திருநாமமான "கொங்கணர்" என்று பெயராயிற்றுபோலும். இராசிபுர நாட்டினும் கொங்கணச் சித்தர்மலை, கொங்கணச் சித்தர் ஆலயமுமிருக்கின்றது. கொங்கணச் சித்தர் செய்ததாக பஞ்சபட்சி, வாதம், வைத்தியர் முதலிய நூல்கள் வழங்குகின்றன.

(மேற்) ஐங்கரனை யெத்தமனமேன்னும் திருப்புகழில்—

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பருள் கொண்டு உடலற்ற பொருள் அருள்வாயே, குஞ்சர முகற்கிளைய கந்தனென வெற்றிபெறு கொங்கணகிரிக்குள்வளர் பெருமாளே.

## இடைஞானி.

ஒருவிதை வைத்தட்டு மாயர் மதலை யுவமையிலா
அரியபுநா னங்கொளச சென்னியிற் செந்நீ ரருவியெனச்
சொரியநின் றன்னுன் றனையாண்ட முக்கூட் சுயம்புவென்று
மருவி வளர்தென் கரைநாடு சூழ்கொங்கு மண்டலமே

(க - ரை) ஒரு விதையை வைத்துச் சிறு கல்லால் தட்டிய இடைச் சிறுவன், மெய்ஞ்ஞானத்தைப் பெறுமாறு அடிக்கல்லாக நின்ற தமது திருமுடியினின்றும் இரத்தம் வடியக்காட்டி, அருள்புரிந்த அப்பிரமேயர் வீற்றிருக்கும் தென்கரை நாடும் கொங்கு மண்டலம் என்பதாம். (௩அ)

வரலாறு :— அப்பிரா நதி தீரமான தென்கரை நாட்டுக் கொற்றவனூரில் வசிக்கும் இடையா தலைவனது சிறுவன் ஆனிரை மேய்க்கச் சென்றான். இந்த ஊதியூர மலைமேற் கொடிய விலங்கினங்களிருப்பதால் அங்குச் செல்ல வேண்டாமென்று தாதை எச்சரித்தனன். மாலை நேரத்தில் ஆடுகள் சென்ற வழியே சிறுவன் தொடர்ந்தனன். இருள் வந்து விட்டது. காட்டில் இருந்தித் தங்கினன், உதயமாயிற்று. புதிந்து காணார் ஒரு கல்லின் மேல் ஒரு விதையை வைத்து மற்றொரு சிறு கல்லெடுத்துத் தட்டினன். அடிக்கல்லினின்று இரத்தம் பெருகிற்று. அடிக்கல்லாக நின்ற சிவலிங்கத்தைப் பிடித்துக் கொண்டு தியங்கிக் கண்ணிருண்டு செயலற்றிருந்தனன். முதல் நாட்சென்ற பிள்ளை வாராமையால் வருந்திய தாதை தேடி வந்து பிள்ளையின் நிலையறிந்து வருந்தினன். நம்மை வழி வழி ஆட்கொள்ளும் ஆண்டவன் செயலென்று நினைந்து வெயில் முதலியன படாது பந்தல் முதலிய இட்டுக் கோயிலாக்கிப் பால் தயிர் முதலியன குடங்குடமாகக் கொண்டு வார்த்துப் பூக்கொய்து திருமுடியிற் சாத்தி தளிகை செய்து படைத்துத் தந்தையும் பிள்ளையும் வணங்கி வர்தார்கள். தந்தை சிவபதமுற்றனர்.

சிறுவன் விபூதிருத்திராக்கந் தரித்துப் பஞ்சாக்கரமோதிப் பணிவிடை செய்து வந்த னன். சிவபெருமான் கிருபை கூர்ந்து சிவஞானத்தைப் புகட்டி முடிவில் சிவ கணநாதனாக்கினர். அந்நாள் முதல் இந்நாள் காறும் அக்கோயிலில் அச்சந்ததியார் நவராத்திரி காலத்தில் அம்புபோடுதல் முதலிய மரியாதையையடைந்து வருகிறார் கள். கொற்றவனூர் சிவாலயத்தில் இந்த இடைஞானியார் விக்கிரகம் பூசிக்கப் பட்டு வருகிறது.

(மேற்)

முண்டக னெகினப் படிவிற் றேறே முடியாத் திருவுயர் முடிமீதே
புண்டகு சோரி பொழிந்துற வோர்கல் புடைத்த விடைச்சிறு புதல்வோனைக்
கண்டிடை ஞானியே னச்செய்து நாள்பல கால்பூ சனைகோடு கவின்மேவுந்
தண்டிக ணேசர்ப தத்தினி லுய்த்தமை தரைகூர் தமிழினி லுரைகூர்வாம்
—(அப்பிரமேயதலபுராணம்.)

முத்தரசர்.

சொற்றவ றாதோர் கனிவு ளகத்தோர் சூதா றறுநூற்
கற்றவர் தங்கட் குதவுத லேழைப் பெனக் கண்டவராஞ்
செற்ற மிகுமுத் தரசர்கள் வாழ்வு செழித்தரசு
மற்ற புகழும்பெற் றாண்டது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சொல் மாறாத இளகிய உள்ளத்தவராய்ப் புலவர்களை ஆதரிப் பவர்களும் வீரத்தன்மையுள்ளவர்களுமான முத்தரசர்கள் ஆண்டது கொங்கு மண்டலம் என்பதாம். (ருகூ)

வரலாறு:—முத்தரையர் என்பவர்கள் பாண்டி நாட்டை ஆண்ட அரசர்கள். ஆனால் நார்த்தாமலைச் சாசனத்தால், விடேல் விடுகு முத்தரையன் மகன், சாத்தம் பழியிலி யாவன். அவன் மகள் பழியிலி சிறிய நங்கை என்பவள்; மீனவன் தமிழதியரையனாயின மல்லனனந்தனை மணந்தாளென்றிருப்பதால், மீனவ ராகிய தென்னவரும், முத்தரையரும் ஏக காலத்தில் பாண்டி நாட்டையும் மற்றும் பெற்றுக்கொண்ட நாடுகளையும் ஆண்டிருக்கிறார்கள். புதுக்கோட்டை சமஸ் தானத்துள்ள குடுமியான் மலைக்கோயில் சாசனத்தில், சத்துரு பயங்கர முத்தரை யன், தஞ்சாவூருக்கு வடமேற்கிலும், திருக்காட்டுப்பள்ளிக்கு இரண்டு மயில் தூரத்துமுள்ள சந்திரலேகை சதுர்வேதி மங்கலமென்ற பழம் பெயருள்ள செந் தலைக் கிராமத்துள் மீனாக்ஷி சுந்தரேசுரர் கோயிலுள் சுவரன்மாறன் பெரும்பிடுகு முத்தரையன் போனும், மாறன் பரமேசுரன் இளங்கோவடி வரையன் மகனு மாகிய சுவரன்மாறன் பெரும்பிடுகு முத்தரையன் என்பவர்களின் சாசனங்களிருக்

கின்றன. இக்காலம் சுமார் ஆயிர வருஷங்களாம். திரிச்சிறுப்பள்ளிக்குச் சமீபத்தில் "முத்தரைய நல்லூர்" என ஓரூரிருக்கிறது.

இம்முத்தரையர் மிகுந்த புகழுடையவர்கள் என்பதை நாலடியாரிலுங் காணலாம்.

(மேற்) பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச் சோறார்வர் கயவர் கருனையைப்
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும்.

மல்லன்மா ஞாலத்து வாழ்பவரு ளெல்லாஞ்
செல்வரேனினுங் கொடாதவர் நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்—(நாலடி.)

இம்முத்தரையர் கொங்குநாடும் ஆண்டிருக்கிறார்கள் என்பதைத் தமிழறியும் பெருமாள் கதை என்னும் புத்தகத்தில்—

"அங்காடி கொள்ளப்போ யானைகண்டேனணி நகரமன்றியிலே சேனைகண்டேன் - கொங்காளு முத்தரசர் தம்மைக்கண்டேன்" எனக் கூறப்பட்டுளது காண்க. கொங்கு நாட்டுள் அங்குமிங்குமாக அருகி வாழ்கின்ற வலையர் என்னும் ஒரு வகுப்பினர் முத்தரசர் கூட்டத்தாரெனத் தங்களைப் புகழ்ந்து கொள்ளுகிறார்கள்.

## கோசர்.

பனிமிகு நீள்கடல் சூழ்மே தினியிற் பலருமெச்ச
இனிமை தருந்தமிழ் மாது களிப்புற் றெலாவணியுங்
கனிவுறப் பூண்டு வளர்ந் தோங்கச் செய்யுக் கருத்தொடுநன்
மனமிகு கோசரும் வாழ்ந்தாண் டதுங்கொங்கு மண்டலமே.

(க - ரை தமிழை ஆதரித்தவர்களும், நல்ல மனதுடையவர்களுமாகிய, கோசர்கள் ஆண்டது கொங்குமண்டலம் என்பதாம். (௨௦)

வரலாறு:—கோசர் என்பவர்கள் படைப்பயிற்சியிற் சிறந்தவராகிய ஒரு மரபினர். இதனை "இளம்பல் கோசர் விளங்குபடைகன்மா ரிகலினரொறிந்த வகையிலை முருக்கின், பெருமலைக் கம்பம்போலப் பொருநற் குலையா நின்வலன்" (புறநானூறு) மனத்தொடு பொருந்திய மாறுபடாத சொல்லையுடையவர்கள் என்பது பொதியிற்றோன்றிய நல்லூர்க்கோசர் நன்மொழிபோல வாயாகின்றது குறுந்

தோகை என வருதல் காண்க. இக்கோசர் கொங்கு நாட்டினை ஆண்டிருக்கிறார்கள். என்பதனை "சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரையில்" "அது கேட்டுக் கொங்கிளங்கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய மழை தொழிலென்றும் மாறாதாயிற்று" என்பதன் உரையிலே —"அங்ஙனஞ் செழியன் நன்மை செய்து அவை நீங்குதலின் அதனைக்கேட்டு **கொங்குமண்டிலத்து** இளங்கோவாகிய **கோசரும்,** நங்கைக்கு அங்ஙனஞ் சாந்தியும் விழவுஞ் செய்தலால் அவை நீங்குதலோடே மழைபெய்தற்றொழில் பெய்யும் நாளென்றும் வழுவாதாயிற்று என்பதனாலறிக.

## குமணன்

நாட்டினைத் தம்பி கொளக்காடு சென்று நலிவுறுநாள்
பாட்டிசைத் தோர்புலவன்வேண்ட வென்றலை பற்றியறுத்
தீட்டியென் றம்பி யிடத்தீயிற் கோடிபொ னெய்துமென்று
வாட்டடங் கைத்தரு மகுமணன் கொங்கு மண்டலமே.

(க - ரை) நாட்டைத் தம்பி வசம் விட்டுக் காட்டிற் சென்றுள்ள காலத்து ஒரு புலவன் பாடிப் பரிசுகேட்க, என் தலையை அறுத்துத் தம்பியிடம் கொடுத்தால் கோடி பொன் கொடுப்பன் என்று தன் வாளாயுதத்தைக் கொடுத்த குமணனுங் கொங்குமண்டலம் என்பதாம். (௬௧)

வரலாறு :— குமணன் முதலெழு வள்ளலிலொருவன். புலவர்கள் பாடலுக்கும் மற்றை அறநெறிக்கும் பொருளீந்து பெரும் புகழ்பெற்றான். இதுபொறாத தம்பியிடம் அரசுரிமையைக் கொடுத்துக் காட்டுக்குச் சென்றான். பெருந்தலைச் சாத்தனார் அங்குச் சென்று பாடினார். ஐயா புலவரே! என் தலையைக் கொண்டு வருபவர்களுக்குக் கோடி பொன் தருவதாகத் தம்பி **அமணன்** பறைசாற்றியிருக்கிறான். இந்த வாளாயுதத்தால் வெட்டி என் தலையைக் கொண்டு போய்க் காண்பித்து பொன்னைப் பெற்று உம் வறுமையை நீக்கிக்கொள்க என இரந்து வேண்டி வாளைக் கொடுத்தான். இதற்கு உடன்படாத புலவர் மாந்தை நகர் சென்று குமணன் தலைபோல **பொய்த்**தலை ஒன்று சிற்பியாற் செய்வித்துக்கொண்டு இளங்குமணனிடங் கொடுத்தனர். அண்ணன் தலையைக் கண்டவுடன் மெத்த மன வருத்தங் கொண்டு புலம்பினன். வருந்தேல் என்று அழைத்து போய்க் குமணனைக் காட்டினர். மகிழ்ந்தனன்; துணைவர் நட்பாயினர். புலவர் விரும்பிய பொருளீந்தனர்.—(பெருந்தலைச் சாத்தனார் பாடியது.)

**(மேற்) ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்**
**ஆம்பி பூப்பத் தேம்பசி யுழவாப்**
**பாஅலின்மையிற் றோலொடு திரங்கி**
**இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை**

சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த விரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னின்னிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயோ.—(புறநானூறு.)

குமரன் முன்னவன் முதலினர்க் கொளுமதஞ் சைவ
சமய மென்றல்போற் கொழுமமே வரதரா சபுரம்
அமையும் ருத்திரா பாளய மெனப்பல வடுத்துக்
குமண நன்னக ரெனுமொரு பெயரினுற் குலவும்.
—(குமணசரித்திரம்.)

கோயமுத்தூர்ஜில்லா உடுமலைப்பேட்டைத் தாலூகாவில் கொழுமம் என்னும் ஊரில் குமணன் இருந்தது. குமண நகர், கொழும நகர் எனவும், முதிரமலை குதிரைமலை எனவும் மருவி வழங்குகிறதென்றும், குதிரை ஆறு என ஒரு ஆறு ஓடுகிறதென்றும் சரித்திரக்காரர் கருத்து.

## அதிகமான்.

சாதலை நீக்கு மருநெல்லி தன்னைத் தமிழ்ச்சொலௌவைக்
காதர வோடு கொடுத்தவன் கன்னலை யங்குநின்று
மேதினி மீதிற் கொடுவந்து நட்டவன் மேன்மரபோர்
மாதிரஞ் சூழரண் மேவுவ துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) நெடுநாள் வாழும்படி செய்யும் அருநெல்லிக் கனியை ஔவை யாருக்குக் கொடுத்தவனும், இவ்வுலகில் கரும்புப் பயிரைக் கொண்டு வந்து நட்டு உற்பத்தி செய்தவன் வழிவந்தவனும், கொல்லிக் கூற்றமாகிய மலையரணையுடைய வனுமாகிய அதிகமானுங் கொங்கு மண்டலம் என்பதாம். (சஉ)

வரலாறு :—தகடூர் (தருமபுரியைத்) தலை நகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வருபவன் அதிகமான். இவன் கடை யெழுவள்ளலிலொருவன். ஒரு நாள் பருத்திப்பள்ளி நாட்டிலிருக்குங் கஞ்சமலைமீது உள்ள கருங்காடு என்னும் பாகத் திற் சஞ்சரித்தான். அப்பொழுது ஒரு துறவி ஒரு நெல்லிக் கனியை அம்மன்ன னிடங்கொடுத்து, இந்தக் கனியை உண்டவர்களுக்கு நரை திரை வாராது; நீடித்த

நாள் உயிர்பெற்றிருக்கச் செய்யும்; இதனை நீ அருந்துவையேல் நெடுநாள் நற்புலவர்களை ஆதரித்துத் தமிழை வளர்த்து நாட்டை நீதியோடு காப்பாய் எனக்கூறிக் கொடுத்தனர். ஏற்றுக்கொண்ட அதிகமான், அக்கனியை வைத்திருந்து, ஔவையார் வந்தவுடன் அதன் வரலாற்றைக்கூறி, நாக்கிழத்தியாரே! இதையுண்டு நீடித்து வாழுநாள் கொண்டு அரிய நூல்களியற்றி உலகத்தைத் திருத்துவீர்களெனக் கூறி ஈந்தனன்.

(மேற்) மால்வரைக்-கமஞ் சூழ் சாரற்க வினியநெல்லி

யமிழ்து விளை தீங்கனி யௌவைக் கீத்த

வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே

லரவக் கடற்றானை யதிகனும்.—(சிறுபாணாற்றுப்படை.)

பூதலத்தினி லதிகமான் மணிமுடி பொறுத்தர சியற்றுங்காற்

காதலாய்க்கருங் காட்டிடைச் சித்தரைக் கண்டு வந்தனை செய்து

வீதலின்மருந் தொன்றரு ளென்னலும் விண்புகு கருநெல்லித்

தீதிலாக்கனி யொன்றினை யுதவவே *சேரலன் மகிழ்வெய்தி.

இந்த வண்கனி யொங்கிருந் தெடுத்தனி ரிதினதி சயமென்றே

சிந்தை யுற்றுணா ரச்சொலு மென்றலுந் திருவுளங்களி கூர்ந்தே

அந்த நாட் பிரமன்றரு மவ்வயிதி லதிசய சஞ்சீவி

எந்த நாட்களு முளதினை யுட்கொள நரைதிரை யிவைமாற்றும்.

—(கரபுரநாதர்புராணம்.)

இந்நாட்டில் கரும்புப் பயிர் கொண்டுவந்து நட்டார்கள் என்பது:—

அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்

அரும்பெரு மரபிற் கரும்பிவட் டந்து.—(சிறுபாணாற்றுப்படை.)

நமக்குத் திறை கொடுக்க மறுத்த அதிகன் எங்கும் உளன் என்று கருநிவிருந்து புகழ்ச்சோழர் கேட்டபொழுது:—

ஆங்கவன்யா ரென்றருள அதிகனவ னணித்தாக

ஓங்கெயில்சூழ் மலையரணத் துள்ளுறைவான்

—(புகழ்ச்சோழர்புராணம்)

கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசை

பல்வேற் றானை யதிகமான்.—(பதிற்றுப்பத்து.)

இந்த அதிகமான் பாண்டியனோடு போர்புரிந்ததை நெடுஞ்சடையனது ஒரு தான சாசனத்தில்:—

---

* சேரலன் = அதிகமான்.

மாயிரும் பெரும் புனற் காவிரி வடகரை
ஆயிரவேலி அயிரூர் தன்னிலும்
புகழி யூருந் திகழ்வே லதியனை
ஓடுபுறங்கண்டவன்.

என்பதில் கொங்கில் காவிரி வடகரையில் வாளவந்தி நாட்டின் உபநாடுஆன விமலை நாட்டு அயிலூ (ரூ) ரிலும், அக்காவிரியின் தென் கரையில் கிழங்கு நாட்டுப் புகழியூரிலும் போர்புரிந்திருக்கிறான். (இந்நூல் அO-ஆம் பா.) நாமக்கல்லில் இவர்கள் சாசனமிருக்கிறது. ஆதலின் இவன் ஆட்சி இங்கும் பரவி இருந்தது.

## ஓரி

விரையார் தொடையணி மூவேந்த ராசை மிருந்துநச்சத்
தரைமீ தெலாவள முஞ்செறி கொல்லித் தடவரையாள்
துரையாய்த் தமிழ்மொழிக் கல்லும் பகலுஞ் சுரந்து செம்பொன்
வரையா தளித்தநல் லோரிவள்ளல் கொங்கு மண்டலமே

(க - ரை) தமிழ் நாட்டு மூவேந்தரும் ஆவல் கொள்ளத்தக்க எல்லா வளப்பமும பொருந்திய கொல்லி மலைக்கு வேந்தாய், அல்லும்பகலும் ஓயாது தமிழுக்குக் கொடுப்போனை ஓரி என்னும் வள்ளலுங் கொஙகு மண்டலம் என்பதாம். (சரு)

வரலாறு:— இவனை ஆதனோரியெனவும், வல்விலோரி எனவும் கூறுவர். கொல்லி மலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டினையும் ஆண்டிருந்தவன். ஓரி பல் பழப்பலவின் பயங்கெழு கொல்லி " (அகநானூறு) வல்விலோரி கொல்லிக் குடவரை (குறுந்தொகை) இரவலாகரு வரையாது கொடுக்கும் வன்மையான். கடையெழுவள்ளலி லொருவன். கடையெழு வள்ளலில மற்றொருவரான காரிக்குப் பகைவன், இவனைப் பரணர் நற்றிணை கூ-உசுரு, கபிலர் ௯உO-ம் பாடலிலும், குறுந்தொகை ௧OO-ம் பாடலிலும் சிறப்பித்திருக்கிறார்கள். கொல்லிக் குடவரையென்பதால் கொல்லி மலையின் மேற்குக் கூறு எனத் தோற்றுகிறது.

கொல்லி மலையின் மேற்குப் பாகமானது பூந்துறை நாட்டின் இணை நாடான ஏழூர் நாட்டின் றொடரும், ராசிபுர நாட்டின் கூறும், வாளவந்தி நாட்டின்பங்கான தாசியூர் நாட்டினிடமும் பொருந்தியுள்ளது.

இந்தக் கொல்லி மலையின் மேற்குப் பகுதியில் நாடுகளிப்பொழுது மிருக்கின்றன. வாளவந்தி நாடு - வலப்பூர் நாடு - அரியூர் நாடு - குண்டூர் நாடு - தேவானூர் நாடு - சேலூர் நாடு - தின்னனூர் நாடு ஆகிய இவ்வேழு நாடுகளும் சேலம் ஜில்லா நாமக்கல் தாலூகாவைச் சேர்ந்திருக்கின்றன. பயில நாடு - பிறக்கரை நாடு - சித்தூர் நாடு - இடைப்புளி நாடு - திருப்பளி நாடு-குண்டுணி நாடு - ஆலத்தூர் நாடு ஆகிய இவ்வேழுநாடுகளும் ஆற்றூர்த் தாலூகாவைச் சார்ந்தனவாக இருக்கின்றன.

## வையாவிக்கோப் பெரும் பேகன்

கையாரக் கான மயிலுக் கிரங்கிக் கலிங்கமருள்
செய்யாண் டகைகரு ணைக்குவைப் பாகத் திகழ்தருமவ்
வையாவிக் கோப்பெரும் பேக னெனும்பெரு வள்ள றங்கு
வையா புரியெனுங் கோநக ருங்கொங்கு மண்டலமே.

(க - ரை) காட்டில் ஆடிக் கொண்டிருக்கும் மயில், குளிருக்கு ஆற்றாது நடுங்குகிறதென்று நினைந்து, தான் மேலே போர்த்திருந்த உயர்ந்த ஆடையை அதன் மேற் சாத்திய, வையாவிக்கோப் பெரும்பேகன் வசிக்கும் வையாவிபுரி என்னும் ஊரும் கொங்குமண்டலம் என்பதாம். (௪௫)

வரலாறு :—பழனி என்று இப்பொழுது வழங்குகின்ற வையாபுரி என்னும் நகரத்தில் பேகன் என்னும் வள்ளல் வாழ்ந்தனன். இவன் வேளிர் தலைவருள் ஒருவனை ஆவியர் குடியிலுதித்தவனாதலின் வையாவிக்கோப் பெரும்பேகன் எனவும் வழங்குவர். கடைச்சங்க காலத்திருந்த கடையெழு வள்ளல்களில் இவனும் ஒருவன். இவன் ஒரு நாள் மலை வழியே செல்லும்பொழுது அங்கு சிறகை விரித்து ஆடிக்கொண்டிருக்கும் மயிலைக் கண்டு, குளிருக்கு ஆற்றாது வருந்துகிறதெனச் சிந்தித்துத் தான் போர்த்திருந்த போர்வையை அதன்மேற் போர்த்தினான் என்று அவன் கொடை மடத்தைப் பற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள். கண்ணகி என்ற கற்புடை நங்கையோடு கூடி இல்லறம் நடத்தும்பொழுது பரத்தையர் வலையுட்சிக்கி மயக்கமுற்றிருந்தனன். இதனையறிந்த கபிலரும், அரிசில் கிழாரும் பெருங்குன்றூர்க்கிழாரும் பேகனைக் கண்டு நாங்கள் பரிசில் பெற உன்னைப்பாடி வரவில்லை. மனத்துயர் கொண்டு தனித்து வாழும் உன் மனைக்கிழத்தியாருடன் கூடி வாழவேண்டுமென்று பாடினோமென்றார்கள். அவ்வாறே கூடி வாழ்ந்தனன். இவன் வாழ்ந்த நாட்டிற்கு வையாபுரி நாடு என்று பெயர் வழங்கியது போலும்.

(மேற்) " உடாஅ போரா ஆகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன் !"—(பரணர்-புறம்.)

" மடத்தகை மாமயில் பனிக்கு மென்றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக !"—(வன்பரணர்-புறம்.)

வானம் வாய்த் வளமலைக் கவாஅற்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
அருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்கன் னாடன் பேகன். —(சிறுபாணாற்றுப்படை.)

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
இரவாம லீந்த இறைவர்போ னீயுங்
கரவாம லீகை கடன்.—(ஐயனரிதனர்.)

சேரர் கொங்குவை காவூர்நன் னாடதில்
ஆவினன் குடி—(திருப்புகழ்.)

இந்தப் பழனிக்கு அருகில் ஆய்க்குடி என்னும் ஊர் இருக்கிறது. இது பல ஊர்களைத் தன்னுளடக்கியுள்ள ஒரு ஜமீனின் தலைநகரம். ஜமீன்தார் **வேட ஜாதி.** **ஆய் எயினன்** என பாணர் முதலியோர் அகநானூற்றில் கூறும் ஆய்க்கும், இவ் ஆய்க்குடியை ஆள்வோருக்கும் ஏதேனும் பொருத்தம் இருக்குமோ என ஐயம் நிகழ்கிறது.

அசதி

தெய்விக மான தமிழ்ப்புல வோர்கள் நினைமுளங்கொள்
பொய்தீ ருரையெம் பிராட்டியா ரௌவை புனைந்துபுகழ்
செய்கோவை பேற்ற திறலோ னசதி செழித்துவளர்
மைதாழ் பொழிறிக ழைவேலி யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) தெய்வத் தமிழ்ப்புலவர்கள் சிந்திக்கும் ஔவையாரால் கோவை யென்னும் பிரபந்தத்தைப் பாடக்கேட்ட அசதி யென்னும் உபகாரி வசித்த ஐவேலியுங் கொங்கு மண்டலம் என்பதாம். (சரு)

வரலாறு:—ஔவையார் கொங்கு நாட்டில் (குன்றத்தூர்க் கூற்றம்) மலைமேல் ஏழு சுற்றுக்கோட்டையுள்ள சங்ககிரி துர்க்கத்துக்கு அடுத்துக் கிழக்கில் இரண்டு நாழிகை வழியில் ஐவேலி என்னும் ஊரில் அசதி யென்கிற பிரபு இல்லத்தில் தங்கினர். ஔவையாரென அறிந்த அவ்வுபகாரி பொன்னிலை இட்டு அன்னம் படைத்து உபசாரம் புரிந்தனன். மனமகிழ்ந்த ஔவைப்பிராட்டியார் அந்த இடையர் தலைவன் மீது கோவைப் பிரபந்தம் பாடினர். அதனை அசதிக்கோவை யென்பர்.

(மேற்)

ஐவே லசதி யிரவினி லேளவைக் கமுதளித்து
மெய்வேசம் போனிற்கும் கோவைகொண் டோன்புவி மீதிற்றவஞ்
செய்வோன் றனிலும் பசுக்காவன் மிக்கெனச் செய்யுமன்பன்
மைவேலை வண்ணன் சதியுடன் வாழ்ந்த மண்டலமே.
—(கொங்குமண்டலசதகம்.)

ஆலவட் டப்பிறை யைவே லசதி யணிவரைமே
னீலவட் டக்கண்க ணேரோக்கும் போதந்த நேரிழையாள்
மாவலவிட் டுச்சுற்றி வட்டமிட் டோடி வரவழைத்து
வேலவிட் டுக்குத்தி வெட்டுவ ளாகில் விலக்கரிதே.

ஆய்ப்பாடி யாயர்த மைவே லசதி யணிவரையிற்
கோப்பா லவளொழிற் கொங்கைக்குத் தோற்றிபக் கோடிரண்டுஞ்
சீப்பாய்ச் சிணுக்கரியாய்ச் சிமிழாய்ச் சின்ன மோதிரமாய்
காப்பாய்ச் சதுரங்கமாய்ப் பல்லக்காகிக் கடைபட்டதே.

ஆதித் தவனக்கண் டரவந் தொடயந் நகரினுள்ளார்
பாலித்த முத்தும் பவளந்தோட் டாரிந்தப் பைந்தொடியாள்
சேனைத் தலைவனைச் செங்கோ லசதியைச் சேர்ந்தொருநாள்
கூடித் தழுவுவ மென்றுதோட் டாடன் குவிமுலையே—(அசதிக்கோவை.)

சேனைத் தலைவனைச் செங்கோ லசதியை என்னுங் குறிப்பு உண்மையால் இவன் படைத்தலைமை அதிகார வருக்கத் தவனெனக் கருதப்படுகிறான்.

இந்த ஐவேலி என்பது சங்ககிரி மிட்டாவைச் சார்ந்த பாகமாக இருக்கிறது. அரசுரிமைப் பதிவிலும் ஐவேலிக் கிராமம் என்று பெயர் இருந்து வருகிறது. ஆனால் ஊர் நத்தமாகப்போய்விட்டது, என்றாலும் அவ்விடத்தை அடுத்து இடையர் வீடுகள் மாத்திரம் 200 உள்ள இடையர்பட்டி என ஓர் ஊர் இருக்கிறது.

## சீயகங்கன்.

சொல்காப் பியத்தின் குணதோடந் தேர்ந்து சொலுவதற்குத்
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை
யொல்காப் பெரும்பவ ணந்தியென் றோதி யுபகரித்த
வல்கா வலன்சீய கங்கனுந் தான்கொங்கு மண்டலமே.

(க - ரை) தமிழ்க்காப்பியங்களின் ஒப்பு தப்புகளைத் தெரிந்து கொள்வதற்குத் தொல்காப்பியம் என்னும் இலக்கணம் விரிந்து கிடக்கின்றது. அதனைத் தொகை வகை விரியால் சுருக்கி விளக்கி உலக உபகாரமாக ஒரு நூல் செய்தருளுக என்று பவணந்தி முனிவரைக் கேட்டுக்கொண்ட சீயகங்கன் என்னும் அரசனுங் கொங்கு மண்டலம் என்பதாம்.

வரலாறு :—மைசூர் இராச்சியத்தைச் சேர்ந்த கோலார்ப்பட்டணத்தை இராஜதானியாகக்கொண்டு நீண்ட காலம் ஆண்டு வந்தவர்கள் கங்கவமிசத்து அரசர்கள். இவர்கள் தம் மெய்க்கீர்த்திகளில் குவளாலபுர பரமேசுரர்கள் என்றும், நந்திகிரி நாதர் என்றுங் கூறிக்கொள்ளுகிறார்கள். குவளாலபுரமென்பதே கோலார் என

வழங்குகிறது. அவ்வரசர்களில் சீயகங்கன் என்னும் வேந்தன் ஒருவன் தமிழ் இலக்கியங்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமையாததும் விரிந்து கிடப்பதுமான தொல்காப்பியத்தைக் கற்று விதி விலக்குகளை அறிந்து கொள்வது சில் வாழ் நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதர்க்கு அரிதாக இருக்கிறது. ஆதலின் அந்நூலிற் கூறப்படும் எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் யாவரும் வருத்தமின்றி அறிந்துகொள்ளும்படி ஒவ்வொரு பகுதியையுஞ் சுருக்கி தொகை வகை விரியால் விளக்கி ஒரு இலக்கண நூலைச் செய்தருளுக என்று அச்சீயகங்கன் வேண்டிக் கொண்டனன். பவணந்தி என்னும் ஜைன முனிவர் நன்னூல் என்னும் பெயரால் ஓர் சிறந்த இலக்கண நூல் செய்தனர்.

தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணர
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறும் நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோதன் அமரா பரணன்
மொழிந்தனன் - - .

எனவரும் நன்னூற் சிறப்புப் பாயிரத்தே கூறப்பட்டுள்ளதால் விளங்கும்.

இவனுக்கு அமராபரணன் திருவேகம்பன் என்று மறு பெயர்களும் உண்டு என்பர்.

கி. பி. 1178 முதல் 1216 ஆம் வருடம் வரையில் அரசுபுரிந்த மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தவன். இச்சீயகங்கன் மனைவி அரியபிள்ளை திருவல்லத்தில் திருவல்லமுடைய நாயனார் கோவிலில் நந்தாவிளக்குவைத்த சாசனத்தால் விளங்குகிறது.

ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழற்கு ஆண்டு ௩ச-வது அமராபரண சீய கங்க நம்பிராட்டியான அரிய பிள்ளை திருவல்லமுடைய நாயனார்க்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றும் நாச்சியார்க்கு வைத்த விளக்கிரண்டுக்கும் - - - -

S. I. I. Vol. III Part I. P. 122 - 123.

பவணந்தி முனிவர்

கங்கக் குரிசி லுவக்கநன் னூலைக் கனிந்துபுகல்
தங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்

கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கு
மங்குற் பொழிற்சன காபுர முங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சீயகங்க அரசன் மனமுவக்குமாறு, நன்னூல் என்னும் இலக்கண நூலைப்புகன்ற தமிழ்ப்புலமை நிரம்பிய பவணந்தி முனிவர் பிறந்து வளர்ந்த குறும்பி நாட்டில் ஆதிநாத தீர்த்தங்கரர் விளங்குதலான சனகாபுரம் (சீனபுரம்) கொங்குமண்டலம் என்பதாம். (சுஎ)

வரலாறு:—கொங்கு மண்டலத்தில் குறும்பி நாட்டில் சனகாபுரம் (சீனபுரம்) என்னும் ஊரில் பிறந்து வளர்ந்தவர் பவணந்தி முனிவர். ஆனாலிவரைத் தொண்டைமண்டல சதகத்தே,

(மேற்) தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியுஞ்
சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூ புரத்திரு வன்னமின் னேதொண்டை மண்டலமே.

எனக் காணப்படுகிறது. பவணந்திமுனிவரது ஊரைப்பற்றிய விசாரிப்பில் ஒன்றிற்கொன்று முரண்படுவதால் ஒன்று கொள்ளப்படவும் மற்றொன்று தள்ளப் படவுமாக ஏற்படுமே எனச் சிலர் சங்கிக்கலாம். மேற் கூறிய இரண்டு மண்டல சதகச் செய்யுட்களும் கொள்ளத்தக்கனவே ஆம். கொங்கு மண்டல சதகத்தே "பவணந்தி மாமுனி தோன்றிவளர்.........சனகாபுரம்" என்று கூறுவதால் அவர் பிறந்து வளர்ந்த வூர் இது வென்றும், சனகையிற் சன்மதி மாமுனி தந்த மைந்தன் எனத் தொண்டைமண்டல சதகத்தே கூறுவதால் சனகைப் பதியினரான சன்மதி முனிவரது புத்திரர் எனப் பொருள் ஆகின்றது. இப்பவணந்தி துறவறத்தினர் என்பதை "பவணந்தி - என்னு நாமத் திருந்தவத் தோனே. (நன்னூல் சிறப்புப்பாயிரம் 22 அடி.) என்பதும் நந்தி முனிவர் என வழங்கப்படுதலும் இதனை வலியுறுத்துகின்றன. ஜைனருள் துறவினர் நந்தி என்று வழங்கப்படுதலை வச்சணந்தி அச்சணந்தி என்னும் பெயர் வழக்குகளாலும்,

(மேற்) கனக நந்தியும் புட்பநந்தியும் பவண நந்தியும் குமணமா
சுனக நந்தியுங் குனக நந்தியுந் திவணநந்தியும்,

எனச் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாலவாய்த் தேவாரப் பாசுரங்களானுந் தெரியப்படுகிறது ஆகலின் சன்மதிமாமுனியும், பவணந்தி முனிவரும் துறவிகளான தால் ஞானபிதாவும், ஞான புத்திரருமாவார்கள். எனவே பவணந்தி பிறந்து வளர்ந்தது கொங்கு மண்டலமும், சன்மதி முனிவரிடம் உபதேசம் பெற்றுத் துறவு பூண்டிருந்தது தொண்டை மண்டலமுமாகக் கொள்ளல் வேண்டும்.

**பவணந்தி முனிவர்** பிறந்து வளர்ந்த (சீனபுரம்) சனகை என்பது கோயமுத்தூர் ஜில்லா ஈரோடு தாலூகாவில் பெருந்துறை ரயில் ஸ்டேஷனுக்குச் சமீபத்தி லிருக்கிறது. இவ்விடத்தில் ஆதிநாத தீர்த்தங்கரர் கோயிலிருக்கிறது. ஜைனப் பிராமணர்கள் இன்னும் பூசித்து வருகிறார்கள்.

**சன்மதி முனி**வரைக் குறிக்கும் சனகையென்கிற சனநாத புரமானது காவேரியின் வடகரையிலுள்ள மாவிலங்கை யாக வேண்டும். இப்பொழுது மைசூர் ஜில்லா திருமுக்கூடல் நரசபுரந் தாலூகாவைச் சேர்ந்தது அந்த கிராமம். இது கங்க ராஜ்ஜியத்திலேயே இருக்கிறது இதற்கும் கங்க நாட்டுப் பழய ராஜதானியாகிய தலைக்காட்டுக்கும் இடையே காவேரிநதி யிருக்கிறது இதைக் குறித்து சாசனங்களில் அடியில் வருவாறு காணப்படுகிறது.

I. முடி கொண்ட சோழமண்டலத்து கங்கை கொண்ட சோழவள நாட்டு இடை நாட்டு ஜனநாத புரத்து -

II. கங்க பாடியான முடிகொண்ட சோழ மண்டலத்துத் தென் கரை இடை நாட்டு மாயிலங்கையான ஜனநாத புரத்து -

III. கங்கபாடி தென் கரை யிடை நாட்டு -

IV. பெரிய நாட்டு மா யிலங்கையான ஜனநாதபுரத்து -

## நளிர் சுரம் நீங்கியது

திருக்கூட்டத் தாரையுஞ் சேர்ந்த நளிர்சுரந் தீரவன்பின்
பெருக்காக "வவ்வினைக் கிவ்வினை யாமெனப்" பீடுபெறத்
திருக்காழிப் பிள்ளையார் நற்றமிழ் பாடவத் தேயமுற்றும்
வருத்தாதந் நோயின்னும் நீங்கிய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சீகாழிப் பிள்ளையாராகிய சம்பந்தமூர்த்தி நாயனார் திருச்செங்கோடு என வழங்குந் திருக்கொடி மாடச் செங்குன்றூர்க்குத் திருக்கூட்டத்தாருடன் எழுந்தருளியபொழுது நளிர் சுரம் அடியார்களையும் தீண்டவே "அவ்வினைக் கிவ்வினையாம்" என்ற தொடக்கத்த தான தேவாரப் பதிகத்தைப் பாடி அவ்வூரே அன்றி அந்நாடு முற்றிலும் அவ்விஷ நோய் நீரும்படி ஓதப்பெற்றதும் கொங்கு மண்டலம் என்பதாம். (சஅ)

வரலாறு :— சீகாழியில் அவதரித்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் பல நாடுகளிற்சென்று தேவாரப் பதிகங்கள் பாடிக் கொண்டு கொங்கு நாட்டிற் காவேரிக்குத் தென் கரையிலுள்ள ஆலயங்களைத் தரிசனஞ் செய்து கொண்டு வடகரையிலுள்ள திருச்செங்கோடு என வழங்குங் கொடி மாடச் செங்குன்றூருக் கெழுந்தருளினர். தேவாரம் பாடி அர்த்தநாரீசுரரைத் தரிசித்துப் பொன்னி நதிக்கு

மேலைப் பாலில் திருநணா முதலிய தலயாத்திரை செய்து கொண்டு மறுபடியும் திருச்செங்கோட்டுக்கு எழுந்தருளினர். அப்பொழுது பனிப் பருவம் வந்தது. பலநாள் அங்கு வசித்திருந்தமையால் அந்நாட்டில் அக்காலத்து வருந்தும் குளிர் முன்னான சுரம் திருக்கூட்டத்தாரையும் பிடித்தது. அறிந்த ஞான சம்பந்தப் பெருந்தகையார், "அவ்வினைக் கிவ்வினையாம்" என்ற பதிகத்தைத் தொடங்கி அடியார்களைத் தீண்டப்பெறா என்று ஆணை வைத்துத் திருநீலகண்டப் பதிகத்தை ஓதியருளினார். உடனே திருக்கூட்டத்தாரை அன்றியே அந்நாட்டிலும் அந்நோய் நீங்கி விட்டது. இந்தத் திருநீலகண்டப் பதிகத்தை மந்திரமாக ஓதி விபூதி பூசினும் நாளும் குளிர் சுரம் நீங்கிப்போம் என்பது அன்பர்களின் நம்பிக்கை.

(மேற்) அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மதுவறியீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம்பி ரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்.

சிவப்பிரகாசர்.

பண்பார் சிவப்பிர காசனைத் தூற்றப் பழித்தவர்முன்
நண்பாக 'வில்லார் பொதுச்சபை யின்வித்த கா' வெனவோர்
வெண்பாச் சொலநற்கல் விடபங் கடலையை மென்று தின்னும்
வண்பா வலர்வரு செங்கோடை யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சிவப்பிரகாசரை அறிவிலாப் பொல்லார் பழித்தாரெனா. அவர்கள் நேரிற் பார்த்திருக்கவே "வில்லார் பொதுச் சபையின் வித்தகா" என்ற வெண்பாவை ஓதியருளக், கல் இடபமானது எழுந்து, வைத்த கடலையை மென்று தின்ற மகிமை பெற்ற திருச்செங்கோடு கொங்கு மண்டலம் என்பதாம். (ருக)

வரலாறு:— நவகோடி சித்தவாச புரமான திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருந்த சிவப்பிரகாசர் திருச்செங்கோட்டுக்கு எழுந்தருளினார். அவர் வருவழியிற் செய்த அற்புதங்களைக் கேள்வியுற்ற அக்கோயிலில் வந்தாரிற் சில அறிவிலிகள் அற்புதம் செய்திருப்பீரேல் (ஸ்ரீ அர்த்தநாரீசுரர் திருமுன் துஜஸ்தம்பத்தருகிலுள்ள) இந்தக் கல் இடபம் எழுந்து, நாங்கள் வைக்கும் கடலையை உண்ணட்டும் பார்க்கலாம் என இழிவுரையாடினார்கள். இதனைப் பொறாது தம் ஆசிரியரை அடியார்கள் வேண்டினார்கள். சிவபெருமான் அருளுளதேல் இது ஒரு பெரிதோ என்று விபூதியைக் கையிலெடுத்துக் கொண்டு, "வில்லார் பொதுச் சபையின் வித்தகா" என்னும் முதலையுடைய வெண்பாவைக் கூறவே, எழுந்து அவர்கள் திடுக்கிடும்படி முக்காரமிட்டு, வைத்த கடலையை உண்டு பழைய படியே படுத்தது.

(மேற்) வில்லார் போதுச் சபையின் வித்தகா நீயுமுனங்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை
கட்டுரையே யாயினிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்ட இவர் முன்றினச்செய் யே.—(அத்துவிதவெண்பா முகவுரை)

பொன்னின் மழை பொழிந்த தெங்கள் நாடு—வண்ணப்
பூமலரின் மாரிமிகப் பொழிந்த தெங்கள் நாடு
கன்னி யுமைக்கிடம்பகர்ந்த நாடு—கல்ல
கல்லிடபங் கடலை தின்று சொல்லுயர்ந்த நாடு
—(திருச்செங்-குறவஞ்சி.)

வேலூரிலிருந்த விருபாக்ஷிராயர் மந்திரியைக் காணுமாறு வீர சைவ தீக்ஷை இவர் பெற்றதாகச் சரித்திரங் காணப்படுகிறது. இதனால் இது நடந்தது இவ்வரசர் காலமாகிய கி. பி. 1467 முதல் 1485-க்கு இடைக் காலமாக இருக்க வேண்டும். இச்சரித விரிவு அத்வைத வெண்பா - திருச்செங்கோட்டு மான்மியத்திலும், சேலம் ஜில்லா கஜட்டியரிலுங் காணலாம்.

வேலவன். மேய்ப்போனுக வந்தது.

பெருமை மிகு "மர வச்சிலம் பாமெனிற் பெட்புறுமவ்
வரவு படம்விரித் தடாததென்" னென்றகத்துணுமோர்
கருவி வெருக்கொள வாமேய்ப் பவனைக் கனிந்துதிரு
மருகன் மயில்கொத்து மென்றெனச் சொல்கொங்கு மண்டலமே.

(க - ரை) இது நாகமலையானால் இந்த நாகம் படத்தை விரித்து ஆடாமலிருக்க வேண்டிய காரணம் என்ன? என்று, அகங்காரங் கொண்டுவந்த புலவன் திடுக்கிடும்படி (செங்கோட்டு வேலவர்) மாடு மேய்ப்போனாக நின்று, இலக்குமியின் மருமகனாகிய முருகக்கடவுளினது வாகனமாகிய மயில் மலையின் பேரிலிருப்பதால் கொத்தி விடுமென்று பயந்து ஆடாமலிருக்கிறது என்று விடையளித்ததும் கொங்குமண்டலம் என்பதாம். (ருo)

வரலாறு :—பாண்டி நாட்டில் திருக்குருகூரில பிரதிவாதி பயங்கரன் எனப் பிரபல பண்டிதன் ஒருவன் இருந்தான். அவன் தேச சஞ்சாரஞ் செய்து அங்கு அங்கு உள்ள சமஸ்தானங்களிற் சென்று அவ்விடத்துள்ள வித்வான்களிடத்துத் தர்க்கித்துச் சயங்கொண்டு அப்புலவர்கள் பொருள்களையும் நூல்களையும் கொள்ளை கொண்டு வருவன். அவன் திருச்செங்கோட்டு எல்லையில் வந்து தன்முன் பாம்பு வடிவமாகத் தோற்றும் நாகாசலத்தை நோக்கிப் பல்லக்கி லிருந்தபடியே,

(மேற்) சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமென
வரைபிற் படம்விரித் தாடாத தென்னை?

என இரண்டாமடியினை முடிக்க இயலாது சிறிது நேரம் மயங்கினன். இதன் முன்னே அங்ககாத்துக் குணசீலன் என்னும் வித்துவான் இந்த பிரதிவாதி பயங்கரன் விடுத்த ஓலையைக் கண்டு பயந்து செங்கோட்டு வேலர் திருவடியைத் துதித்து நித்திரை கொண்டான். கனவில் ஒரு வித்துவானுகக் குமரக்கடவுள் தோன்றி அன்பனே அஞ்சாதே பிரதிவாதி பயங்கரனைப் பயமுறுத்தி ஓட்டி விடு கிறேன் என்று கூறி மறைந்தனர். அவ்வண்ணமே மாடுமேய்ப்பவனுகப் பாண்டி நாட்டுக் கவிராயன் முன்னின்று,— அஃதாயிந்நிலை யோ

நமரின் குறவள்ளி பங்க னெழுகரை நாட்டுயர்ந்த
குமரன் திருமரு கன்மயில் வாகனங் கோத்துமென்றே

எனப்பாடி முடித்தனன். இதனைக் கேட்ட பிரதிவாதி பயங்கரன் ஒன்றுந் தோற்றாது திகைப்புற்று பல்லக்கினின்று கீழே இறங்கி நாம் மனதினினைத்த கவித்துறையை நிமிஷத்தில் முடிவு செய்தனனே, இவன் தெய்விகக் கவிஞனுக இருக்கிறுன் ; தொழிலோ மாடுமேய்க்குந் தொழிலாக இருக்கிறது. இவன் முகத்தில் சரசுவதி நடனம் புரிகிறுள் எனச் சிந்தித்து அப்பா! உன் வரலாறு என்ன ? புகல வேண்டுமென்றனன். கவிஞரே! இத்திருச்செங்கோட்டில் குணசீலன் என்னும் வித்துவானின் கடை மாணுக்கன். கண்ட சுத்தி பாடுவதில் தாமதமுடையவன் என்றனன். நன்கு கற்ற வித்துவானுக இருந்து மேய்க்குந் தொழிலை நீர் வகுத்த காரணமென்னை எனவே, புலவரே, எல்லா வுலகத்துமுள்ள உயிர்வகைகளில் பசுக்களைப் போன்ற உபகார ஜன்மமுள்ளவை ஒன்றுமில்லை. எல்லாத் தேவர்களும், எல்லாப் புண்ணிய நதிகளும் பசுவுருப்பில் பொருந்தியுள்ளன. அதன் மலமும் ஜலமும் பரிசுத்தமாக்கத்தக்கது என்பதை அறிந்திருக்கிலீர்போலும் எனப் புகன்றனர். இதனைக்கேட்ட பிரதிவாதி பயங்கரன் மனம் நடுங்கி இவனே இவ்வளவு ஆகம சாஸ்திர ஆராய்ச்சியும் நினைவு அறியும் ஆற்றலுமுடையவனுயின் இவனது ஆசிரியர் எத்தன்மையாக இருப்பர் என்று பல்லக்கைத் திருப்பிக்கொண்டு போய்விட்டான்.

இக்கதையின் விரிவு திருச்செங்கோட்டு மான்மியத்திலறியலாம்.



ஆனூரர்ச்சர்க்கரை

திருத்து புகழ்பெறு மானூரிற் சர்க்கரை செங்கதிர்போல்
விருத்தமுட னன்னை மேலேறத் தாய்வெகு ளாமலின்பம்
பொருத்த முடன்பத்து மாதஞ் சுமந்து பொறையுயிர்த்தாய்
வருத்த மிதிலென்ன வென்ருனவன்கொங்கு மண்டலமே.

(க - ரை) பெருகிய புகழ்பெற்ற ஆனூர்ச் சர்க்கரை என்பான் தாயார் அன்னம் பரிமாற, உணவருந்தும் புலவோர்களில் ஒருவன், அவ்வன்னை முதுகின்

மீதேறினன். இக்கொடிய செய்கைக் காற்றாத தாய் தன் பிள்ளை முகநோக்க, பிள்ளை அம்மா! என்னை பத்துமாதஞ் சுமந்திருந்த தாங்கள், இப்புலவரைச் சிறிது நேரஞ் சுமக்கலாகாதா? எனக் கூறிய சர்க்கரை யென்பானும் கொங்குமண்டலம் என்பதாம். (௫௩)

வரலாறு:—கல்வி, அறிவு, சீலம், சான்றாண்மை, அன்பு, தவம், மெய்ப்பக்தி, ஜீவகாருண்யம், பரோபகாரம், ஈகை முதலிய உத்தம குணங்களில் தலைசிறந்து புலவோர் புகழ்ந்து பாடப், புகழ்ச்சிக்குரியராய்த் தொண்டை நாட்டுச் செங்குன்றையூரில், 'எல்லப்பன்' என்னும் பெயர் வாய்ந்த உபகாரி ஒருவர் வாழ்ந்து வந்தனர். இச்செல்வரின் சிறந்த கொடைமடமும், தமிழபிமானமும் எங்கும் பிரசித்திபெற்றிருந்தன. இவர் பெருமையைப் புகழ்ந்து பாடாத புலவர்கள் இல்லையென்றே சொல்லல்வேண்டும். இவ்வுண்மையை அடியில் வரும் பாடல்களாலறியலாம்.

(மேற்) புறவோ டேற்றுகை போக்கிய வேந்தன் புரிந்ததினு
மறவோ சொடிது கொடிதுகண் டீற னன்றுமற்றுப்
பிறவோ மறுத்துரை செய்யான் மிகச்சிரம் பேர்த்துவைத்த
மறவோனைத் தாங்கிய வையமன் றேதொண்டை மண்டலமே.

தலையிந் தாவேனு மைந்தா தடலோ தாலேலோ
சுகம் குன்றைப்பதியெல்லா தாலோ தாலேலோ

ஆலேங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலு
மாலேங்கே யங்கே மலர்மடந்தை—சோலை தோறுஞ்
செங்கே தகைமணக்குஞ் செங்குன்றை யெல்லனெங்கே
யங்கே யிரவலரெல் லாம்.

இங்ஙனம் புலவர் புகழ்ந்து பாராட்டும் கொடைத்திறனுஞ் சிறந்தவள்ளல் பெருந்தகையாரிடத்துக் கொங்கு நாட்டில் நொய்யல் நதி வளப்பத்தாற் சிறந்த காங்கேய நாட்டு ஆனூரில் பெருஞ் செல்வமும் அருங்கொடையும் பொருந்திக் கொங்கு நாட்டுவெள்ளாள என்னும் சிறப்புப் பெயருக்கு உரியராய்ப் புகழ்மலிந்த சர்க்கரையார் சமஸ்தானத்துப் புலவர் ஒருவர். சன்மானம் பெறும்பொருட்டுச் சென்றனர். புலவர் அருமை பெருமைகளையும், தமிழறிவினையும் எல்லப்பன் உணர்ந்து மிக மகிழ்ந்து தகுந்த வரிசையளித்தனர். புலவர் தியாகம்பெறு முறைக்கு மாறாக இடதுகையை நீட்டினர்; எல்லப்பன் புலவரை நோக்கிச் சன்மானம் பெறும முறைமையை இன்னமும் நீர் அறிந்திலீர்போலும் என, புலவர் சீமானே! நன்றாக அறிந்துளேன்; ஆனால், அடர்ந்த பொறையும், தமிழறிவும், ஈகைக்குணமும், ஒருங்கே நிறைந்து அன்பு சிறந்த சர்க்கரையின் சமுகத்தில் தியாகம்பெற்ற வலக்கை, பிற வெளிடத்தும் நீட்டுதற்கு இசையாது என்றொழிந்தனர். பெருந்தகை மகிழ்ந்து அவர் சமுகத்திற்

இடது கை நீட்டியதற்குக் காரணம்; ஆதலின் சினங் கொள்ளலாகாதென்றனர். இது கேட்ட எல்லப்பன் வியந்து அந்நங்கையின் மெத்தச் சந்தோஷம். அவ்வள்ளலின் உதாரகுணம், பெருகிய அன்பின்றிறம், பொறையின் உண்மை நிலை முதலியவைகளை அறிந்து வருமளவும் தாம் நமது விருந்தினராக இருந்துவருக. என்றுஞ்ஞாபித்துத் தமது சமஸ்தானத்துப் புலவர்களில் சில வல்லவர்களைத் தேர்ந்து சர்க்கரையாரின் குணஞ் செயல்களை அறிந்துவருமாறு அனுப்பினர். அவர்களும் அவ்வாறே அறிந்து வருவதாகக்கூறிக் கொங்குநாடடைந்து, சர்க்கரையாரின் அழகிய பூந்தோட்டத்திற் புகுந்து அருமையாக வளர்க்கப்பெற்றிருந்த உயர்ந்த, செடி கொடிகளை யெல்லாம் தாறுமாறாக வெட்டினார்கள். இதுகண்ட காவலாளர், புலவர்களின் செய்கைகோற்றது தமது தலைவரிடத்துச் சென்று அறிவித்தனர். கேள்வியுற்ற மன்றாடியார் காவலாளிகளை நோக்கி அவர்கள் புலவர்களாயின், அவர்களுக்கு இன்சொல்கூறி, இன்னல்செய்யாது, என்னிடத்து விரைவில் அழைத்து வாருங்கள் என்று உத்தரவிட்டனர். கட்டளைப்படியே காவலாளரும் புலவர்களை அன்பாக அழைத்து வந்தனர். அவர்களுக்கு நல்வரவு கூறி, இருக்கை நல்கி, இன்மொழி புகன்று, அருந்தமிழுணர்ந்த பெருந்தமிழ்ப் புலவீர்! பூஞ்செடிகள் ஒவ்வாதனவாயின் ஏவலாளரையிட்டு வெட்டுவிக்கலாமே, கற்கவிழைத்த கணையாழிகளையும், கனக தோடாக்களையும் பூண்டு புராணேதிகாசங்களைத் தொடும் தொழிலையுடைய திருக்கரங்கள், கடின கோடரி, அரிவாள் முதலிய ஆயுதங்களைத் தொட்டு வருந்தலாமோ, கைகள் வலிக்குமே, என முகமன்கூறி உயர்ந்த தைலங்களைக் கைகளுக்குத் தடவி வென்னீராட்டுவித்தனர். புலவர்கள் அம்மட்டில் அடங்காது, இன்னும் நன்கு சோதிக்க நினைந்து, அருமையுறப்படைத்த விருந்தில் வீற்று உணவருந்திக் கொண்டிருக்கையில், அன்னம் பரிமாறி உபசரித்துக்கொண்டிருந்த சர்க்கரையாரின் *அன்னை முதுகின்மீது ஒரு புலவர் ஏறினர். திடுக்குற்ற தாயார் தன் மைந்தன் முகநோக்கினர், என் அம்மையே! அந்திபகல் சிரமங் கருதாது கொங்கிசரிய என்னைப் பத்துமாதஞ் சுமந்திருந்த தாங்கள், இப்புலவரைச் சிறிதுநேரஞ் சுமத்தலாகாதோ! தங்கள் பொறுமை எங்கொளித்தது என்றனர். இதுகேட்ட புலவர் சட்டெனக் கீழிறங்கிப் பொறையே உருவுகொண்ட தாதாவையும், அப்பிரபுவைப் பெற்றெடுத்த பெருந்தேவியையும், தங்கள் திருந்திய நாவால் பலபடியாகப் புகழ்ந்து நன்றாக வாழ்த்தித் தங்கள் அன்பையும், பெருகிய ஆதரவையும், அளித்தற்காகவே நாங்கள் இத்தகாச் செய்கை செய்தோம்; எங்கள் குற்றத்தை மன்னித்தருளல் வேண்டும். நாங்கள் தொண்டைநாட்டுப் பெருந்தியாகியாகிய குன்றை எல்லப்பன் என்பார் சமஸ்தானத்துப் புல

---

*“அன்னைவெரிந் மேற்கொளச்சே யானனத்தை நோக்குதலும்
என்னை யீரைந்துதிங்க ளின்பாய்ச் சுமந்தீரே
இவரை யொருகாலிட மேசுமப்பீர் என்றுரைத்த.”

(நல்லதம்பி சர்க்கரை காதல்.)

வர்கள் என்று கூறினர். சர்க்கரையாரும் பிறருங்கேட்டு மகிழ்ந்து "தொண்டை நாட்டார் சோதனைகளுக்குக் கொங்குநாட்டார் ஆற்றவல்லரோ" என்று கனிவான இன்னுரைபுகன்று அவர்களுக்குத் தக்க சன்மானமளித்து வழியனுப்பினர். விடைபெற்ற புலவர்கள் எல்லப்பன் சமுகஞ்சேர்ந்து :—

> செங்குன்றை யெல்லாநின் செங்கைக் கொடையசனுக்
> கெங்கெங்குந் தேடி யிணைகாணேங் —கொங்கதனிற்
> சர்க்கரையைப் பாடலாந் தண்டமிழ்க்கோன் நீயாத
> எக்கரையாம் பாடோ மினி.

என அழகிய ஒரு வெண்பாக்கூறித் தாங்கள் சென்றது முதல் திரும்பிய வரையும் நடந்த விவரங்களை யுரைத்து அருமை பாராட்டினர். அதன் பின் தமது விருந்ினராக விருந்த கொங்குநாட்டுப் புலவரை அழைத்து நீர் நுமது பிரபுவைப் பற்றிப் பெருமை கூறியது முற்றிலும் பொருந்தும் என்று கூறி, அவர் வெறுக் குந்தனையும் வேண்டிய பொருள்கள் சன்மானித்து வழிவிடுத்தனர் என்ப.

ஆணூர் என்பது நொய்யல் நதிக்கரையை யடுத்த ஓர் சிற்றூர். இதனை யொட்டி (நத்தக்) காரையூர், பழையகோட்டை என்னும் ஊர்கள் இருக்கின்றன.

## ஆணூர்ச் சர்க்கரை காய்ச்சிய நெய்யிற் கையிட்டுச் சத்தியஞ் செய்தல்.

> முகஞ்சோர்ந் தகன்றிடு மேகாலிப் பாவலன் முன்னநின்றே
> யிகழ்ந்தே னிலையய வென்று சுடுநெ யினிற்கையைவிட்
> டுகந்தே யுணுமெச்சில் வாயைக் கழுவி யுவப்பியற்றி
> மகிழ்ந்தே புகழ்பெறு சர்க்கரை யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) தன்னை இகழ்ந்ததாகக் கேள்வியுற்று முகம் வாடிச்சென்ற வீர பத்திரன் என்னும் ஏகாலியர் குலத்துதித்த புலவனைப், பின் தொடர்ந்துபோய் மறித்து நின்று உம்மை இகழவில்லையென்று கொதிநெய்யிற் கையைவிட்டுச் சத் தியஞ் செய்து, அப்புலவன் எச்சில் வாயைக் கழுவி அப்புலவனை மகிழ்வித்த சர்க் கரை யென்னும் உபகாரியுங் கொங்குமண்டலம் என்பதாம். (௫௨)

வரலாறு ;—கீழ்கரைப் பூந்துறைநாட்டில் திருச்செங்கோடு என்னும் நகரில் ஏகாலியர் (கொங்கவண்ணார்) மரபில் வீரபத்திரன் என்னுந் தமிழ்ப்புலவர் ஒரு வர் கேள்விகளில் வல்லுனராய் வாழ்ந்தனர். "நான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்" என்றவாறு தான் அடைந்துள்ள கல்வி நலனை உலகினர்க்கு ஊட்டுமாறு பல நாடுகளுக்குச் சென்றனர். தமிழை வளர்க்குந் தாயனைய தன் மையனெனக் கேள்வியுற்றுக் காரையூரையடைந்து நாட்டுத் தலைவனான சர்க்கரை

என்பாரை நோக்கினன். அவ்வுபகாரி பெரிதும் உபசரிக்க மகிழ்ந்திருந்து அளவளாவிச் சல்லாபமாடினர். சற்று விடைபெற்று உட்புகுந்த மன்றாடியார் செய்வினை முடித்துக்கொண்டு அமுது படைத்தற்கு ஏற்றன செய்தனர். மனையுளிருந்து முன்றிலில் வந்தாரொருவன் கவிஞரை நோக்கி ஐயா, தங்களுக்கு அடிசில்படைக்கச் சற்று நாழிகையாம் என நினைக்கிறேன் என்றனன். நம்மைப்பற்றி உள்ளே யாதோ இழிவுரை நடந்திருக்கிறது, அதனாற்றான் இவன் வலிய நம்மிடஞ் சொன்னான் என நினைந்து மதிப்பற்ற இடத்திற் புசிப்பது, வசிப்பது இழிவு என்று கொண்டு அவ்விடத்தை விட்டுக் கவிஞர் புறப்பட்டு நடந்தனர். உணவு படைத்த பின் புசித்தற்காகக் காமிண்டன் புலவரைத் தேடினன். நடந்து செல்வதைத் தெரிந்த ஆனூர்ச் சர்க்கரை விரைந்து சென்று புலவர் முன்னின்று, ஏனையா நடக்கிறீர்கள்; என்னகுறை நேர்ந்தது மன்னித்துத் தெரிவியுங்கள் என இரந்து கேட்டனர். மலர்ச்சிபெறாத முகத்துடன் புலவர் மன்றாடியாரை நோக்கி ஐயா, "எதிர்த்தோர்க்கு மிண்டன் வித்துவான்களுக்குத் தொண்டன்" என்ற விருது, உங்கள் முன்னோர் அடைந்திருக்கிறார்கள் எனக் கேள்விப்பட்டு வந்தேன். உரையாடி உட்சென்ற நீவிர் உணவருந்துவதாக உங்கள் ஊழியர்களால் கேள்வியுற்றேன். வந்தவர்களை உபசரித்து உணவு ஊட்டித் தான் புசிக்க வேண்டுவது நல்ல குடிப்பிறந்த அறிவினரின் கடமை. அன்றியும் உண்ணீர் உண்ணீர் என்று உபசரியார் இல்லத்திற் புசித்தல் தகாதெனத் திரும்பிவிட்டேன். ஒரு புலவன் ஒருவரிடஞ் செல்வது அவனுக்குக் கீர்த்தியை விளைப்பதற்கு ஆம். இதற்கு முன் புலவர் புகழ்ந்து பாடியிராவிடில் நான் ஏன் தேடி வருகிறேன். வரும் வழியில் எத்தனை லட்சம் மாந்தர்கள் இருக்கிறார்கள்? அவர்களிடத்துத் தங்காமல் உம்மைத் தேடி வந்தது தமிழபிமானமுள்ள இடம் என்பதுதானே? என முகஞ் சோர்ந்து கீழ் நோக்கிக் கூறினர். இதை யுணர்ந்த சர்க்கரையார், ஐயா புலவர் திலகமே, அறிஞர்களின் வடிவம், பிறப்பு முதலியவற்றை விசாரித்தல் மரபன்றே. ரிஷிகளின் தவஞானங்களைத்தானே தெரிந்து கொள்கிறார்கள்! புலவர்கள் பிரசங்கங்களாலும் நூல்களாலும் உலகிற்கு உபகரிப்பதுபோலப் பயன் விளைவிப்பார் பிறரில்லையெனல் அறிந்துள்ளேன். என்னைக் கவுரவிக்க வந்துள்ள தங்களை இகழவில்லையே என்று நெய்யைக் கொதிக்கவைத்து அதிற் கையைவிட்டுத் துழாவிச் சத்தியஞ் செய்தனர். பின்பு புலவர் ஒருவாறு திருப்தி கொண்டனர். அருகிருந்து இருவரும் உணவருந்தினர். ஐயா மன்றாடியாரே, நீர் சத்தியஞ் செய்தும் மனம் சமாதானமாகவில்லை. என்றாலும் அது உண்மையாயின் எனது எச்சில் வாயைக் கழுவி விடுவீரா? என்ற கவிஞர் மொழிக்கு மெத்த மகிழ்ச்சி கொண்டு புலவரது எச்சில் வாயையும் கையையும் சர்க்கரைப் பெருந்தகை யலம்பிவிட்டனர். புலவர் மெத்தவும் மகிழ்ந்து இவர் மீது கொண்ட பெருங்காதலால் ஒரு காதல் என்னும் பிரபந்தமியற்றி அரங்கேற்றினர். புலவர் மனமுவக்குமாறு பரிசில் உதவி மகிழ்வித்தனர் என்பர்.

(மேற்) இரகுநாத சேதுபதி சமஸ்தான தளவாய் அண்ணாமலை பிள்ளை மீது
பொன்னுங் காஞ்சி அமுதகவிராயர் கூறிய விருத்தம்.

சீரிலகுமான்மணிப் பாய்சுமந் தான்கம்பர் சிவிகைபாண்டிய னேந்தினன்
செல்வமுயர் கச்சியப் பன்உதை பொறுத்தனன் றிகழ்சுட்டி சோமனீந்தான்
தாரிலகு குமணனுந் தலைகொடுத்தான் சிவன் றானுமொரு தூதுசென்றான்
சர்க்கரையு மெச்சில்வாய் கழுவினன் காளத்திதனதிருகை புற்றிலிட்டான்.
பேரிலகு கம்பயனும் விரலாழி யீந்தனன் பெரியவன் பெண்கொடுத்தான்
பிணிமுகத் தான்கீர னைப்புரந் தான்பேதை முதுகிலன மொருவனிட்டான்
பாருலகி லித்தமிழ்க் குத்தொண்டு செய்தபேர் பார்க்கிற் கணக் கில்லையே
பரராசர் பணிகின்ற வண்ணா மலைக்குரிசில் பாதத்தை வருடினனே.

இவ்வமுத கவிராயர் ஒரு துறைக்கோவைபாடிய. இரகுநாத சேதுபதி கி. பி. 1647-முதல் 1662-வரை வாழ்ந்தவர் எனவே 300-வருஷங்களின் முன் இச்சரிதம் நிகழ்ந்திருக்கவேண்டும்.

மகிழ்ந்துகா ரைப்பதியில் வாழ்சர்க் கரைதான்
புகழ்ந்து திரிபுல வோரை - இகழ்ந்துநான்
வையவில்லை யென்றுசொல்லி மண்டலமெ லாந்துதிக்க
நெய்யிலே கையைவிட்டா னோர்ந்து.

—(செந்தமிழ்த்தொகுதி ௩-பக்கம் 22.)

தூசர்குல வாணனுக்கோர் சோர்வுரைக்க வில்லையென
நேசமுட னேகாய்ந்த நெய்யதனிற் கையைவிட்டோன்

—(நல்லதம்பி சர்க்கரை - காதல்.)

## சவுக்கடி பெற்றது.

மீறு முலகிலெட் டுத்திக்குஞ் சொட்டையில் வெல்லவல்லோன்
கூறுந்தென் காரையிற் சர்க்கரை வேந்தன் கொழுந்தமிழாற்
பேறும் புகழும் பெறவேண்டி நாவலன் பெற்றகையான்
மாறுஞ் சவுக்கடி பெற்றது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) எட்டுத் திக்குகளில் உள்ளாரையுஞ் சொட்டை யென்னும் ஆயுதத்தால் வெற்றி கொள்ளும் ஆற்றலுடையவனும் ஒரு புலவன் சவுக்காலடிக் கப் பொறுத்தவனுந் தென்றிசையில் விளங்குங் காரையூர்ச் சர்க்கரை யென்னுந் தலைவனுங் கொங்குமண்டலம் என்பதாம். (௫௩)

வரலாறு:—தென்னாட்டிற் புகழ்பெற்ற ஒரு புலவர் காரையூர்க்கு வந்து சர்க்கரையைப் பார்த்தார். இனிமையுறப் புசிப்பித்தனர். இருந்து சற்று உப

சாரமொழிகள் பேசிக்கொண்டே தாம்பூலத்துடன் நல்லாடை செம்பொன் வைத்த தட்டத்தை இரு கையாலும் எடுத்து நீட்டினார். இதனைப் பெற்று கவிராயர் பக்கத்திலிருந்த குதிரைச் சவுக்கை எடுத்து பளீர் பளீர் என்று தாக்கினார். அடியுண்ட பிரபு, புலவர் கையைப் பிடித்துக்கொண்டு ஐயா, ஒரு பிசகுஞ் செய்கிலேனே எனக்கெஞ்சினார். ஐய, நான் உம்மிடத்து எதன் பொருட்டு வந்தேன். நான் வாசித்துத் தேறியுள்ள நல்வழிகளைப் புகட்டுதற்கன்றோ? அவ்வாறு நினையாது, பணந்தண்ட வந்தவனாக மதித்துத் தட்டத்தில் பொருளை வைத்துக்கொடுத்தீரே, இதைவிட என்ன அவமதிப்பு வேண்டும் என்றனர். புலவர், கல்விக் கடலே, தாங்கள் கூறுவது உண்மைதான்; அதுவே எனக்கும் பிரியம். வழக்கமும் அதுவே; என்றாலும் இப்பொழுது வெகு முக்கியமான வேலையைக் கருதிப் பயணமாக இருக்கிறேன். தாங்கள் எழுந்தருளியாகாதிருந்தால் முன்னமே சென்றிருப்பேன். என்னை மன்னியுங்கள். சில நாள் இங்கு தங்குங்கள். நான் வந்து விடுகிறேன் என்றனர். புலவர் பெருமான் மனது வருந்தி ஐயா, தங்கள் முன்னோர்கள் தமிழ்ப்புலவர்களை மிகு மேன்மையாக மதிப்பவர்கள் எனக்கேள்விப்பட்டு வந்தேன். அக்குணம் தங்களிடத்து மிருப்பதை அறிந்துகொண்டேன். இக்கொடுஞ் செய்கைக்கு என்னை மன்னியுங்கள். இச்சவுக்கடி புகழைக்கொடுக்கும் எனப் புகழ்ந்து,

கட்டளைக்கலித்துறை.

(மேற்) கண்டாற் புலவரை மேனும்பு பேசுங் கசடரிட
மிண்டாநல் லுத்தமக் காமிண்ட னேவித்த வானகளுக்குத்
தொண்டா புலவர் சவுக்கடி யேற்ற சுமுககோடைத்
தண்டா மரைகையுந் தண்டா நலதம்பிச் சர்க்கரையே
—(பழம்பாட்டு.)

எனக் கூறினர்.

"கற்றுய்ந்த நாவலர்தன் கையிற் சவுக்கடியும்
பெற்றான் சயத்தம்பம் பேருலகில் நாட்டுவித்தோன்" —
—(நல்லசம்பிச் சர்க்கரை சாதல்.)

சொட்டை என்பது இருபுறமும் கூர்மையுள்ள ஒரு ஆயுதம்; அதில் வல்லோர்.

## சூரிய காங்கேயன்

வில்லாள ராகிய மூவேந்தர் போரின் வினைமுகத்து
நில்லா தகன்றிடச் செய்யாறை வாளை நிருபதியைக்
கொல்லாது பற்றிய பாண்டியன் முன்னங் கொணர்ந்து விட்ட
வல்லாண்மை மீறிய சூரிய னுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) தமிழ் நாட்டு மூன்று மன்னர்களையுந் திகிலடையும்படி செய்ய வல்ல ஆறகழூர் வாணனைப் பிடித்து, பாண்டியன் முன்னம் நிறுத்திய சூரியனுங் கொங்கு மண்டலம் என்பதாம்.

வரலாறு:— சேலஞ் ஜில்லாவும் ஆற்காடு ஜில்லாவும் சந்திக்கிற இடத்தில் ஒன்றினுள் ஒன்றாக ஆறு அகழிகளால் சூழப் பெற்றதான ஆறகழூர், மகத மண்டலம். (அது மலாடு—ஜனனுதவள நாடு) அவ்விடத்து மாவலிவாண வமிசத்தானை வாணை அரசனானவன் பராக்கிரமத்தோடு அரசாண்டு வந்தான். மகதம் என்னும் நடு நாட்டதிபதியானதால் மகதைப் பெருமாள் என்னும் மற்றொரு பெயரும் உள்ளான். இவன் சேர சோழ பாண்டியர்களான மூவேந்தரையும் மதிப்பதில்லை. குறும்பு செய்வன். ஆனால் பல வித்வான்களால் புகழ்ந்து பாடப் பெற்றுள்ளான். இவனை யாரேனும் பிடித்துத் தன் முன் அடக்கி நிறுத்துவரேல் வேண்டுவன உதவுவேன் எனப் பாண்டியன் பறைசாற்றுவித்தான். கீழ்கரைப் பூந்துறை மோரூர் கணக்கு குலத்தானை சூரியன் என்னுஞ் சேனை வீரவாலிபன், இதனை முடிப்பதாக முன் வந்தான். தனக்கு வேண்டிய சாதனங்களைப் பெற்றுப்போய் ஆறகழூரில் மாறுவேடம் பூண்டு உளவறிந்திருந்தான். சமயம் வாய்த்தபொழுது உடன் வந்த துணையாளர்களுடன் பல்லக்குத் தூக்கிகளாய் எடுத்தபடியே மகதை எல்லை கடந்து கொண்டு வந்து விட்டான். இடையே வைக்கப்பட்டிருந்த பாண்டி வீரர்கள் சேர்ந்து கொண்டார்கள். மலைமேற் சுற்றுக் கோட்டைகளுள்ள சங்ககிரி துர்க்கத்திற் பாண்டிய ராஜன் முன் கொண்டு வந்து நிறுத்தினான்.

ஆறை வாணனைக் குறித்த செய்யுட்கள் திருவண்ணாமலை அருணாசலேசுரர் ஆலய முதற்பிராகாரத்து வடவண்டைச் சுவரில் செதுக்கப்பட்டுள்ளன. அவற்று

"கொங்குங் கலிங்கமுங் கொண்டகண் டாகொடித் தேருதியர்
தங்கும் படிகொண்ட வாணாதிபா தணியாத தென்கோல்
பொங்குஞ் சினப்படை வங்கார தொங்கன் புரண்டு விழச்
செங்குன்ற மின்று பிணக்குன்ற மாக்கிய தேர்மன்னனே."

இவனைப் பற்றிய சாசனம் ஆறகழூர் காமநாதேசுரர் ஆலயத்துமிருக்கிறது. கி. பி. 1178-ல் இருந்திருக்கிறான். அப்பொழுது மூன்றாங் குலோத்துங்கன் காலம்.

சூரிய காங்கேயனைப்பற்றிய செய்யுட்கள்.

(மேற்) மிண்டாற வாணனைமுன் வெட்டாமற் பாண்டியனோர்
கொண்டுவந்த நிற்கவிட்ட கொற்றவனு நீயலையோ
தெண்டிரைசேர் மோரூரிற் றென்னன்மகு டாசலனே
மண்டலிகர் தேர்ந்துமெச்ச வாழ்சூரிய காங்கேயனே,"

—(பழம்பாட்டு)

பூதத் துணைகொண்ட போர்வாணன் மாறனிரு
பாதத் துணைகாணப் பண்ணினோர் — ஓதுமிசை
ராமா யணங்கேட்டோர் நவலர்வைப் புப்பொருளாங்
கோமான்வாழ் மோரூர் குடி.—(பழம்பாட்டு.)

மோரூர்க்காங்கேயர் சம்பந்தமான பல பிரபந்தங்களுள் இவ்வரலாறு வருகிறது.

இந்தச் சூரியன் என்பவனுக்கு காங்கேயன் என்ற பட்டம் கொடுத்து எழுகரைநாடு அடங்கிய **வடகொங்கு மன்னவன்** என்றழைத்தான்; அதிகாரமும் கொடுத்தான். இதற்கடையாளமாக **வடகொங்குபட்டன்** என்று ஆகுடிப் பெயர்கொண்டு வாழும் புலவரிருக்கிறார்கள்.

விரகற நோக்கியு முருகியும — என்ற திருப்புகழில்—

" இமயவர் நாட்டினில் நிறை முடியேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே."

இந்நூல் 80-வது செய்யுளின் கீழ், எபிகிராபி 1906-வருஷாந்த ரிபோர்ட்டு பக்கம் - 35 - 36. பார்க்க.

## ஆதி சைவர்கள.

குலசேகரன்குலோத் துங்கசீர்ச் சோழர்கள் கொங்கிடைமெய்த்
தலபூசை நன்குறத் தன்னாட் டுளாரிற் சமர்த்தர் கண்டு,
நிலையான காணியு மேன்மையு மீய நிதானமுறு
வலவாதி சைவர்கள் வாழ்வதன் றோகொங்கு மண்டலமே.

(க - ரை) குலசேகர சோழன், குலோத்துங்க சோழன் ஆகிய சக்கிரவர்த்திகள் கொங்கு நாட்டின் ஆதிக்கம் பெற்றுள்ள காலத்தில், அந்நாட்டிற் சிறந்த தலங்களில் ஆலய பூஜை ஆகமோக்தமாக நடத்தக் கருதித் தன்னாட்டுள்ள வல்லவர்களை அழைத்து காணி பூமியும் பெருமையும் கொடுக்கப் பெற்றவர்களான ஆதிசைவர்கள் விளங்குவது கொங்கு மண்டலம் என்பதாம். (அஎ)

வரலாறு:— கோ ராஜகேசரி வன்மஞன (முதல்) ராஜ ராஜதேவர் என்பவன் தஞ்சாவூரை ராஜதானியாகக் கொண்டு மிகுந்த பராக்கிரமத்துடனும் நீதியுடனும் ஆட்சி புரிந்தான். பராதீனப்பட்டுக் கிடந்த சோழராச்சியத்தை உயர் நிலைக்குக் கொண்டு வந்தவனிவனே. கங்கபாடி, நுளம்பபாடி, வேங்கி நாடு, குடகு, ஈழம் முதலிய ராச்சியங்களை வென்றனன். மூவேந்தர் தமிழ் நாட்டுக்கும் அதிபன் என்பது தோன்ற மும்முடிச் சோழன் என்னும் பெயருண்டாயிற்று. ஆலயங்

களிலெல்லாஞ் சிறந்ததாக இருத்தல் வேண்டுமெனக் கருதி, கண்டோர் அதிசயிக்கத்தக்க "பிரஹதீசுரர்" என்னும் ராஜ ராஜேச்சுர ஆலயங் கட்டுவித்தான். இவன் சைவ சமயத்திலீடுபட்டவனாயினும் பௌத்த விஹாரங்களுக்கும், ஜைனப் பள்ளிகளுக்கும், விஷ்ணுக்ரஹங்களுக்கும் பல தருமங்கள் செய்திருக்கிறான். தன் நாட்டிலுள்ள ஆலயங்களிலெல்லாம் ஆகமோக்தமாகப் பூஜை முதலியன நடக்குமாறு வடநாட்டிலிருந்து பல பிராமணர்களை வரவழைத்துக் குடியேற்றினான். கல்விமான்களிடத்திற் பற்றுடையவன். இவன் காலத்திற்றான் நம்பியாண்டார் நம்பிகளும், கண்டராதித்த தேவர் முதலிய திருவிசைப்பா வுடையாரும் பிறருமிருந்தார்கள். திருமுறை கண்ட சோழனுமிவனே. கி. பி. 985 முதல் 1012 வரை ஆட்சி புரிந்தானென்று சாசன பரிசோதகர்கள் தீர்மானிக்கிறார்கள். கொங்கு இவன் ஆட்சிக்குட்பட்டிருந்த தென்பதை இவன் ராச்சிய வருஷம் வாழவந்தி நாட்டைச் சேர்ந்த தூசியூரில் ஒரு மழவராயனால் திருக்கற்றளியுடைய பரமேசுரர் கோவிலுக்கு ஏற்படுத்திய வரி, ஈழத்துப்போரில் மாண்டதன் தந்தையின் நாக சிரம பரிகாரத்துக்காக வெட்டிய கிணறு முதலியவற்றைக் குறிக்குஞ் சாசனங்களாலும் ஒற்றியூரன் பிரதி கண்டவன்மன், அமன்குடி அல்லது கணபதி நல்லூரில் கொடுத்த நிலம், குளத்தின் சானங்களாலும் (S. S. I Vol. III) நன்கு காணலாகும். அந்நாளில் தான் கொங்கு நாட்டிற் பாடல் பெற்ற தலங்களில் ஆகமோக்தமாகப் பூஜை முதலியன நடைபெறும் பொருட்டுத் தன்னாட்டிற் றேர்ந்த பண்டிதர்களை அழைத்து வைத்து அவர்களுக்கு வேண்டிய காணி பூமியும் கௌரவங்களும் கொடுத்தனன். இந்த ராஜ ராஜ தேவர் தன்னாட்டிருந்து அழைத்துக் குடியேற்றியவருக்குத் தன் பெயரான "குலசேகர பட்டன் எனப் பெயர் கொடுத்தனன்.

இந்த ராஜ ராஜ தேவர்க்குக் குலசேகரன் என்னும் பெயர் உண்டு என்பதைத் திருமுறை கண்ட புராணம்:—

(மேற்)

உலகுபுகழ் தருசைய மீது தோன்றி யோவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டிற்
றிலகமென விளங்குமணி மாட வாரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோலோச்
யலகில்புகழ் பெறுராச ராசமன்ன னபயகுலசேகரன்பா லெய்து மன்ப [ச்சி
ரிலகுமொரு மூவரருள் பதிகமொன்றோன் றேயினிதி னுரைசெய்ய வன்பாற்
[கேட்டு.

" கொண்டு குலசேகரனுங் கோன்பால் வந்து குஞ்சரத்தோனருள் செய்த கொள்கை யெல்லா, மண்டுபெருங் காதலினாற் சொல்லி" என்பனவற்றால் விளங்குகிறது. இதன் பின்,

கோவிராஜகேசரி பன்மரான திரிபுவன சக்கிரவர்த்திகள் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர் என்பவன் மிகுந்த பராக்கிரமமுடையவனாக ஆட்சிக்கு

வந்தனன். இவன் காலத்து வடக்கே கங்கை - தெற்கே ஈழம் - மேற்கே சமுத்திரம் - கிழக்கே கடாரம் (பர்மா) வரையிலும் செங்கோல் செலுத்தி வந்தான். சுங்கங்களைத் தவிர்த்தான். நில அளவு செய்து ஆறிலொரு கடமை ஏற்படுத்தினன். ஏரி கால்வாய் வெட்டினன். காடுகளை வெட்டிப் பட்டணமாக்கினன். பல சிவாலயம் விஷ்ணுவாலயங்கள் கட்டுவித்தான். பேரம்பலத்தைப் பொன் வேய்ந்தான். இவன் மிகுந்த கல்விமானாக இருந்ததன்றிக் கற்றோர்க்கு உதாரன். இவன் காலத்திற்றான், சேக்கிழார் பெரிய புராணம் பாடினர். விசிஷ்டாத்வைத மதஸ்தாபகரான ஸ்ரீராமாநுஜாசாரியரிருந்தார். இவ்வரசனால் தனக்குத் தீங்கு நேருமென நினைந்து தான் போஜள ராஜ்ஜியத்திற் போய் ஒளித்திருக்க நேர்ந்தது. இக்குலோத்துங்கன் சுத்த சைவனாயினும் வைஷ்ணவ, ஜைன, பௌத்தக் கோவில்கள் தோறும் இவன் சாசனங்களைக் காணலாம். கி. 1070-முதல் 1118-9-வரை ஆட்சி புரிந்திருக்கின்றன் என்பர்.

> சென்னியபயன் குலோத்துங்க சோழன் றில்லைத் திருவெல்லை
> பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறென்றும் புவிகாக்கும்
> மன்னர் பெருமா னனபாயன் வருந்தொன் மரபின் முடிசூட்டுந்
> தன்மை நிலவு பதியைந்தி னென்றாய் விளங்குந் தலைத்தவ்லூர்.
> —(பெரிய புராணம்).

இந்தக் குலோத்துங்க சோழவேந்தன் திருச்செங்கோட்டிற் பூசித்துள்ள ஆலம்பாயன கோத்திரத்தானை குலசேகர பட்டனுக்குச் சகாயமாகப் (பெண் கொள்ளல் கொடுத்தலுக்கு)க் காசிபகோத்திரத்து விற்பன்னரான ஒரு சிவாசாரியருக்குக் "குலோத்துங்கபட்டன்" எனத் தன் பெயரும் பிற ஆதிக்கமுந் தந்து வாழ்ந்திருக்கச் செய்தனன்.

> காரணிக மான வளவன்கலி யுகாதியிற் கட்சேவி மலைப்பரமனைக்
> கந்தனை வணங்கிமக பூசையுண்டாக்கினன் கைலாச நாதசிவனைத்
> தாரணி புகழ்ந்திடத் தாபித்தனன் பெரிய தண்கூப மதுகண்டனன்
> சைவ மறையோர்பூச னைக்கினியராகவே தனதுமண் டலமேவியே
> சீரணி சீகாழியா லம்பாயர் காசிபர் திறத்தொடர்ச்சனை செய்யவே
> திறமுற வமைத்தனன் மநுநீதி முறைகண்ட செம்பியன் பெற்றபெருமை.
> —(திருச்செங்கோட்டுத் திருப்பணி மாலை.)

இதனால் நன்கு விளங்கும். இது போலவே கொங்கு மண்டலத்துள்ள மற்ற தலங்களிலும் நிறுவினன். சோழன் குடியேற்றிய சிவத்விஜர்களுக்கும் முன்னம் இங்கிருந்தவர்களுக்கும் சில சாம்பிரதாய பேதங்களிருக்கின்றன. அவர்கள் கிராமாந்தரங்களில் பூஜகர்களாயும், நாட்டுக் குருத்வமுடையவர்களாயும் இருக்கின்றார்கள். புதியவர்கள் பாடல் பெற்ற தலங்கள், மற்றும் பிரதான ஆலயங்களில் அர்ச்சகர்களாயும் ஆசாரியத்வமுடையவர்களாகவும் வாழ்ந்து வருகின்றார்கள்.

## பூந்துறை—குப்பிச்சி.

*வீதசுற் றிலகு விசய நகரத் திறலரசன்*
*வாசற் பணிக்கனை மண்கொளக் குத்தியம் மன்னனைக்கண்*
*டேசற் படுமச மாவினை யாட்டி யெவருமெச்ச*
*மாசற்ற நாடுகொள் குப்பிச்சி யுங்கொங்கு மண்டலமே.*

(க - ரை) விஜய நகரத்து அரண்மனை வாயிற் காவலனைக் குப்புறவிழ அடித்துவீழ்த்தி, அரண்மனையுட் புகுந்து அரசனைக் கண்டு மசக்குதிரை ஏறி ஆட்டிப் பூந்துறை நாட்டதிகாரம் பெற்ற குப்பிச்சியுங் கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு:—மேல்கரைப் பூந்துறையில் கொங்குவேளாளரில் காடை குலத்தில் மாட்டையாக்குப்பிச்சி என்போன் விஜய நகரஞ் சென்றான். அங்கே ஒரு மல்லன், இடதுகாலிற் சங்கிலி ஒன்றின் தலைப்பைக் கட்டி மற்றொரு தலைப்பை வாசற்படியின் எதிர்ப் பக்கமாக மேலே மாட்டித் தோரணம்போலத் தொங்கவிட்டிருந்தான். வல்லவர்களானாற் றன்னைச் சயித்து உள்ளே போகவேண்டியது, இல்லையேல் தன் காலிற் கட்டித் தொங்கவிட்டிருக்கும் சங்கிலிக்குக் கீழே நுழைந்து போகவேண்டியது என்றிருப்பதைத் தெரிந்துகொண்டான். அந்த மல்லனுடன் யுத்தஞ் செய்து குப்புற வீழ்த்தினான். அத்தாணி மண்டபத்துட் புகுந்து வேந்தனைக்கண்டான். ஒரு குதிரை இருக்கிறது, அதன் மேலேறி சவாரி செய்து வருவாயேல் நீ வல்லாய் என்றரசன் கூறினன். அப்படியே நடத்துகிறேன் என்று ஒப்புக்கொண்டனன். அந்தக் குதிரையோ பொல்லாது. ஏறினவுடனே அந்நகரத்து அருகிலுள்ள நீர் நிலை யுட்கொண்டு சென்று கீழே தள்ளிப் புறழ்ந்து மிதித்து வருந் தகுதி பெற்றது என்பது தெரிந்தான். சுண்ணும்புக்கல் சம்பாதித்துத் துணிப் பையுள் நிரப்பிக் குதிரை அடி வயறு உறக்கட்டிவிட்டு ஏறினான். உடனே குதிரை அதிவேகமாக வீதிவழியாகச் சென்று வாரிதிபோலத் தேங்கியுள்ள நீர்நிலையுள் வழக்கப்படி கனைத்துக்கொண்டு இறங்கியது. வயற்றளவு நீருட் செல்லவே அந்நீர் பட்டவுடன் சுண்ணும்புக்கல் கொதிப்புற்றது. குதிரை அதனால் தோன்றிய எரிச்சலைப் பொறுக்க முடியாது வெளியேறிச்சாரிகொண்டது. அவ்வேகத்திலேயே அந்நகர் வீதி சுற்றி ஆட்டுவித்து அரசன்முன் கொண்டுவந்து வந்தனஞ் செய்தனன். இவனது யுத்தியை மெச்சிய அரசன் பூந்துறை நாட்டு அதிகாரமும் மற்றும் அதிகாரமும் கொடுத்தனுப்பினன்.

"இவ்வகை வழக்கம் அக்காலத்து இருந்தது என்பதற்கு எட்டயபுர சமஸ்தானத்து வம்சமணிதீபிகை மூன்றாவது பிரகாணத்தில் 12-வது பட்டம் நல்லம நாய்க்காவர்கள் விஜயநகாஞ் சென்றிருந்த காலத்தில் தெற்கு வாசலில் சோமன் என்றமல்ல வீரன் இவ்விதம் இடது காலில் தங்கச் சங்கிலி கட்டிக்கொண்டிருந்ததாகவும், அவனைக் கொன்று உள்ளே நுழைந்ததாகவும்" எழுதப்பட்டிருக்கிறது.

சுண்ணாம்புக்கல் கட்டுதல் முதலிய யோசனைக்கு உடனிருந்துதவிபுரிந்த ஒரு உப்பிலிய நல்லயன் என்பவனுக்கு இந்த நாட்டதிகாரி ஒரு மரியாதை கொடுத்தனன். அது இது:—

பூந்துறையில் செதுக்கிய கல்லால் ஒரு மேடை கட்டப்பட்டிருக்கிறது. ஜாதி ஞாயம் உப்பிலியர் அம்மேடைமேலிருந்து பேசுவர். அப்பொழுது மேலோர் அங்கு வரினும் உட்கார்ந்தபடியே பேசலாம் என்பதாம். அம்மேடையினிருபுறச் சுவரினும் குதிரையைப் பிடித்தல், சுண்ணாம்புக்கல் கட்டல், சாரி செய்தல் முதலிய குறிகள் வெட்டப்பட்டிருக்கின்றன.

பூந்துறை புட்பவன நாதர் ஆலயத்துள் பாகம்பிரியா நாயகியார் கர்ப்பக்கிரக இடப்புறச் சுவரில் அக்கோவில்களில் திருப்பணி செய்துள்ள குப்பன் அழைப்பித்தான் எனக்கண்டுள்ளவர்களுள் குப்பன் (குப்பிச்சி) இவனும். விஜய நகரம் சதாசிவராயர்-ராமராஜா சாசனங்கள் இங்கு காணப்படுகின்றன. இவர்களுடைய காலம் கி. பி. 1541 முதல் 1565 வரை எனவே இன்றைக்கு 380 ஆண்டுகளாகின்றன.

(மேற்) விஜய நகரத்து மேவியிருக்கும்
அசையா நரபதித னன்பா — விசைவு பெறக்

கொங்குக்கு மேன்மைக் குறிப்பு மணியிழைத்த
தங்கப்போற் றண்டிகையுந் தான் படைத்தோன்.
—(பூந்துறை அவிநாசிக் கவுண்டன் வண்டு விடு தூது.)

## சர்க்கரை, சோழனை வெருட்டியது.

பொருனையும் பொன்னியு மோங்கிப் பெருகிப் பொசிந்துமிகப்
பெருமை யுறுகொங்கிற் சென்னி யிடர்செயப் பெருஞ்செழியன்
அருமை யுளங்தெரிந் தன்னோன் முதுகிட் டகலவிசை
வரும முறுகாரை மன்றாடி யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) வளமை மிகுந்த கொங்கு மண்டலத்திற் சோழன் பல தீங்குகள் செய்ய நோக்கிய, பாண்டியனுடைய கருத்தை அறிந்து சோழ அரசன் முதுகிட் டோடும்படி செய்து ஓட்டிய காரையூர் மன்றாடியென்பானுங் கொங்கு மண்டலம் என்பதாம். (௬௭)

வரலாறு:— கொங்கு மண்டலமானது பலநாள் சோழ வேந்தர்களது ஆட்சிக்குள் அடங்கி இருந்தது. சிற்றின்பப் பிரியத்தாலும், ஐக்கியக் குறைவாலும் சோழர் வலி குன்றினர். அக்காலத்திற் பாண்டிய அரசர்களில் ஜடாவர்மன் சுந்தர

பாண்டியன் என்பவன் ராஜாதி ராஜன் ஆனான். சோழ வமிசம் என்னும் மலைக்குத் தான் ஒரு இடியேறு எனப் புகழ்பெற்றான். சோழ நாடு கொங்க நாடுகளைக் கைக்கொண்டான். காரையூர் பயற குலத்தவனான சர்க்கரை மரபினனொருவன் பாண்டி மன்னனைக் கண்டான். இவனது முன்னோர்களின் அரும்பெருஞ் செயல்களைக் கேள்வியுற்ற பாண்டியன், இவனது வீர தீரங்களைக் கண்டு உடனிலை வீரனாக வைத்துக் கொண்டான். பின்பு சில தினத்துள் இவனது ஆண்மை, எதிரியை பயப்படுத்தல், வெருட்டல் முதலிய அரசியற் றந்திரம் சொற்சாதுரிய முதலிய குணங்களை அறிந்து சேனாபதிப் பதவி கொடுத்தனன். அப்போதுள்ள சோழன் படையுடன் வந்து கொங்கு நாட்டைச் சூறையாடினான். இதனையறிந்த பாண்டியன் சோழனைத் துரத்தி யடிக்கும்படி ஏவினன். இவ்வாலிப வீரன் படையுடன் சென்று படையை நிறுத்திவிட்டு மிகுந்த தைரியத்துடன் சோழனிடஞ் சென்று, தன்னை அறிவித்தது ஐயா, மிகுந்த அன்பாகத் தங்கள் முன்னோர் காத்து வந்த இக் கொங்கு நாட்டைக் கொள்ளையாடுகிறீர்கள்; இது தருமமாகாது; கருணை கூர்ந்து கொள்ளைப் படையைத் திரும்பிப் போமாறு கட்டளை யிடுதல் வேண்டுமெனத் தெரிவித்தான். ஒப்பாது சினந்தனன். சோழ வேந்தர்களின் கீழ் எங்கள் முன்னோர்கள் சேனாபதிகள், வீரர்கள், நாட்டதிகாரிகளாகவும் இருந்து வந்தனர். சோழ அரசுரிமை கொடுங்கோன்மையாய் விட்டதுமன்றி இந்நாடு கொள்ளைக்களனாகவு மாறிவிட்டது. இனிப் பொறுக்க முடியாது. தென்னவனது சினந்த கட்டளைகள் பல வருகின்றன எனவும் கேளாமையால், தன் சேனையை ஏவிச் சோழர்படையைப் பிளவுபடுத்திப் பலமுகமாகத் திரும்பி ஊர் புகும்படி வெருட்டி விட்டனன். படை மிகுந்த அலங்கோலப்பட்டு விட்டது.

(மேற்)- ஆறெல்லாஞ் செந்நீ ரவனியெலாம் பல்பிணங்கள்
தூறெல்லாஞ் சோழன் சுரிகுஞ்சி—வீறுபெறு
கன்னிக்கோ னேவலினாற் காரைக்கோன் பின்றொடரப்
பொன்னிக்கோ னோடும் பொழுது.—(பழம்பாட்டு.)

எனப்பாடி இருக்கிறார்கள். இந்த வெற்றியைப் பெற்றுவந்த சேனைத்தலைவனை வியந்து பாராட்டிப் பல விருது சன்மானங்களை உதவி மகிழ்ச்சிபொருந்தி நீ ஒரு **நல்ல சேனாபதி** என்று பாண்டியன் மிகு கௌரவமாகக் கூறினன். இவன் சந்ததியார் இந்த நல்ல சேனாபதி என்ற பெயரை நாளும் அடுத்தடுத்து இட்டு வழங்குகிறார்கள்.

ஜடாவன்மன் சுந்தர பாண்டியன் கி. பி. 1251-ல் பட்டந்தரித்தவன்.

இந்தச் சதகச் செய்யுள் நான்காமடியில் **மன்றாடி** எனக் குறிக்கப்பட்டுளது. இப்பெயர் இக்காலத்துச் சில ஜமீன்தாரர்களும், பட்டக்காரர்கள் என்கிற தலைவர்களும் தங்களுக்கிட்ட பெயர்களின் இறுதியில் **மன்றாடி** என்பதைக்கூட்டி வழங்கி வருகிறார்கள்.

இந்த மன்றாடி என்பது மிகப் பழமையான காலத்துள்ள பட்டப்பெயராத லின் இதை நன்கு விசாரிக்கலாம்.

ஸ்வஸ்திஸ்ரீ மதுரை கொண்ட கோபரகேசரி பன்மர்க்கு யாண்டு பதினெஞ் சாவது கச்சப்பெட்டு பெரிய திருக்கற்றளி மஹாதேவர்க்கு சண்டபராக்கிரம மன்றாடியேன் எழுத்து. திருக்கற்றளி தேவர்க்கு மூன்று நோந்தாவிளக்கு சந்திரா தித்தர் உள்ளளவும் சண்ட பராக்கிரம வீர வைத்த சாவா மூவா பேராடு ஒருநூற்று எழுபது. இவ்வாட்டால் நிசதி மூவுழக்கு நெய்கொண்டு சென்று உண்ணாழிகை உடையவர்கள் கையில் நாலுழக்கு வழுவாத நாழியால் என் மகன் மக்கள் வழிவழி என்றும் அட்டுவேன். அட்டேனாயில் தர்மாஸனத்தில் நிசதி நாலேகால் தண்டப் படுவேனானேன். இத்தண்டப்பட்டும் இந்நெய்முட்டாமே ஆட்டுவேனானேன். முட்டில் அன்றுள் கோவுக்கு நிசதி மஞ்சாடி பொன் மன்ற ஒட்டிக் கொடுத் தேன்...............S. I. I. Vol. I. இது காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயில் பிள்ளையார் மண்டபத்துள்ளது. (No. 82.) ராஜஸிம்ம வர்மேசுவர சிரேணியுள்ள (No. 83.) சாசனமும் இதுபோலவே உள்ளது.

........ஜயங்கொண்ட சோழமண்டலத்து பெரும்பாணப்பாடி கரைவழி திருவல்லமுடைய மஹாதேவர்க்குப் பல்குன்றக்கோட்டத்து செங்குன்றநாட்டு கல வையான உலகளந்த சோழ சதுர்வேதி மங்கலத்து மன்றாடி அரையராமன் மண்ட கவனான அரசாணலயக் கோனேன் இத்தேவர்க்கு வைத்த திருநுந்தா விளக்கொன்று றுக்கு வைத்த சாவா மூவா பேராடு தொண்ணூற்றாறு." S. I. I. Vol III. Part-I. சோழதேசத்துள்ள திருவிடைமருதூர் (203-1907) சாசன முதலிய வற்றுள்ளும் காணலாம்.

திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்து பாப்பகுந்த திருவிளையாடலில

(மேற்) என்றுமன்றாடிசொல்ல ஏடநீ என்ன சொன்னாய் (ஓ)

மட்டவிழ்பூம் பொழில் புடைசூழ் மாமதுரை யூர்ப்பொதுவன்

கிட்டார் புகழ் தருமன்மடன் சிற்றிடைச்சி மணவாளன்

விட்ட பசு முட்டாமன் மேய்த்தடக்கிப் பாசத்தாற்

கட்டி விடு மன்றாடி கான்மாறி யானவேன். (கக)

இவைகளால் மன்றாடி என்பது ஆடு மாடுகளை வளாப்போர (இடையா)களுக்கு வழங்கி வந்ததாகத் தெரிகிறது. பழயகோட்டைப் பட்டக்காரர் முன்னோர் கால முதல் பயிர்த்தொழிலுடன் பசுவோம்பலிற் றேர்ந்தவர்கள். இதற்கு ஏற்றபடியே பழயகோட்டையில் இப்பொழுது வாழும் பட்டக்காரர் - ராயபஹதூர் நல்ல தம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் ஆயிரக்கணக்கான பசுக் களை நன்கு ஓம்பிவருகிறார். இவற்றை நோக்குமாறு 1916 - ம் வருஷத்தில் சென்னை கவர்னர் ஆங்குச்சென்று நோக்கி மகிழ்ந்தனர். அன்னார் எழுதிவிடுதத ராஜபத்திரம் இது :—

I wish to thank the Pattagar for his hospitable welcome, and for the pleasure of seeing his fine cattle. He is doing splendid work for the farm stock of the Presidency and, in this he has my cordial good wishes His example may I trust be followed by others.

Palayakotta, (Sd.) PENTLAND,
24-10-1916. Governor of Madras.

மொழி பெயர்ப்பு.

பட்டக்காரவர்கள், அன்போடு வரவேற்றதற்காகவும், அவருடைய அழகான கால் நடைகளைப் பார்த்த சந்தோஷத்திற்காகவும் அவரை வந்தனம் செய்யப் பிரியப்படுகிறேன். மாகாணத்துக்கு வேண்டிய பண்ணயக் கால் நடைகள் விஷயத்தில் அவர் அருமையான வேலை செய்து வருகிறார். இது விஷயத்தில் எனது மனப் பூர்வமான பிரியத்தை அவர் வகிக்கிறார். அவர் உதாரணத்தை மற்றவர்கள் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

(ஒப்பம்) பென்ட்லண்டு,
பழயகோட்டை, 24, அக்டோபர் 1916. மதராசு கவர்னர்.

இவ்வாறு பசு ஓம்பலால் மன்றாடி என்ற பெயர் வந்திருக்கலாம். அல்லது,

குழைமறை கதிருணக் கோதிலா சூரர் நோக்கிப்
பழைய மன்றாடிபோலு மிவனென்று பண்பின்மிக்க
விழைவுறு மனமும் பொங்க வெண்ணெய்நல் லூராயே லுன்
பிழைநெறி வழக்கை யாங்கே பேசநீ போதா யென்றார்.

தடுத்தாட்கொண்ட புராணத்து இத்திருவிருத்தத்தில் வரும் மன்றாடி எனனும் குறிப்புமொழி, வழக்கிற் கைவந்தவன் எனப் பொருள்படுகின்றது. முற்காலத்து முதன்மையாளர் மரநிழலில் போட்டுள்ள கற்பலகையில் கூடி ஊரார் குறையைக் கேட்டு நியாயத் தீர்ப்புச்சொல்வது பழயவழக்கம். அக்கூட்டத்துக்கு (= பஞ்சாயத்துக்கு) மன்றம் என்று பெயர். அதில் இடம் பெற்றவர்களுக்கு மன்றாடி என்ற பெயர் இருக்கலாம். எனக் கருதற்கு, முருங்கை என்னும் குரக்குத்தளி, கொழுமம் முதலிய இடத்துச் சாசனங்கள் இடந்தருகின்றன. சிலப்பதிகாரத்தும் மன்றங்களின் விவரமும் கூறப்பட்டுளது.

மன்று = பொது - சபை. ஆடி = வழக்குப் பேசுவோன்.

அகளங்கன்

கருவித தடிப்படி யாதம ராற்றிடு கம்பணனைச்
செருவிற் படவென்ற தீரனை நோக்கியச் செம்பியனும்

சுரிகைப் படையினில் வல்லோ னகளங்கச் சோழனென
வருபட்ட மீயப் பெறுராசை யோன்கொங்கு மண்டலமே.

(க - ரை) கீழ்ப்படிதலில்லாத கம்பணனென்பவனைப் போர்முகத்தில் வென்ற வலியோனைச் சோழ வேந்தன் பார்த்து, சுரிகையென்னும் ஆயுத வித்தையில் வல்ல **அகளங்கச் சோழன்** என்னும் பட்டப் பெயர் கொடுக்கப் பெற்ற ராசிபுரத் தலைவனுங் கொங்கு மண்டலம் என்பதாம். (௯௦)

வரலாறு:—இராசிபுரத்தில் கொங்கு வேளாளர்களில் விழிய குலத்தில் **தித்தன்** எனப்பெயர் கொண்ட ஒரு வாலிபன் வீரத்தைப் பெற்றவனாக இருந்தான். போர் வீரனாக எண்ணிச் சோழனிடத்துச் சேர்ந்தான். அப்பொழுது காஞ்சிபுரப் பிரதேசத்துக் கதிபதியாகக் **கம்பணன்** என்பவன் ஆண்டு வந்தான். அவன் சேனாபலமுள்ளவன். சோழனுக்கு அடங்காது மீறி வருவதானான். அரசன் சேனைத் தலைவர்களைப் பார்த்துக் கம்பணனை முதுகிடச் செய்ய வல்லாரிங்கிருக்கிறார்களா? எனவே, சாமானிய வீரனாகிய தித்தன் எளியேன் அது செய்யவல்லேன் எனத் தைரியமாகச் சொன்னான். சேனாபதிப் பதவி கொடுத்து, வேண்டும் படைகளும் உதவினன். வெற்றி கொண்டு வந்தான். இதனால் **அகளங்கச் சோழன்** என்றும் சுரிகை ஆயுதப் போரில் வல்லனாதலின் **சுரிகை முனைவல்லான்** என்றும் விருதுப் பெயரும் புலிக்கொடியும், ஆத்திமாலையும் ராசிபுர நாட்டதிகாரத்தையுங் கொடுத்தனுப்பினன். பின்பு எதிர்த்த வேட்டுவரையும் வென்று கீர்த்தி மானாக வாழ்ந்தான். இச்சரித விரிவு இராசிபுரத்தார் மெய்க்கீர்த்தி நூலிலும், இராசிபுரக் குறவஞ்சியிலுங் காணலாம்.

மேற்கூறிய கம்பணன் (கம்பண உடையாரானவன்) காஞ்சிபுர ராஜ ஸிம்மேசுர சுவாமி கோவிலிலுள்ள சாசனத்திற் குறிக்கப்பட் டிருக்கிறான்.

"ஸ்ரீ கம்பண உடையார் பிரிதிவிராச்சிய பரிபாலனம் பண்ணியருளாநின்ற சகாப்தம் ஆயிரத்து இருநூற்று எண்பத்து ஆறின் மேற் செல்லாநின்ற விசுவாவசு வருஷம்" எனக்கண்டிருக்கிறது. இவர் விஜய நகர அரசால் அனுப்பப்பட்டுத் தென்னாட்டைச் சயித்து பிரதிநிதியாக ஆண்டவர். கி. பி. 1372-ல் மதுரை நோக்கிப் படையெடுத்துத் துலுக்கர்களை வென்றவர் என மதுரை நாடு பாகம் 3 பக்கம் 82-ல் மிஸ்டர் நெல்ஸன் எழுதியிருக்கிறார்.

**அகளங்கப் பட்டன்** எனுங் குடிப் பெயரொடு இராசிபுரம் நாட்டுப் புலவர்கள் இருக்கிறார்கள்.

## கோபண மனறுடி.

தென் பாண்டி நாட்டினிற் சிங்களர் தீமை செயச்செழியன்
முன்போ யகற்ற வலியற்ற காலத்தின் மொய்ம்பொடவர்

பின்போடத் தானை கொடுமோட்டு வீரன் பெருங்களந்தை
மன்பூ வலனெனுங் கோப்பண னுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பாண்டிமண்டலத்திற் சிங்களர்புகுந்து வருத்துதலைத் தடுக்கப் பாண்டியனுக்கு இயலாதகாலத்தில், வலியசேனையை நடத்தி அச்சிங்களர் திரும்பியோடச்செய்தவனுங் களந்தையென்னும் பதிக்குத் தலைவனும், பூவலனென்னும் குடிப்பிறப்பினனுமான கோப்பணன் என்பானுங் கொங்குமண்டலம் என்பதாம்.()

வரலாறு:—பாண்டி மண்டலத்தின் ஆளுகையைப் பற்றிப் **பராக்கிரம** பாண்டியனுக்குங் **குலசேகர** பாண்டியனுக்குஞ் சண்டை நேர்ந்தது. மனைவி மக்களுடன் பராக்கிரம பாண்டியனைக் குலசேகரன் நாசஞ் செய்துவிட்டான். இதனைக் கேள்வியுற்ற சிங்களத்தரசனுன பராக்கிரம பாகு என்பான் தன் தண்ட நாயகனுன இலங்காபுரியைப் பலத்த சைனியத்துட னனுப்பினுன். அந்த இலங்காபுரி என்பான் இராமேசுரத்தைப் பிடித்துக்கொண்டு சிலபாகத்தையும் அழித்து **குந்துகாலம்** என்னும் இடத்தில் ஒரு கோட்டைகட்டி **பராக்கிரமபுரம்** எனப் பெயரிட்டான். இவர்களை எதிர்த்த, பாண்டியராஜன் - சுந்தரபாண்டியனெனும் இரு பாண்டியர்க ளிறந்தார்கள். அப்பொழுது ராஜகேசரி ராஜாதிராஜன் கொங்குநாட்டை ஆண்டிருந்தான். இவன் குலசேகர பாண்டியனுக்கு மாமன் முறை ஆக வேண்டும். இதனுல் இந்தச் சோழனைக் குலசேகர பாண்டியன் துணை வேண்டினுன். உடனே கொங்கப் படையைத்திரட்டி அனுப்பப்பட்டது. இது சென்று திருக்கானப்பேர் - தொண்டி - பாசி - பொன்னமராவதி - மணமேற்குடி - மஞ்சக்குடி என்னும் இடங்களிலெதிர்த்துச் சிங்களப்படைகளைப் பாண்டிநாட்டை விட்டுத் துரத்திவிட்டது. இந்தக கொங்குப்படைக்குச் சேனுபதியாகச் சென்ற சேனுபதிகளுள் ஒருவனுக இக்கோப்பணன் சென்றதை இச்செய்யுள் விளக்குகிறது. 1898 சென்னை ஆர்க்கலாஜிகல் வருஷாந்த ரிபோர்ட்டிலும் காஞ்சிபுரத்துக்கடுத்த ஆரம்பாக்கத்து கோயிற் சாசனத்திலும் இப்படையெடுப்பு எழுதப்பட்டுளது.

இந்தச் சண்டை கி. பி. 1190 - ல் நடந்ததெனச் சாசன பரிசோதகர்கள் கணிக்கிறுர்கள் எனவே இற்றைக்கு 730 வருஷங்களாகின்றன. இவன் மரபினர், பேரூர், அவிநாசியிலும் திருப்பணி செய்திருக்கிறுர்கள்.

இம்மரபினர் கோயமுத்தூர் ஜில்லாவில் புரவி பாளயம் (பாளயப்பட்டு) ஜமீன்தாராக இருக்கின்றனர். இவர்களைப் பாண்டிய ராஜாங்கத்தார் புத்திரவர்க்கமெனக் கொண்டு பல உரிமைகள் செய்திருக்கிறுர்கள். விஜய நகரம் - மஹிசூர் - மதுரை நாயக்கர் சமஸ்தானம் - மலையாள சமஸ்தானங்களிலும் பல கவரவங்கள் பெற்றிருக்கிறுர்கள். கள்ளிக்கோட்டை அமீன் சாய்புக்குஞ், சீரங்கபட்டணம் நபாபுக்கும் நடந்த வானியாற்றுச் சண்டையில் வழி மறிக்கப்பட்டது. அக்காலத்திற் புதியவழி

யை வெட்டிக் காட்டியதால் சந்தோஷப்பட்ட நபாபு உம்பளமாகச் சில கிராமங்கள் உதவினன்.

இம்முடி - மன்றாடி என்பன முதலிய பழய காலத்துப் பட்டங்களைப் பெற்றிருக்கிறார்கள். 'இம்முடி' ஜகமண்டலாதிபதி கோப்பண மன்றாடியார் என்பது இப்பொழுதுள்ளவர் பெயர்.

களந்தை = வாரக்க நாட்டிலுள்ள ஓரூர்.

பூவலர் = பூவலியர் - ஒருஜாதி. பூலுவரென்பாரு முளர். இவர்கள் குருகுலப் பிரிவினுள் பூவலியர் - மாவலியர் - காவலியர் - வேட்டுவர் - வேடர் எனும் பஞ்சவருண வாளரச வகுப்பினர் என்பர்.

நாணிக்கண் புதைத்தல். துறை.

பம்பிடச் சிங்களர் தென்னர் களிக்கப் பணுங் களந்தைக்
கம்பக் கரிக்கோப் பணன்வரை யீர்வேள் கலாபத்திலே
செம்பொற் குடத்தைப் பவளத்தை முத்தைத் தெரியவிட்டு
அம்பைப் புதைத்துவைத் தீரிந்த வேண்ண மறிந்திலனே—(கோவை)

## வேதாந்த தேசிகர்.

படிபுகழ் தேசிகர் கச்சியி ஞெந்து பகரவொண்ணு
வடகொங்கு வானி நதிதீரச் சத்திய மங்கலத்திற்
குடிபுகுந் தாய்ந்து பரமத பங்கங் குலவுவொண்ணூல்
வடிதமி ழாற்சொலத் தேறிய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) உலகம் புகழுமாறு காஞ்சிபுர நகரத்தில் அவதரித்துப் பின் மனவருத்தங்கொண்டு பவானி நதி தீரத்துள்ள சத்திய மங்கலத்திற் குடியேறிப் பரமத பங்கம் என்னும் ஒள்ளியநூல் கூறுதற்கு விளக்கமுற்றது கொங்குமண்டலம் என்பதாம். (கூ0)

வரலாறு:—கலியுக சகாப்தம் 4370 (இங்கிலீஷ் - 1268 - 9) சுக்கில வருஷத்தில் காஞ்சிமா நகரில் வேங்கடநாதர் அவதரித்தனர். வடமொழி தென்மொழிகளில் வல்லவராய் கவிதார்க்கிக சிங்கம் எனவும் வேதாந்த தேசிகர் எனவும் பெயர்பெற்றார். பல அருமையான பிரபந்தங்கள் பாடியுள்ளார். திருச்சிறுப்பள்ளிக்கோட்டையை முற்றுகையிட்டு மஹமதியர் கொடியேற்றினார்கள், அப்பொழுது ரங்கநாதர் கோவிலினுள்ளும் புகுத ஆரம்பித்தார்கள். அதனாலும் கந்தாடை லட்சுமணாசாரியர் சிஷியர்கள் தேசிகரைக் காலைப் பிடித்து வீதியில் இழுத்துத் துன்புறுத்தலான கொடுமைகளுக்குச் சகிக்காமலும், அப்பொழுது

தோன்றியுள்ள துலுக்க ராஜ கலக காரணமாகவும் அந்நாட்டை யகன்று கொங்கு மண்டலத்தில் பவானி நதி தீரமான சத்திய மங்கலத்தில் குடியேற நேர்ந்தது. அங்கு எழுந்தருளியுள்ள பெருமாளைச் சேவித்துக்கொண்டிருந்தார். ஏனைய மதங்களைக் கண்டித்து, வைணவத்தை ஏற்றவல்ல சுருக்கமான நூல் இயற்ற வேண்டுமென்ற கருத்து விளக்கமுற்றுப் பரமத பங்கம் என்னும் பெயரால் ஒரு நூல் இயற்றினர் என்பர். அது ருச பாசுரங்களை யுடையது.

தேசிகப்ரபந்தம் பரமதபங்கம்.

(மேற்) கோதவமொன் றில்லாத தகவே கொண்ட
கொண்டலெனை வந்துலகி லவர்க் கன்றோர்
தூதுவற யொருகோடி மறைகளெல்லாந்
தொடர்ந்தோடத் தனியோடித் துயரந் தீர்த்த
மாதவனர் வடகொங்கின் வானியாற்றின்
வண்ணகைநன் னடங்கண்டு மகிழ்ந்துவாழும்
போதிவை நாம் பொன்னயிந்தை நகரின் முன்னட்
புணராத பரமதப்போர் பூரித்தோமே.

தேசிக பிரபந்த வியாச்சியானக் கர்த்தர் வடகொங்கு-வானியாறு என்பவற்றிற்கு வேறு பொருள் கூறுகின்றனர்.

ஓடுவங்க நாட்டின் 16 ஊர்களுள் ஒன்று **சத்தியமங்கலம்.** அது ஒரு தாலூகாவாக இருந்து இப்பொழுது கோபிசெட்டி பாளயம் தாலூகாவைச்சேர்ந்துள்ளது. அன்றி காவேரி தீரத்துள்ள சத்தியகால் என நினைப்பாரு முளர்,

இளங்கோவடிகள்.

உளங்கோ துருமொழுகுசெங் குட்டுவற் கோர்துணையாம்
இளங்கோ வடிக ளியற்றிய காப்பியத் தேவமுதங்
கொளுங்கோன் மதுவெனக் கூறுசெங் கோட்டுவேற் குமரனமர்
வளங்கோ ளிடாதசெங் கோடு வளர்கொங்கு மண்டலமே.

(க - ரை) மனச்சான்றுக்கு வழுவிலாது நடக்கும் சோரன் செங்குட்டுவனது ஒப்பற்ற துணைவனை இளங்கோவடிகள் இயற்றிய, சிலப்பதிகார மென்னும் காப்பியத்துள், சொல்லியருளிய **செங்கோட்டு வேலன்** வீற்றிருந்தருளுந் திருச்செங்கோடு என்னுந் திருப்பதியுங் கொங்குமண்டலம் என்பதாம். (சுக)

விவரம்:—சோநாட்டில் வஞ்சி நகரத்தையாண்ட நெடுஞ் சேரலாதன் புத்திரனும், கண்ணகிக்கு வெண்சிலை கொணர்ந்து பிரதிட்டித்துப்பூசித்தவனும், கொங்கர் செங்களம் வேட்டானுமான சோன் செங்குட்டுவனின் தம்பி இளங்கோ. முடிசூடி

நாடாளு முன்னோன் ஊனாதலின், இவன் இளவரசனெனப்பட்டான். துறவு அடைந்த பின் இவருக்கு இளங்கோ வடிகள் எனப்பெயர் வந்தது. கூல வாணி பன் சாத்தன் அல்லது சீத்தலைச் சாத்தனார் கேட்ப சிலப்பதிகார நூலியற்றினர். அந்தச் சிலப் பதிகாரங், குன்றக் குரவையில் செங்கோட்டு வேலரைக் குறித்துப் போற்றிப் புகழ்ந்துள்ளார். இவர் காலம் ஏறக்குறைய 1760-க்கு மேலிருக்கலாம் எனக்கணிக்கிறார்கள்.

சிலப்பதிகாரம் - குன்றக்குரவை - பாட்டுமடை

(மேற்) சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா விறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டோருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.

கபிலதேவர்.

செப்தவ மோங்கிய சீரார் கபிலநற் றேவரன்பிற்
பெய்த வமுத சுவைகொ ளந்தாதியிற் பீடுபெறச்
செய்தவ மார்சிவன் மேயசெங் குன்றூர் செபிக்குமெனு
மைதவ மு யபதி போங்குவ தாங்கொங்கு மண்டலமே.

(கு - ரை) தவப்பேற்றினையுடைய கபிலதேவ நாயனார் திருவாய் மலர்ந் தருளிய அமுது பொதிந்த, சிவபெருமான் றிருவந்தாதியினுள்ளே **சிவன்மேய செங்குன்றூர்** எனக்கூறிய திருச்செங்கோடுங் கொங்கு மண்டலம் என்பதாம். ()

வரலாறு:—பெரிய புராணத்துள் பொய்யடிமையில்லாத புலவர் எனப் புகழ்ந்து கூறப்பட்டுள்ள கூட்டத்துள் ஒருவர், கபிலதேவ நாயனார். இந்நாயனார் மனங்கசிந்து சிவபிரான்மீது தமிழ்ச்சுவையும் சிவமணமும் நிறைந்த தமிழ் நூல் கள் பாடியுள்ளார். இவர் அருளிய நூல்கள் மூத்தநாயனார் இரட்டைமணிமாலை. சிவ பெருமான் இரட்டைமணிமாலை. சிவபெருமான் றிருவந்தாதி. இவை பதினோராந் திருமுறையுட் சேர்ந்திருக்கின்றன. அவற்றுள் சிவபெருமான்றிருவந்தாதியில் 'சிவன் மாட்டுகவெழுதும்' என்னும் திருவெண்பாவில் சிவன்மேய செங்குன்றூர் எனக் கூறியுளார்.

சிவபெருமான் றிருவந்தாதி.

(மேற்) சிவன்மாட் டுகவெழுது நாணு நகமென்னுஞ்
சிவன்மேய செங்குன்றூ ரென்னுஞ்—சிவன்மாட்டங்
காலிங் கனநிவனயு மாயிழையீ ரங்கொன்றை
யாலிங் கனநிவனயு மாறு

## சித்தன் வாழ்வு.

நெல்லுங் கரும்புங் கமுகும் பலன்றர நேர்பருவச்
செல்லம் பரத்திசைத் துப்பொழிந் தோங்கிடு சித்தனல்வாழ்
வில்லந் தொறுமூன் றெரியுடைத் தென்ன வெலாக்கலையும்
வல்ல தனியௌவை கூறிய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) பருவகாலத்து இடியோடு கூடிய மழை பெய்வதால் நெல்லுங் கரும்புஞ் செழித்து வளருகின்ற வளத்ததான * சித்தன் வாழ்வு என்னும் திருவாவினன் குடிப்பதியில், வீடுகள் தோறும் † மூன்று அக்கினி மாறாது இருக்கிறது என ஔவை கூறியதுங் கொங்கு மண்டலமென்பதாம். (சுரு)

வரலாறு :—ஔவைப் பிராட்டியாரைத் தமிழ் நாட்டில் கேளாதார் ஒருவருமிலர். இவர் சோழமண்டலம் உறையூரில் ஆதி - பகவன் என்னுமிருவர்களைத் தாய் தந்தையாகக் கொண்டுவந்தவர். கபிலர் - அதிகமான் - வள்ளியம்மை - உறுவை - வள்ளுவர் - உப்பை என்னும் ஆறு சகோதரர்களை உடையவர். கிழவுருவத்துடன் வாழ்ந்தவராதலின் ஔவையாரெனப் பெயர் பெற்றனர். பாணர் மரபினர் வளர்க்கப்பட்டவராம். தமிழ்நாட்டு மூவேந்தர்களிடத்தன்றி அக்காலத்துள்ள வள்ளல்களிடத்துஞ் சென்று பாடி மகிழ்வித்தவர். கல்விச்செருக் கற்றவர். தாராள மனமுற்றவர். நீண்ட ஆயுளைத் தரவல்ல அருநெல்லிக்கனியை அதிகமான் உதவ உண்டு வாழ்ந்தவர். சேரமான் பெருமாளுடன் கைலை சென்றவரென்பர். ஒரு நாள் பாண்டியன், ஔவையாரை நோக்கி அம்மே! நம் தமிழ் வழங்கு நாட்டில் அங்கங்கு என்ன பெருமை இருக்கிறது எனக் கேட்டபொழுது,

நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ்
வில்லந் தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின்
நாட்டுடைத்து நல்ல தமிழ்

எனக்கூறினர் என்பர்.

தஞ்சாவூர் ஜில்லாவில் வளவனாற்றின் கீழ்க்கரையில் திருவிடம்பாவனம் என்ற ஊருக்குக் கீழ்த்திசையில் துளசியார்பட்டி என்ற ஊரில் ஔவையார் கோயிலிருக்கிறது. அதில் உடல் நிரைந்த விருத்த வடிவான ஔவையார்

---

* சித்தன் வாழ்வு = பழனி. சித்தன் என்பது முருகக் கடவுளின் ஆயிர நாமத்துள் ஒன்று என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

† மூன்று அக்கினி ஆகவனீயம் - காருகபத்யம் - தக்கிணாக்கினேயம்.

விக்கிரகமிருக்கிறது. அதனுடன் இளம்பெண்ணுருக்கொண்ட விக்கிரகமு மிருக்கிறது. அதனை உப்பை யென்கிறார்கள்,



நல்லதம்பிக் காங்கேயன்.

அம்புவி மெச்சுகுன் றத்தூரி லாயரி லாய்கலைதேர்
எம்பெரு மானைக் கொடுதக்கை யென்னு மிசைத்தமிழில்
நம்பு மிராம கதையையன் பாக நவிலவிசை
வம்பவிழ் தார்ப்புய னல்லய னுங்கொங்கு மண்டலமே.

(க-ரை) குன்றத்தூரான சங்ககிரி துர்க்கத்தில் இடையர் குலத்தில் தித்துச் செந்தமிழ்ப்புலமை வாய்ந்த எம்பெருமான் என்னும் கவிராயனைக் கொண்டு இசைத் தமிழில் இராமாயண கதையை இயற்றுவித்த நல்லதம்பிக் காங்கேயனும் கொங்குமண்டலம் என்பதாம். (௬௪)

வரலாறு :—சங்ககிரி துர்க்கத்தில் இடையர் குலத்தில் எம்பெருமான் என்று ஒருவித்துவான் இருந்தனர். அவர் இளமையில் மதுரை திருநெல்வேலி முதலிய இடங்களிற் றங்கித் தமிழ் நன்கு பயின்றனர். தெய்வபக்தியுள்ள பெரியோர்களது அன்பின் கனிவை வியந்து பாராட்டுவர். இதனால் இவரை பக்தர்பாடி என்றழைத்தனர். மதுரையிற் கல்வி கேள்விகளிற் சிறந்த பூங்கோதை என்னும் நற்குண மாதினை மணந்தனர். அப்பொழுதுள்ள பாண்டிய அரசன் சமுகத்திருந்தனர். பின்பு ராஜ்ஜியம் நாயக்கர் வசமாயிற்று என்றாலும் பெரிய கிருஷ்ணப்ப நாயக்கர் அரசரான காலத்து அவராற் பெருமைப்புற்று வாழ்ந்தனர். அவர் தனிடம் விடைபெற்றுத் தான் பிறந்த ஊருக்கு வந்தனர். இவ்வூர்கொங்கு இருபத்து நான்கு நாட்டிற்கும் தலைமையாய் ஏழு சுற்றுக் கற்கோட்டையுள்ள கடிஸ்தலமாய், இம்மண்டலத்தில் அரசிறை கொடாதவர்கள் முதலிய ராஜாங்கக் குற்றஞ் செய்தவர்களைச் சிறை வைக்கும் அரணுள்ள இடமாயுள்ளது. மற்றைச் சிற்றரசர்கள், பாளயக்காரர்கள் பட்டக்காரர்கள் முதலியோர் நாயக்கர் சமஸ்தானப் பிரதி காவலரை அடிக்கடி காணவருவார்கள். இராமாயணத்துள்ள உள்ளுறைகளை வெகு விநயமாக இப்புலவர் விளக்குவாராதலின் எல்லோரும் தேன் றுளியை மொய்த்த ஈப்போலச் சூழ்ந்து கேட்டு மகிழ்வர். நம் கொங்கு நாட்டில் ஒரு ராமாயணஞ் சுருக்கமாகச் செய்விக்க வேண்டுமென்று ஆசைப்பட்டார்கள்.

கீழ்கரைப் பூந்துறை நாட்டு அதிபனுக மோரூரில் நல்லதம்பிக் காங்கேயன் என்னும் ஒரு பெருந்தகை இசையுடன் இருந்தனன். இக்கவிராயரும் சங்ககிரி மோரூர்க் காணி பூமியுடையவராதலின் உழுவலன்புடையவராக வாழ்ந்தனர். சோழமண்டலம் போலக் கொங்குமண்டலமும் பெருமைபெற ஒரு இராமாயணம் பாடவேண்டுமென்று காங்கேயர் பெரிதும் வேண்டினர். உங்களிருவர் புகழும் உலகெங்கும் என்றெல்லோரும் ஒருங்கே கூறினர். ஸ்ரீராமபிரான் கடாக்ஷ

மிருக்கின் நிறைவேறுமென்று கவிராயர் மகிழ்ச்சியோடு புகன்றனர். ஒருநாள் அக்கோட்டையுள் விளங்கும் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் சந்நிதியை யடைந்து இவ் வெண்ணத்தை விண்ணப்பித்து நிற்கையில் "உலகமாதா" என்று தோன்றிய மொழியை மங்கலச் சொல்லாகக் கொண்டு தக்கையிசையால் ராமாயணம் பாடத் தொடங்கினர். காண்டங்கள், சில படலங்களின் தலைப்பில் வெண்பாவும், மற்ற யன தக்கை ஒற்றை இரட்டையென்னும் குடகம் முதலிய வரிப்பாட்டுகளும் கங்கு அமைத்து ஆறு காண்டமாய்க் கம்பர் கருத்தைத் தழுவி பாடி முடித்[து]

இது கேள்வியுற்ற மதுரைச் சமஸ்தானபதிகள் கவிராயர் மீதும் காங்[கேயன்] மீதும் மிகுந்த கௌரவம் பாராட்டினார்கள். பாடுகவெனக் கேட்டுக்கொ[ண்ட] காங்கேயனை அங்கங்கே சிறப்பித்திருக்கிறார். மேற்கு ரங்கம் என்று பு[கழப்] பேசும் சங்ககிரி ஸ்ரீ வரதராஜப் பெருமாள் சந்நிதியில் அரங்கேற்றப்ப[ட்டது] என்பர்.

(மேற்)

மெத்த வேகண்ணன் வெண்ணெய் தனில் விருத்தச்சீரா ராமாயணத்தைச்
சுத்தநாக் கம்பநாடன் சொன்னான் சொன்ன பொருள் தக்கையிசையாலே
பத்தர் பாடியெம் பெருமானுற் பகரும் படிசெய்தான் மோரூரான்
அர்த்த நாரிசொ னல்லதம்பி யமனெருள் பெற்று வாழ்வாரே.

—(தக்கை ராமாயணம்.)

இந்த நல்லதம்பிக் காங்கேயன் பலபிரபந்தங்கள் கேட்டிருக்கிறான். திருச் செங்கோட்டிற் பல கற்பணிகளும் கட்டளைகளுஞ் செய்திருக்கிறான். இவ னுடைய சிலாசாசனம் ஒன்று இங்கே காட்டப்படுகிறது. செங்கோட்டு வேலர் கற்பக்கிரக வடசுவரில்:—

ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் ௲௫௱ ௨௰௧. (1521) இதன்மேற் செல்லா நின்ற சார்வரி சித்திரை மாதம் கீழ்கரைப் பூந்துறை நாட்டில் மோரூரில் இருக்கும் வேளாளர் கண்ணர்களில் திருமலை அததப்ப நல்லதம்பிக் காங்கேயன் உபயம்.

இதனால் இவர் காலம் கி. பி. 1599-1600 ஆகிறது.

இவரது புதல்வன் திருமலை காங்கயனுடைய சாசனம்[*] ஒன்று சித்தளந்தூரி லகப்பட்டது. அதனை இங்கே கொடுக்கிறேன்.

ஸ்வஸ்தி ஸ்ரீ விஜயாப்யுதய சாலிவாகன சகாப்தம் ௲௬௱௩௰௯ சகருநின்மேல் செல்லாநின்ற சுபானு வருஷத்தி கார்த்திகை மாசம் ௨௰௨ பௌ

* மைசூர் தாதா கிருஷ்ண ராஜா சாலிசக—1639 கி. பி. 1717 எவிளம்பி யில் தானஞ் செய்த ஒரு சாசனம் 64-வது சுலோகம்.

ணமையும் நாயற்றுக்கிழமையும் பெற்ற புண்ணிய காலத்திலெ ஸ்ரீமன் ராசாதி ராசன் ராசபரமெசுரன் ராசமாத்தாண்டன் பூவ-ஒக்ஷண வஶ்ரிஜ உத்தரவஸ தவஸ௨ஜ-ாதிபதி எம் மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ விரபிரதாபர் கிருஷ்ண ராயர் மஹாராயர் பிறுதுவி ராச்சியம் பண்ணி யருளாநின்ற காலத்து முளவாய் சாந்த எயினூர்ச்சாவடி செங்கோல் செலுத்தும் திறியம்பக உடையார் காரியத்துக்கு கடவரான சாம நயனூர்க்கு நடக்கிற காலத்தில், எழுகரைப் பூந்துறை நாட்டுமோரு ரில் திருமலை காங்கயன் சீமையான சிற்றளுந்தூரில் என் காணி சொத்தில், (No. 138-1915.)

## பூங்கோதை யார்

> குறுமுனி நேர்தமி ழாழியுண் வாணர் குழாம்வியப்ப
> அறிவி விளைஞரே யாண்மக்க ளென்ன வறுதியிட்ட
> சிறிய விடைச்சியெம் பெருமான் மனைவி சிறந்துவளர்
> மறுவறு சங்க கிரிசேர் வதுகொங்கு மண்டலமே.

(க - ரை) தமிழ்க்கடலையுண்ட அகத்திய முனி போன்ற பல புலவர்கள் வியக்குமாறு அறிவிவிளைஞரே ஆண்மக்கள் என்று முடிவு கூறிய எம்பெருமான் கவிராயரது மனையாட்டியார் வாழுஞ் சங்ககிரியுங் கொங்குமண்டலம் என்பதாம். ()

வரலாறு :—தக்கையிசை ராமாயணமியற்றிய எம்பெருமான் கவிராயரது மனைவியார், பூங்கோதை யென்னும் மங்கையர்க்கரசியராவர். ஒரு நாள் புலவர் பெருமானைப் பார்க்கச் சில வித்வான்கள் அவர் மனையையணுகினர்; கவிராயர் வெளியிற் சென்றிருந்தனராதலின் வந்தோர் சல்லாபஞ் செய்து கொண்டிருந்த னர். அவற்றுட் பெண்கள் எவ்வளவு கற்றுணர்ந்தவர்களாயினும் முதிர்ந்த அறிவு பெறாதவர்களென்பதாய்ப் பெண்மக்களை இழித்துப் பேசினர். இதனை அம் மனையுளிருந்து கேள்வியுற்ற இந்நங்கையார் பொறாராய் ஒரு வெண்பா எழுதிய சிறு சீட்டை ஒரு சிறுமிவசமனுப்பினர்.

> அறிவி விளைஞரே ஆண்மக்கள் மாதர்
> அறிவின் முதிஞரே யாவர்—அறிகரியோ
> தான்கொண்ட சூலறிவர் தத்தைய ராண்மக்கள்
> தான்கொண்ட சூலறியார் தான்.—என்பது

இதனை வாசித்து வியப்புற்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப்பேச நாணங் கொண்டு திகைத்து இருந்தனர். சென்று வந்த பத்தர் பாடி, இவரை வரவேற்று நல்வரவுகூறிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது சீட்டைப் புலவர்கள் காட்டினார் கள். முறுவலித்து ஆண்மக்களை இழித்துக் கூறலாமோ என மனைவியை வின

வினர். அந்நங்கையார் மனையுளிருந்தே ஐய, இகழுவில்லையோ. ஆன்மாவானது நீர்த்துளி வழி பூமியிற் சேர்ந்து உணவு வழியாகப் புருஷ கற்பத்துத்தங்கிப் பெண்ணின் கருப்பையுற்றுக் கற்பமுற்றிச் சிசு பிறக்கிறது; என்பதை உபநிஷதம் முதலிய பேராதவு காட்டி நிலை நாட்டினர். ஆதலின் பெண்கள் தாங்கள் கருக்கொண்டதை அறிந்து கொள்வது போல ஆண்மக்கள், தாங்கள் கருப்பமுற்றதைத் தெரிந்திலர் என்றனர்.

உயிர்கள் அச்சுமாறிப் பிறத்தலை பிரமசூத்திரம் ௩-ம் அத்தியாயம் க-ம் பாதம் க-ம் சூத்திரத்துக்கு நீலகண்ட சிவாசாரிய சுவாமிகளருளிய பாஷியத்தும், சிவஞானபோதம் ௨-ம் சூத்திரத்தும் விளக்கப்பட்டுளது. மேலுலகஞ் சென்ற உயிர், திரும்பும்பொழுது முறையே துறக்கம், மேகமண்டலம் - நிலம் - தந்தை தாய் என்னும் ஐந்திடத்துப் புகுந்து வருவதைத் தியானித்தலே பஞ்சாக்கினி வித்தையெனக் கூறுகிறது.

சொர்க்கஞ் சென்ற ஆன்மா மேகத்து அடைந்து, மழைத்துளியாய்ப் பூமிக்கு வந்து உணவுப் பொருளாய் புருஷ தேகத்தை அடைந்து இந்திரிய மயமாய்ப் பெண்ணை அடைகின்றான் எனவிருத்தலால் புருஷ கர்ப்பத்தில் 2 மாதங்கள் தங்குகின்றன.

(மேற்) இருதிங்கள் சுபதேவ னெழில் வயிற்றிற் சுவையோடும் போய்
ஒரு திங்கள் புறங்கோடுக்கு மொளிமுகத்தாள் வயிற்றேகி
வருதிங்களொரு பக்ஷம் வளர்ந்து பிறந்தறந் தோன்றூர்ப்
பொருதிங்க ளரசாண்டு புரிந்தபணி புகல்வாயால்.
—(திரு ஆவணக்காப் புராணம்-கோச்செங்கண்ணர் 9.)

சம்பந்தச் சர்க்கரை—தமிழ்ப்புலவனுக்குத் தாலியைக் கொடுத்தது.

சங்க கிரிதுருக த்திற் சிறையினிற் சார்ந்திடுநாள்
சங்கையி லாதொரு பாவாணன் சென்று தமிழுரைக்க
அங்க ணிருந்துத னில்லாள் கழுத்தி லணிந்திருக்கும்
மங்க லியந்தனைப் பெற்றளித் தான்கொங்கு மண்டலமே.

(க - ரை) சங்ககிரித்துருகத்தில் அரசாங்கச் சிறையில் இருக்கும் பொழுது, ஒரு புலவன் வந்து தமிழ் பாடினன். (வேறொன்றுங் கொடுக்க இயலாமையால்) தன் மனையாட்டி அணிந்திருந்த திரு மங்கிலியத்தை வாங்கி அப்புலவனுக்குக் கொடுத்த சர்க்கரையுங் கொங்கு மண்டலம் என்பதாம். (கூகூ)

வரலாறு:—அரசாங்கத்தினருக்குச் செலுத்தவேண்டிய இறைவரி செலுத்தத் தவறின பல பாளையக்காரர் காணியாளர்களை மதுரைத் தளவாய் ராமப்பய்யர்

சங்ககிரி துர்க்கக் கோட்டையில், சிறை வைத்திருந்தனர். அந்நாளில் ஒரு தமிழ் வித்துவான் ஆனூருக்குப் போய்ச் சம்பந்தச் சர்க்கரை மன்றாடியைப் பார்த்தார். சிறையிலிருப்பது கேட்டு நேரே சங்ககிரி துர்க்கத்துக்கு வந்து வாயில் காவலர்க்கு இதங்கூறி சிறைச்சாலையுள் புகுந்தார். பல கண்ணிய புருடர்களிருந்தார்கள். கவிபாடி வந்த புலவரைப் பார்த்து ஐயா, புலவரே பரிசு பெறுகின்ற இடம் இது தானோ, விடுதலையாய் மகிழ்ச்சி பெறுங்காலத்திற் கேட்கலாகாதா? எனச் சிரித்தார்கள். அப்பொழுது அக்கவிராயர்,

(மேற்)

எவரையென்று நாமறிவோ மிரப்பவரோ இடமறியா ரிரவில்வானங்
கவருமதி யொருபுறத்தே நிலவெரிக்கும் பான்மைதனைக் கண்டிலீரோ
அவரையபத மாகுமுனங் கடுகுபொடி யாகிவிடு மதனையோர்ந்து
துவரைமுதற் கரதலனுஞ் சம்பந்தச் சர்க்கரையார் சொல்லுவீரே—(தனிக்கவி)

என்றவுடன் சர்க்கரை மன்றாடியார் தமிழ் வாணரை இருகையாலுந் தழுவிக் கொண்டு, இக்காவற் கூடத்தில் என்னைப்பார்க்க மிகுந்த சிரமப்பட்டிருப்பீர்களே என்று கண்ணீர் ததும்ப உளங்கனிந்து உபசாரமொழி கூறினர். காவற்கூடந்தேடி வந்த கவிராயருக்குப் பரிசு கொடுக்கக் கையிற் பணமில்லை என்று வருந்தினன். ஒருவாறு திருத்திக் கோட்டைக்கு வெளியே வந்து தங்கியுள்ள தமது மனைவியாரிடம் ஏவலாளனொருவனை அனுப்பினர். சமயத்தை நன்கறிந்த மனைவியாரிடத்து வேறு பொருளில்லை, தான் அணிந்திருந்த திருமங்கலியத்தைக் கொடுத்தனுப்பினர். மனைவியார் மனமுவந்தனுப்பிய மங்கலியத்தை வாங்கிச் சமயத்துக்குதவியான அந்தச் சிறந்த பூஷணத்தைக் கண்களில் ஒத்திக்கொண்டு, இப்போது இதனைப் பெரிதாகப் பெற்றருளல் வேண்டுமென்று இரந்து கெஞ்சிக் கவிராயர் கையிற் கொடுத்தார்.

(மேற்) கொங்கினில்ராமப் பயனதிகாரக் குரூரத்தினுற்
கங்கு லிராப்பகல் சர்வசங் காரஞ்செய் காலத்திலே
சிங்கநற் சம்பந்தச் சர்க்கரை தேவி திருக்கழுத்தின்
மங்கலி யந்தனைத் தந்தான் றமிழ்க்கவி வாணருக்கே. (தனிக்கவி)

அகமகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்ட புலவர் அதனைக் கையிற் பிடித்துக் கொண்டே தளவாய் ராமப்பையரைக் கண்டு இந்தக்கவியைக் கூறினர். இதனைத் தெரிந்து ஆச்சரியமுற்ற தளவாய் மெத்த மகிழ்ச்சிகொண்டு, சர்க்கரை மன்றாடியை அழைத்துவரக் கட்டளையிட்டு, மன்றாடியாரே! நீர் கொடையாளியென அறிந்தேன். நீர் செலுத்த வேண்டிய இறைவரியைக் காலம் சுபிக்ஷமானவுடன் செலுத்திவிடும் என்று கூறி, இனி ஏதேனும் வேண்டுமோ எனவே, என்னுடன் சிறையிலிருந்த மற்றைப் பட்டக்காரர் முதலியவர்களையும் சிறை நீக்க வேண்டுமென வேண்டினர். அவ்வாறே விடுதலை செய்தனர்.

வாணனுரைத்திட மால்ராமப்பையன் மனமகிழ்ந்து
வேணது கேளெனச் சம்பந்தச் சர்க்கரை வேளினுமிவ்
வீணரைக் காவல் விடீரென்று கூறிட விட்டிடலுஞ்
சாணுவென் றிம்முடிக் காணிக்கைச் சாசனந் தந்தனரே.

இந்த ராமப்பய்யர் என்பவர் கி. பி. 1623 முதல் 1699 வருஷம் வரை மதுரையிலாண்ட ஸ்ரீ திருமலை அய்ய நாயக்கரு அவர்களது சமஸ்தானத்தில் தளவாயாக இருந்த மிகுந்த பராக்கிரமசாலி. இவரைப்பற்றித் திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை 114 வது செய்யுள் முதலியன புகழ்கின்றன. எனவே இந்தச் சரித்திரம் இன்றைக்கு 250 வருஷங்களின் முன் நடந்தது.

ஒரு புலவன்
ஆணூர்க்காமிண்டனை விற்க விலைகூறியது.

கொடையிற் பெரியோ யுடனே யெனகதக் கொடாமையினாற்
கடையிற் பெறவினை விற்றென் கலியைக் கழிப்பனென
மடியைப் பிடித்திழுத் தேவிலை கூறிய வாணன்மிடி
யடியப் பொருடந்த காமிண்டனுங் கொங்கு மண்டலமே.

(க - ரை) ஈகையிற் சிறந்தோனே, கேட்டபொழுதே நீ பொருள் உதவாமையால், உன்னைக் கடைத்தெருவில் விலை கூறி விற்பேன் வாவென மடி பிடித்திழுத்த புலவனது வறுமை போகும்படி பொன்னுதவிய காமிண்டனுங் கொங்குமண்டலம் என்பதாம். (௬௭)

வரலாறு ;—சிவதல வழிபாடாகச் சர்க்கரை சென்றிருந்தனர். அங்கே ஒரு புலவர், இவரைச் சந்தித்துத் தனக்குக் கடன் இருப்பதாயும் அந்தத் துன்பத்தை நீக்க வேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டார். யாத்திரை தீர்ந்து பதினைந்து தினத்துள் ஊர் சேர்வேன், தயவு செய்து வருவீர்களானால் உதவுகிறேன் என்றனர். பதினைந்தாவது நத்த காரையூர்க்குப் போய் விசாரித்தார். இன்னும் கொடையாளி வந்து சேரவில்லை எனத் தெரிந்தார். உடனே புறப்பட்டுப் போனார். கரூரிலே இருக்கக்கண்டார். உன் வார்த்தையை நம்பி என் கடன் காரனுக்குக் கொடுப்பதாகச் சொன்னேன். சொன்ன வாய்தாக்கடந்து மூன்று நாளாகிறது பணங்கொடு என்றார் புலவனர். ஊருக்குப் போகலாம் வாருங்கள் கொடுக்கிறேன், எனவே கோபம் பிறந்து இப்படித்தானோ கொடைவன்மை. உன்னை நான் இவ்வூர்க் கடை வீதியில் விலை கூறி விற்பேன் என மடியைப் பிடித்து இழுத்த புலவரது உறுதிப்பாட்டுக்கு மகிழ்ந்து அவருக்குள்ள கடன் தொகை தெரிந்து மகிழ்ச்சியோடு உதவினர் என்பர்.

மற்ருேர் புலவன் மடிமேற்கை போட்டிழுத்து
விற்ரு லல்லாதேன் வெறுமை நோய் தீராதே.
எங்கும் விலைகூற வேயிசைந்த புண்ணியவான்
எங்குங் கனகாபி ஷேகமாகப் பொழிந்தோன்.—(நல்—காதல்)

மேற் செய்யுளின் கடையடியில் காமிண்டன் என்றிருக்கிறது. இதைப் பழய கோட்டைப் பட்டக்காரர் பரம்பரையார் ஒவ்வொருவரும் இட்டு வழங்கிவருகிருர்கள். இன்னும் சில கொங்குநாட்டுச் சமஸ்தானங்களிலுமிருந்திருக்கிறது. பழயகாலத்துப் பட்டப்பெயராதலின் இதனைச் சற்று விசாரித்தல் வேண்டும்.

சாலி சகம் 726. கி. பி. 803—4 ராஷ்ட்ர கூடராஜா 3-வது கோவிந்தப்பனுடைய பெருஞ்சாதி பெயர் காமுண்டபே. Gamunda bbai.

அநந்தபூர் ஜில்லா இந்துப்பூர் தாலூகா மானிப்பல்லியில் நுளம்ப பல்லவ ராஜா ஜயதேவன் காலத்து சாசனம் ஸ்ரீ புருஷய்யர் மகன் கோரப்பனும் காமுண்டர்களும், பிராமணர்களும் சேர்ந்து, பெத்து கொண்டே என்ற ஊரில் சூரிய தேவனுக்கு தானம் செய்துள்ளார்கள். (No. 901—1913)

பல்லாரி - சஞ்சீவிராயன் கோட்டை - கதம்பகாமரசனும் காமுண்டர்களும் இருந்து தானம் செய்தார்கள்.

சித்தூர் ஜில்லா கர்ஷணபல்லி என்ற ஊரில் - முத்துக்கூர் கிராமத்தில் - இறந்த வீரனுடைய மகனுக்கு, காமுண்டர்கள் தானம் செய்தார்கள். (No. 331—1912.

எனக்கன்னட தேசத்தும், தெலுங்கு தேசத்தும் காமுண்டன் என்னும் இப்பெயர் கொண்ட, அரசர் அதிகாரிகள் விளங்கினர்கள் எனத் தெரிகின்றது.

இதனை உற்று நோக்குங்கால் ராஷ்டரகூட அரசர்கள், நுளம்ப பல்லவ வேந்தகள், ஆட்சியில் நாடு அல்லது ஊர் அதிகாரம் பெற்றவர், காமுண்டன் (ಗಾವುಂಡ) எனச் சொல்லப்பட்டார். அதற்கு முன்னும் இருந்திருக்கலாமோ தெரியவில்லை. இப்பெயர் கன்னட தேசத்து அதிகமிருக்கிறது. அவ்வரசர்கள் இத்தென்னுட்டும் புகுந்து ஆண்டிருக்கிருர்கள். அக்காலத்து இப்பெயர் இந்நாட்டில் வந்து காமிண்டன் என்று திரிந்தது போலும். காமுண்ட - காமிண்ட என்னும் பெயர், கிராமப்பெரிய தனக்காரர்கள் பெற்று நாளடைவே காவண்ட - காவுண்ட என்று, பின் கவண்ட-கவுண்ட என்று மருவிற்று என்பது சாசன பரிசோதகர்கள் கருத்து. இது போலவே கன்னட தேசத்தார் கவுடு என்று வழங்குகிருர்கள் - கவுண்டிக்கை என்பது ஊர்ப்பெரிய தனத்தைக் குறித்ததாக வழக்கத்திலிருக்கிறது. நாட்டுக்கவுண்டன் - ஊர்க்கவுண்டன் என்பதாலறியலாம். முதன்மையாளர் கொள்ளும் பெயரை அவர்கள் சுற்றத்தவர்களும் பாராட்டலாயினர்.

இக்கொங்கு நாட்டுப்புறங்களில் அங்கங்கு ஊர் முதன்மை பெற்றுள்ளவர்களான வேளாளர் - வேட்டுவர்-படையாட்சி முதலிய வகுப்பினருள்ளும கவுண்டர் என்று வழங்கி வருதல் காண்கிறோம்.

இந்த நத்தக்காரையூர்-(திரிபுவனமாதேவிபுர) சிவாலய சிலாசாசனத்தில் (பராபவ) அழகன் உத்தமச்சோழக் காமிண்டன் என்றும், காங்கேய நாடு - கவுண்டன் பாளயத்துள்ள சக 1715 கலி 4794-ல் சிவமலைக்கு 15 வள்ள நிலதான சாசனத்திலும், அரசன் பாளயத்துள்ள, சக, 1715 வருஷத்து சாசனத்திலும், திருச்செங்கோடு கந்தன் சர்க்கரை சாதனத்துள்ளும் காமிண்டன் என்ற பெயர் வருகிறது.

## இராமாநுஜர், கொங்குப் பிராட்டியார்.

சிவனே பரம்பிறி தில்லையெ னுதாற் சிரந்துணிக்க
உவந்தனன் சோழ னெனமறு வேடமா யோடிவந்து
கவன்றிடி ராமா நுஜன்றனைத் தேற்றியுங் காத்தளித்த
மவனகைக் கொங்குப் பிராட்டிய ருங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சிவபெருமானே பரம் (துரியமூர்த்தி) வேறு இல்லை? எனக் கையெழுத்துப் போடாவிடின் சோழன் கழுத்தை வெட்டிவிடுவானென்று, பயந்து வெளியேறி வந்த ராமாநுஜரது பயத்தை நீக்கி, ஊண் உடை முதலிய ஆதரவு செய்த கொங்குப் பிராட்டியாருங் கொங்கு மண்டலம் என்பதாம். (சுஅ)

வரலாறு :—**திரிபுவன சக்கிரவர்த்திகள்** என்றும், சுங்கந் தவிர்த்த சோழன் என்றும், பேரம்பலம் பொன் வேய்ந்த சோழன் என்றும் கூறப்படும் குலோத்துங்க சோழன் (1) என்பான் மிகுந்த பராக்கிரமசாலியும், கல்விமானுஞ் சிறந்த தெய்வ பத்தியுமுள்ளவன். இவன் வேண்டிக்கொள்ளவே சேக்கிழார் பெரிய புராணம் பாடினர். கி. பி. 1070-ல் பட்டந்தரித்து 1119 வரை அரசுபுரிந்தான். இராமாநுஜர் காலமும் இதுதான். இச்சோழவேந்தன் முன்னிலையில் சைவ வைஷ்ணவ சமய வாத சபை ஒன்று வித்வான்கள் ஏற்படுத்தினர்கள். அதில் வைஷ்ணவர்கள் தோல்வி யடைந்தால் "சிவாத்பரேதரம் நாஸ்தி" என்றெழுதிக் கையெழுத்திட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். இந்தச் சபைக்கு இராமாநுஜரும் வரவேண்டுமென்று முடித்திருந்தார்கள். இதனையறிந்த நடாதூராழ்வார், உடையவர் பாலணுகி விவரமறிவிக்கும் பொருட்டு, கூரத்தாழ்வாரிடம் சொன்னர். கூரத்தாழ்வார் உடையவரிடம், அரசன் வஞ்சகனுக இருக்கிறான், தேவரீர் சபைக்கு எழுந்தருளுவது யுக்தமன்று நான் போய் வருகிறேனென்று, உடையவருடைய திரிதண்ட காஷாயாதிகளைத் தரித்துக்கொண்டு ராஜ சபைக்குப் பெரிய நம்பி முதலானவர்களுடன் சென்றார். முதலியாண்டான் முதலியவர்களுடன் வெள்ளை சாத்திக் கொண்டு மாறு வேடமாக உடையவர் மேல் நாட்டுக்குப் புறப்பட்டனர். வழிநடந்து

கொல்லிமலைத் தொடர் நீங்கி லத்திவாடி (செருக்கலைக்) கிராமத்தில் சில வேட்டுவர்களால் உபசரிக்கப் பெற்று, பழவகை முதலியன உதவக் கொண்டு நீங்கிச் சமீபத்தில் அக்கிராமமிருக்கிறது, அங்கு உங்களுக்கு ஆகாரத்துக்கு இடம் செய்கிறோமென்று அழைத்து வந்து ஒரு வீட்டில் இருத்தினார்கள். அவ்வீட்டு அம்மையார் இவ்வைணவர்களைக் கண்டு உவந்து முறைப்படி வணங்கி, உடையவரிடத்து அடியாள் சம்ஸ்காரம் பெற்றுளேன் தளிகை செய்கிறேன் அமுது செய்தருளல் வேண்டுமென்று கனிவாக வேண்டினள். அம்ம! எவ்விடத்து உடையவரைச் சேவித்துக் கொண்டனை என ஒரு வைணவர் கேட்டனர்.

பனிரண்டு வருஷம் மழைபெய்த லொழிந்து கொங்குநாடு கடும்பஞ்சமுற்றது. ஸ்ரீரங்கத்தில் சதிபதிகளிருவரும் வாழ்ந்தோம். அந்நாள் எம்பெருமானார் மாதுகர பிக்ஷைக்கு வருவதை மேல் மாடியிலிருந்து கண்டேன். மனநெகிழ்ச்சி கொண்டு உடனே கீழேவந்து பிக்ஷையிட்டுச் சேவித்தேன் உபதேசித்தனர். அது முதலாக அம்மந்திர ரத்நத்தை ஜபித்துக்கொண்டிருந்தேன். சில பகல் கழியவே, கொங்கு நாடு செழிப்புற்றது எனக் கேட்டு, எம்பெருமானார் சந்நிதியை அடைந்து அநுக்கிரகித்தமந்திரத்தை மறந்தவளானேன், உபதேசித்தருளல்வேண்டுமென விண்ணப்பித்தேன். முறைப்படிக்குச் சமாசிரணம் அருளினர். நித்யப்படி பூசித்தற்குச்சுவாமிகள் பாதுகை வேண்டுமென்றேன். உவந்து தமது திருவடி நிலையைப் பிரசாதித்தனர். அதைப்பெற்ற நாள் முதல் பூசித்து வருகிறேன் என்றனள். ஆனால் அவர் உபதேசித்த மந்திரத்தை என்னிடத்து சொல் என்று இராமாநுஜர் கேட்டனர். சொல்லாவிடில் வைணவ ப்ராமணர்கள் புசிக்கமாட்டார்களே எனப் பயந்து அவர் காதில் மெதுவாகக் கூறினள். அப்படியானால் இங்கு உள்ளவர்களுள் உனக்கு உபதேசித்தவர் இருக்கிறாரா? என்று வைணவர் வினவினர். எல்லாரையும் நன்றாகப் பல முறை கவனமாகப் பார்த்து, உடையவரைக் குறித்து, சுவாமிகள் தான் என நினைக்கிறேன்; ஆனால் அவர்கள் காஷாயம் திரிதண்டதாரியாக இருக்கக் கண்டேன் என்றனள். பாதுகையை எடுத்துவா அருளிய உடனே இருகரத்தாலுந் தாங்கி வந்தனள். சரியாகவே இருக்கக் கண்டார்கள். திருவமுது செய்யுமாறு நியமனம் புரிந்தனர்.

அமுதுகொள்ளுமாறு பிராட்டியார் அழைத்தனள். எனது பாதுகைக்கு நிவேதனமான பதார்த்தத்தை நான் உட்கொள்ளுதல் சரியன்று என்று மற்றை வைஷ்ணவர்களை உண்ணும்படி செய்து, உடையவர் பாலுண்டு சயனித்தனர். மற்றை வைஷ்ணவர்கள் அன்னமருந்தி உறங்கினர்.

இந்த அம்மையார் பின்பு ஆக வேண்டிய காரியங்களைச் செய்து முடித்துத் தரையில் தனியே படுத்தனள், இதுவரை துயின்ற கணவனார் விழித்து நீ கீழே படுக்கக் காரணமென்ன வென்று மனையாளைக் கேட்டனர். உடையவர் முதலிய பெரியோர்கள் எழுந்தருளி உள்ளார்கள். 'உடையவர் மாத்திரம் அமுது அருந்த

வில்லை என்று வருந்தினள். ஆனால் அதற்கு என்னாலாகவேண்டியதிருந்தால் செய்கிறேன் என்றனர். சம்ஸ்காரஞ் செய்து கொண்டால் நாளை மத்தியானம் அருந்துவரென்றனள். அப்படியே செய்து கொள்கிறேனென்றனர். காலையில் மனமுவந்த உடையவர், சதிபதிகளிருவருக்கும் முறைபடிக்குப் பஞ்ச சமஸ்காரம் செய்தனர். பின்பு அன்புடன் அன்னமருந்தினார்கள். வழி நடைக்களைப்பு முதலியன நீங்கி நன்றாகநித்திரை புரிந்தார்கள். சில நாள் அன்புடன் அம்மனையிலேயே வசித்துப் பின்பு வஸ்திரம் காஷாயம் திரிதண்டம் மற்றையனவும் பெற்றுக்கொண்டு மேற்றிசைப் பிரயாணமாயினர்.

### தனியன்கள்.

ஶ்ரீரங்கே³ பா⁴ஷ்யக்ருத்³யதிவரசரணகிஸலயத்³வந்த்³வமாஶ்ரித்ய தஸ்யா
பி⁴க்ஷாயோக்³யே க்³ருஹே ஸந்நிவஸதி ரசிதா கொங்கதே³ஶே ப்ரயாதும் [வாஞ்ச²யா |
தஸ்ய ஶ்ரீபாது³கே ஸ்வீக்ருதவதி ஹஸ்தே ஸ்வீயதே³ஶம் ப்ரயாதாம்
தாம் லக்ஷ்மீ நாமதே⁴யாம் நவரததஹம் ஸ்தௌமி நௌமி ஸ்மராமி ||

ஸ்ரீரங்கத்திற் பாஷியஞ் செய்தருளிய உடையவருடைய தளிர்போன்ற இரண்டு திருவடிகளை அடைந்து, அவர் பிக்ஷை கொள்ளத்தக்க வீட்டில் இருந்து, தான் பிறந்த (கொங்கு) தேசத்துக்குச் செல்ல இச்சித்து அவருடைய பாதுகைகளைப் பெற்ற லக்ஷ்மியென்னும் பெயரை உடைய அம்மையாரைத் துதிக்கிறேன். நமஸ்கரிக்கிறேன். நினைக்கிறேன்.

யதிபதிபத³பீடே² பாது³கே பூஜயந்தீம்
அநவரதமநேகம் மந்த்ரரத்நம் ஜபந்தீம்
த்³ரவிட³நிக³மதத்த்வஜ்ஞாநதீ³ப்ரகாஶாம்
ஶரணமுபக³தோ(அ)ஹம் கொங்கலக்ஷ்மீம் ஶரண்யாம் ||

உடையவருடைய திருவடிக் குறியான பாதுகைகளைப் பூசிப்பவரும், அடிக்கடி உத்தமமான மந்திரத்தை ஜபிப்பவரும், தமிழ்வேதங்களின் தத்வஞானச் சுடருற்றவருமான கொங்கு பிராட்டியாரை நான் தஞ்சமென்று அடைகிறேன்.

யதீந்த்³ரபாதா³ப்³ஜநிஷக்தசேதஸம்
ஸுஶேஷஸக்தாயிததத்ஸ்வபாயிகாம் |
ஶ்ரீகொங்கலக்ஷ்மீம் ஶரணம் ப்ரபத்³யே
லக்ஷ்மீ த்³விஜா ஶ்ரீவத்ஸராஜஜாம் ஶ்ரியம் ||

உடையவருடைய திருவடி சம்பந்தமுற்ற மனத்தாராய், பல சீஷர்கள் கேட்கும் தத்வங்களைத் தெரிவிக்க வல்லராய், லக்ஷ்மீ நரசிம்ம மூர்த்தியின் திருவடிக் கமலத்தில் வீழும் வண்டு போலும் நேர்மை மிகுந்தவராயுள்ள கொங்குப்பிராட்டியாரை நான் தஞ்சமாக அடைகிறேன்.

## பிரபந்நாம்ருதம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

கிரிமி கண்டன் காரணமாய், ஸ்ரீரங்கத்தை உடனே விட்டு, மேற்றிசையில் மேன்மையான கொங்கு தேசத்தை அடைந்த உடையவர், வேட்டுவர்களின் உபசரணையை ஏற்றுக்கொண்டு தெய்வச் செயலால் எழாவது தினம் *சேலாஞ்சலாம்பா (கொங்கு பிராட்டியார்) இல்லத்தை அடைந்தனர்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

உடையவர் கொங்குப்பிராட்டியாரது போராதரவால், அரங்கநாதன் சேவை பெறாத துக்கமுமகன்று, சிஷியர்களுடன் சௌக்கியமாகச் சிலநாள் அவர் திருமனையிலேயே வசித்தனர். (இவர் பதி கொங்கிலண்ணன் - கொங்கிலாச்சான் எழுபத்துநான்கு வைணவ சிங்காசனாதிபதிகளில் ஒருவர்.)

## விருத்தன் குமரனானது

உலையி லழுது படைத்துண்டு சீட னொளித்திருப்பத்
தலையின் மயிருங் கருக்கக்கண் டேயவன் சற்குருவும்
நிலையுடன் கக்குவித் துண்டடைந் தானன் னெறியிற் கஞ்ச
மலையி லதிசயங் கண்டது வுங்கொங்கு மண்டலமே.

---

* சேல அஞ்சல = முன்றானை. அது தெலுங்கில் கொங்கு. அம்பா = லக்ஷ்மீ = அது பிராட்டி. பிரபந்நாம்ருத மியற்றியவர், தெலுங்கர்; ஆதலின் கொங்கு என்னும் பதத்துக்குச் சேலாஞ்சல எனக்கொண்டார்.

**(க - ரை)** உலைவைத்துச் சமைத்துச் சாப்பிட்டுத் தன் (உருவ மாறிவிட்டதால்) சீடனது முன்னுருத் தெரியாது நரைதிரை மாறியிருக்கக் கண்ட அவனது சற்குரு, தன் சீடனருந்தியிருந்த உணவைக் கக்கச்செய்து, அதனையுண்டு பாலனான, * கஞ்சமலையுங் கொங்குமண்டலம் என்பதாம். (அக)

வரலாறு :—நரை திரை போக்கும் மூலிகை கஞ்சமலையிலிருப்பதாகக் கேள்வியுள்ள மூலன் என்னும் ஒரு பார்ப்பான், அம்மலை மேலுள்ள கருங்காட்டிற் சென்றான். அவன் மாணாக்கன் சமயல் செய்யும்பொழுது, சமீபத்துக்கிடைத்த ஒரு கோலை யெடுத்து உலைச்சோற்றைக் கிளறினான். அக்கோல் கருநெல்லிக் கோலானதால் அன்னங் கறுத்துப்போய்விட்டது. அன்னங் கெட்டுப்போனதற்காகக் குரு சினங்கொள்வாரே என்று சீடன் பயந்து, நிறம் மாறிய அன்னத்தைப் புசித்துவிட்டு, வேறே சமைத்து வைத்தான். அவ்வன்னத்தைப் புசித்த சீடன் நரை திரை நீங்கி யவ்வன புருஷனானான். குருவுக்குப் பயந்து ஒளித்துக் கொண்டான், குரு வந்து தேடிச் சத்தமிட்டுக் கூப்பிட்டான். பயந்த மாணாக்கன் மெல்ல எதிரில் வந்து நின்றான். குறிப்புத் தெரியவில்லை. தன் மேனி மாறுபட்ட காரணத்தைச் சொன்னான். அன்னத்தைத் துழாவிய கொம்பு எங்கே என்று குரு கேட்க, முறித்து அடுப்பில் வைத்தேன் எரிந்துவிட்டது எனச் சீடன் சொன்னான். குரு மெத்த வியாகூலமுற்று, வாயில் விரலைவிட்டுச் சீக்கிரம் வாந்தி செய்யச் செய்து, சீடன் கக்கிய உணவைக் குரு உண்டு வாலிபனாக மாறினான்.

கரபுரநாதர் புராணம்.

அந்தமா ணாக்கன் றன்வை யடுகைநீ செய்யென் றோதி
புந்தியின் மருந்து தேடிப் போயின னயலிற் சீட
னுய்ந்திடக் கருநெல் லிக்கோம் பொன்றினா லனந் துழாவ
வெந்தனங் கரிபோ லாக வெருவியன் னத்தை யுண்டான். 15

நரைதிரை மாறி மேனி நடந்தவீ ரெட்டாண் டேபோற்
புரையிலா வழகு பெற்றுப் புடமிடு பொன்போ லானான். 16

துழாவிய கோம்பெங் கென்றான் சுல்லியிற் போட்டே னென்ன
வழாதுநீ யுண்ட சோற்றை வாயினிற் கக்கென் றோத
விழாதசோ றதனைக் கக்க மிச்சிலைக் குருவு முண்டான்
றொழாரேவ ரிவர்க டம்மைச் சுந்தரப் பால ரானார். 19

—கஞ்சமலைச் சருக்கம்.

* கஞ்சமலை — சென்னை இருப்புப்பாதை மகடஞ்சாவடி, அரியானூர் ஸ்டேஷன்களின் அருகிலிருக்கிறது. திருச்செங்கோடு தாலூகா. பருத்திப்பள்ளிநாடு.

## காளிங்கராயன்.

காவிரி யோடு கலக்குறு வானியைக் கட்டணைநீர்
பூவிரி செய்களுக் கூட்டிநற் காஞ்சி புகுதவிசை
தேவர்கள் சாம்பவர் பாவாண ரெல்லாந் தினமகிழ
மாவிசை யம்பெறு காளிங்க னுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) காவேரி நதியுடன் கூடுகின்ற பவானியாற்றை அணைகட்டிப் பாசனஞ் செய்து வடிநீர் காஞ்சியாற்றில் விழும்படி உபகரித்த வெற்றியாளனுன காளிங்கராயன் என்பவனும் கொங்குமண்டலம் என்பதாம். (எ0)

வரலாறு :—மேல் கரைப் பூந்துறை வெள்ளோட்டில் கொங்கு வேளாளரில் சாத்தந்தை குலத்தில் ஒரு வாலிபன் தன் முயற்சியால் வீர பாண்டியன் சேனாதிபதியானுன். தமிழரசர் மந்திரி சேனாதிபதிகளுக்குக் காளிங்கராயன் மாளவராயன் (மழவராயன்) என்னும் பட்டங் கொடுப்பதுண்டு. ஆதலால் காளிங்கராயன் என்ற பட்டத்தைப்பெற்றுப் புகழுடன் வாழ்ந்து வந்தான். தான் பிறந்த நாட்டுக்குந் தன் குலத்துக்குந் தனக்கும் புகழும் புண்ணியமுந் தோன்றக் காவிரியுடன் சங்கமமாகின்ற இடத்துக்கு அணித்தாக பவானிநதியைத் தடுத்து அணை கட்டினுன். இன்னும் அவ்வணைக்குக் காளிங்கராயன் அணை என்ற பெயர் வழங்குகின்றது. கோயமுத்தூருக்கடுத்த ஊற்றுக்குழி ஜமீன்தார் (பாளயகாரர்) இவன் சந்ததியானததால் நாளுங் காளிங்கராயன் என்ற பட்டத்தைக்கொண்டு வருகிருர்கள். அந்த மந்திரி திருச்செங்கோடு ஸ்ரீ அர்த்த நாரீசுரருக்கு மானியம்விட்டிருந்ததாகத் தெரிகிறது.

(மேற்) ஆலிங்க நாகமலை யர்த்தநா ரீசுரர்க்குக்
காலிங்க ராயனெனுங் காராளன்—மாலிங்க
மென்றேமா மாந்தை நிலமேழுமா வுங்கொடுத்தான்
நன்றே புகழெய்தி னுன். —(திருச்செங் - திருப்பணிமாலை.

திரைகொண்ட வாரியை மாலடைத் தான்செழுங் காவிரியை
உரைகொண்ட சோழன்மு னுளடைத் தானுல கேழறிய
வரை கொண்ட பூந்துறை நன்னுடு வாழ்கவவ் வானிதனைக்
கரைகொண் டடைத்தவன் வெள்ளோடை சாத்தந்தை காளிங்கனே.
—(தனிப்பாட்டு)

எற்று திரைப்பொன்னி கூடுறு வானி யிடைமடங்க
வெற்றி மிகுத்த அதிவீர பாண்டிய வேந்தமைச்சன்

கற்ற வறிஞன் காளிங்க ராயன்செய் கால்கழிநீர்
உற்ற வனத்தை வனவயலாக வுயர்த்தியதே. —(தனிப்பாட்டு)

இந்த வீரபாண்டிய அரசன் கொங்கு நாட்டை ஆண்டிருக்கிறான் என்பதை விஜயமங்கலம் முதலிய இடங்களிலுள்ள கல்வெட்டுகளும் எபிகிராபி 1913—14 வருஷாந்த ரிபோர்ட்டும் நன்கு விளக்கும். கி. பி. 1250-க்கு மேல் 1280 வருஷங்களுக்கு இடையில் இவன் இருந்திருக்கிறான்.

1913-ம் வருஷம் ஊற்றுக்குழி ஜமீன் மானேஜர் ஸ்ரீமான் J. M. துரைசாமி பிள்ளையவர்கள் இங்கிலீஷில் எழுதி அச்சிட்டுள்ள ஜமீன் சரித்திர புத்தகத்திலும், அதை அநுசரித்த கோயமுத்தூர் ஜில்லா மானியுல் முதலிய ஆங்கில சரித்திரங்களிலும் காளிங்கராயன் என்ற பெயர்க்காரணமும் அணைக்கட்டு விவரமும் இதற்கு முரண்படுகின்றன. அவைகள் எந்த ஆதாரத்தின் மேல் எழுதியனவென்று விளங்கவில்லை

மாளவராயன்.

காங்கேய நாட்டு மயிலிரங்கம் வைத்தியநாதர் கோயில் சாஸனத்தில்,

“........நாணியாளர் காவிலவரில் பிறை சூடி வீரப்பெருமாள் ரோகாவும், வேளாளர் ஆந்தைகளில் சேருமா பிறவியாரும் மாடைகளில் **மாளவராயர்** அவிகை **மழவராயரும்**.........” என்றிருப்பதாலறியக்கிடக்கின்றது.

கொங்குமண்டலத்தில் கோயில் பூஜை ஊழிய முதலியன செவ்வனே நடந்தேறுதற் பொருட்டு, விட்டமானியம் முதலிய பல சாசனக் கல்வெட்டுகளில் காளிங்கராயன் என்று கையெழுத்திடப் பெற்றிருப்பவை பல காணலாம்.

## தொண்டைமான்.

பண்டைய நாளிலொன் னார்பஞ்சு போலப் பறந்தகலத்
திண்டிறல் காட்டிய காளையை நோக்கியச் செம்பியனுந்
தொண்டைமா னென்றாந் தனதுநற் பேருஞ் சிறப்புமிக
வண்டமை மீதினிற் பெற்றவ னுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) முன் பகையாளிகள் பஞ்சாகப்பறக்கும்படி வென்ற வீரனை நோக்கித் தனது மாலையும் தொண்டைமானென்னும் தனது பெயரும் விருதாகக் கொடுக்கப் பெற்றவன் வாழ்கின்றதுங் கொங்கு மண்டலம் என்பதாம். (எக)

கீழ்கரைப் பூந்துறை நாட்டின் உபநாடுகளிலொன்றான பருத்திப்பள்ளி நாட்டில் ஒரு வாலிபன் தொண்டைமான் என்னும் அரசன் சேனையிற் சேர்ந்து பகைவன் மேற் சென்றான். வெற்றி பெற்றான். அத்தொண்டைமான் என்

னும் அரசன் இவனுக்குத் தன் பெயரையும் மாலையையும் விருதாகக் கொடுத்தனன். அதனால் இவனுக்குத் தொண்டைமான் என்ற பெயர் வந்தது. மல்லை சமுத்திரம் ஸ்ரீ சோழீசர் ஆலயத்துக்கு உரியவர்கள் அவர்கள் சந்ததியார். பின்பு நவாபு இடத் திற்பெரிய அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்குரிய இடங்களுக்குப்போகும் பொழுது ஒரு வெண்கலத்துடும்பு (ஒரு பறை) ஒருவன் இவர்கள் முன்னே அடித்துச் செல்வன். இது நவாபு கொடுத்தது என்கிறார்கள். தொண்டைமான் என்ற பெயா வைத்தும் வருகிறார்கள். கலியுகம் 4735 சிரீமுக வருஷத்தில் விழியகுலத்தவர்களான இவர்கள் மரபினா, மல்லைச் சோழீசர் வருக்கக்கோவை யென்னும் பிரபந்தங் கேட்டிருக்கிறார்கள்.

தென் கரை நாட்டில் மூலனூரில் தொண்டைமான் என்னும் விருதுப் பெயர் கொண்ட கீர்த்திமான் ஒருவர் இருந்ததாகத் தெரிகிறது. வளர்கடாவைக் காதறுத்த பஹறூர் தொண்டைமான் என்கிறார்கள். சங்ககிரிதுர்க்கத்தில் நவாட வைப் பார்க்கப் பல நாள் காத்திருந்தனர், காணப்பெறவில்லை. அங்குள்ள அரசகுமாரன் அருமையாக வளர்த்து வரும் ஒரு செம்மறிக்கடாவைப் பிடித்து இரண்டு காதையும் அறுத்துவிட்டனன். இவனைப்பிடித்து அரசன் முன் விட்டார் கள். ஐயா, நீடித்த நாளாகக் காத்திருந்துந் தங்களைக் காணப்பெறவில்லை. இட படிச் செய்தாவது கண்டு குறைகளைச் சொல்லலாம் என்று இத்தீங்கு செய் தேன் என்றனன். இந்தத் தைரியமான யோசனைக்கு வியந்து, வளர்கடாவைக் காதறுத்த பஹறூர் தொண்டைமான் என நவாபு கூப்பிட்டார். இதனால் இப் பெயர் வந்தது எனப் பல செய்யுட் கூறுகிறார்கள். இம்மூல புருஷனின் இயற் பெயர் தெரியவில்லை. இவன் சந்ததியார் மூலனூர் வட்டத்தில் இன்னுமிருக் கிறார்கள்.

## மும்முடிப் பல்லவராயன்.

திரிபுவ னச்சக்கிர வர்த்தி வளவன்றன் சிந்தைகொளுஞ்
செருவிற் படையைச் செலுத்திச் சயங்கொ டிறலறிந்து
விருதுப் பெயர்மும் முடிப்பல் லவவடல் வீரனென்றே
வருபட்டம் பெற்றவன் வாழ்சிங்கை யுங்கொங்கு மண்டலமே

(க - ரை) திரிபுவனச் சக்கிரவர்த்திகள் என்னுஞ் சோழவேந்தன், மேற் கொண்டுள்ள போரில் சேனாதிபதியாகப் படையைச் செலுத்தி வெற்றி கொண்டு திரும்பினமையால் மும்முடிப் பல்லவன் என்ற பட்டத்தைப் பெற்றவன் வாழ் கின்ற சிங்கை (காங்கேய) நகரமுங் கொங்குமண்டலம் என்பதாம். (எஉ)

வரலாறு:—சோழர்களில் மூன்றாம் ராஜ ராஜன் என்பவன் திரிபுவன சக் கிரவர்த்தி யென்ற விருது நாமத்துடன் கி. பி. 1216-ம் வருஷம் பட்டத்துக்கு வந்தான். அக்காலத்துப் பலவானகப் பல்லவ வமிசத்தான் "அவனி ஆளப்

பிறந்தான் கோப்பெருஞ் சிங்கன்" என்பான், இவனுடன் எதிர்த்து வெற்றியுறத் தொடங்கினான். சீரங்கத்துக்கு வடக்கே 10 மயிலில் கண்ணனூர் என்பதை இருப்பிடமாகக் கொண்டு காவிரி வடகரைப்பகுதிகளை ஆண்டுவந்த (இந்த ராஜ ராஜ சோழனது மாமன்) போஜள வீர நரசிம்மதேவன் என்பவன் கொங்கு நாட்டுப் படைகளையுந் திரட்டிச் சென்று கோப்பெருஞ் சிங்கன் தேசத்தை அழித்து வருக எனச் சேனை வீரர்களுக்குக் கட்டளையிட்டான். சேனை வீரர்கள் மேற்கண்ட பல்லவ ராஜ்ஜியத்தை நாசமாக்கித் திரும்பினர் என்பதைத் திருவயிந்திர புரத்துத் தெய்வநாயகப் பெருமாள் கோயில் பிராகாரத்து மேலைச் சுவரில் எழுதியிருக்குஞ் சிலாசாசனத்தாற்றெரிகிறது. அந்தச் சேனை நாயகர்களில் லிங்கயன் என்பவன் சென்று வெற்றி கொண்டதால் "மும்முடிப் பல்லவ ராயன்" எனும் விருதுப்பட்டம் பெற்று (சிங்கை) காங்கேயத்தை உறை இடமாகக் கொண்டான். இப்பொழுது காங்கேயம் மும்முடிப்பல்லவராயன் பட்டத்தை வகித்துவரக் கூடியவர் கொங்கு வேளாளர்களில் செங்கண்ண குலத் தலைவர். அவர்களுடைய விருதுபாட்டுகள் மேற்கண்ட சரிதையை விளக்குகிறது.

(மேற்) "போரிட்டபல்லவன் றேசத்தைவெட்டியே
பொன்மகுடம் நீ படைத்தாய்
செங்கதிர்ப்பரிதிகுல மகாராஜ ராஜனுந்
திரிபுவன சக்கிரவர்த்தி
சித்தமகிழ்தளகர்த்தர் லிங்கயப்பல்லவன்"

என்பது முதலியவற்றால் நன்கு தெரிகிறது.

### பல்லவராயன் சிறுவன்.

சங்கிராம சோழன் மரகத முத்தொடு தங்கிரதஞ்
சிங்கையிற் பல்லவன் செல்வனுக் கீயச் சிறுவன்மனம்
பங்கம தாகச் சிறுதே ருருட்டிப் புலவனுக்கு
மங்கள மேவிக் கொடுத்தவன் றன்கொங்கு மண்டலமே.

(க - ரை) மணிபதித்த சிறுவண்டியைச் சங்கிராம சோழன் என்பவன், அன்புகொண்டு சிங்கை (காங்கேயம்) மும்முடிப்பல்லவராயனது சிறுவனுக்குக் கொடுத்தனன். அதனை உருட்டி விளையாடுஞ் சிறுவனிடம் ஒரு புலவன் சென்று கேட்கக் கொடுத்த குழந்தையுங் கொங்குமண்டலம் என்பதாம். (எரு)

வரலாறு:—மும்முடிப்பல்லவ ராயன் என்று பட்டம் உள்ளவரின் குழந்தைக்குச் சங்கிராம சோழன் என்பவன் விளையாடு வண்டி ஒன்று மகிழ்ச்சியோடு கொடுத்தனன். அச்சிறுவன் அவ்வண்டியை இழுத்து விளையாடிக்கொண்டிருந்தான். ஒரு புலவன் குழந்தையின் முக வசீகரத்தைக் கண்டு மகிழ்ந்து ஐயா,

தங்கள் அரியதந்தை இப்பொழுது இருந்திருப்பரேல் மிகுந்த பரிசு பெற்றுச் செல்வேன். புலவர்கள் குறித்து வந்த இடத்துப் பரிசுபெறாது திரும்பிச் செல்லுதல் நன்றல்லவே என்றனன். குழந்தை இவ்வார்த்தையைக் கேட்டு, தான் விளையாடும் பொன் வண்டியை இரு கையாலும் எடுத்துக் கொடுத்து வைத்துக்கொள்ளுங்கள் என்று நிரம்பா மொழியாற் சொல்லிற்று. குழந்தையின் தாராள குணத்தை வியந்த புலவர் இதனைப் பெற்றுக் கொண்டு போகச் சம்மதி கொள்ளவில்லை. இக்கருத்தறிந்த குழந்தையின் அன்னையார் அறிந்து தன் குழந்தையின் உதாரத்துக்கு மனமுவப்புற்றனர் என்றும், தந்தை வந்து இந்நிகழ்ச்சியை யறிந்து பெரு மகிழ்ச்சி பூத்து, குழந்தை கொடுத்த சன்மானமே அன்றித் தான் சில பொன் ஆடை கொடுத்தனுப்பினர் எனவும் அமராவதிப் பல்லவராயன் குறவஞ்சி கூறுகிறது.

## முதலிக்காமிண்டன்.

புதுமைப் படைவேட் டுவர்சூழத் தாரா புரத்துடனே
சதுர மிகுபடை யாற்சம ராற்றிச் சயம்பெறவே
முதலிக்கா மிண்ட னெனக்கிருஷ்ண ராயர் மொழிவிருதை
மதிகொள் பருத்திப் பளிச்செல்ல னுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) தாராபுரத்து எதிர்த்த பகைவரை, வேட்டுவப் படையையும் சேர்த்துக்கொண்டு போய்த் தூரத்தி வென்ற திறமையைக்கண்டு, விஜயநகர கிருஷ்ணராயர், முதலிக் காமிண்டன் என விருதுப்பெயர் கொடுக்கப்பெற்ற பருத்திப்பள்ளிச் செல்லனுங் கொங்குமண்டலம் என்பதாம். (எ௬)

பருத்திப்பள்ளியிற் செல்ல குலத்துதித்து வலிமிகுத்தோனை ஒரு வாலிபனிருந்தான். தாராபுரம் (தென்கரை) நாட்டிற் சில பகைவர்கள் மிகுந்த தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள். இவ்வாலிபன் சேனை வீரனைப் பல கொங்குப் படைகளைச் சேர்த்து அச்சேனைத் தலைவனாகி இராஜ கட்டளைப்படி அங்குச் சென்று பகைவர்களை வெருட்டி ஓட்டினன். இவ்வலிமையை நன்கு மதித்து "முதலிக் காமிண்டன்" என்று விருதுப்பெயரை விஜயநகரம் கிருஷ்ணராயரவர்களாற் கொடுக்கப்பட்டது.

பருத்திப்பள்ளிப் புவனேசுவர சுவாமி ஆலயத்து இச்சாசனஞ் செதுக்கப்பட்டுள்ளது.

பருத்திப்பள்ளி என்பது கீழ்கரைப் பூந்துறை நாட்டைச் சேர்ந்த உபநாடுகளுள் ஒன்று. எழுகரை நாட்டொன்றுமாம். சித்திரமேழி விண்ணகரம் எனப்பழைய பெயர் இவ்வூருக்கிருந்திருக்கிறது.

(மேற்)

வெற்றியுடனே கிருஷ்ணராயரிடத்தில் வர
மேன்மைப்பட்டாபிஷேக முடிசூட்டி
முத்தின் சிவிகையில் வைத்து வலஞ்செய்தான்
முதலிக்காமிண்டனென்றும் விருதுங்கொடுத்து
நத்தூர் பருத்திப்பள்ளி நாடும் பூந்துறைநாடு
நாலாறுநாடுதானு மேலுமையாப் பெற்றேன்.— இருப்புலிப்பள்ளு.

விஜயநகரம் கிருஷ்ணதேவராயர் கி. பி. 1509 - முதல் 1530 - வரை அரசாண்டனர். (அசவுதல முதலிக் காமிண்டன்)

காடையூர்க் காங்கேயன்.

காடையிற் சேடக் குலத்தான் மகள்மெய்க் கழுவறைந்து
மேடையிற் சங்கப் பலகையுண் டாக்கிநல் வேப்பமலர்த்
தோடையும் பாடகக் காங்கேயன் றன்னைச் சுமந்துபெற்று
மாடையு நேர்தெய்வப் பேறுபெற் ருள்கொங்கு மண்டலமே.

(கு - ரை) சேடர் குலத்தலைவன் மகள், நட்ட கழுவிற் சத்தியஞ்செய்து, சங்கப் பலகை உண்டாக்கி, வேப்பமாலை பெற்ற பாடகமணிந்த இளமையனான காங்கேயனை ஈன்று பெரும்புகழ்பெற்றவளுங் கொங்குமண்டலம் என்பதாம். (எரு)

வரலாறு:—காங்கேய நாட்டுக் காடையூரில் கொங்கு வேளாளரில் சேட குலத்தலைவனுக்கு ஒரு பெண் வெண்மை நிறமாகப் பிறந்தது. கீழ்கரைப் பூந்துறை நாட்டுக் கருமாபுரத்திருந்து வந்திருந்த பொருளந்தை குலத்து வாலிபனுக்கு விவாகஞ் செய்து கொடுக்கப்பட்டது. விவாக கால ஒப்பந்தப்படிக்குக் காடையூர்க் காணி முதலிய உரிமைகளை அந்த வெண்மைப் பெண்ணின் சகோதரர்கள் கொடுக்க மறுத்தனர். கூடிய சபையின் தீர்மானப்படிக்கு நட்ட கழுவில் அப்பெண் கையறைந்து சத்தியஞ் செய்து உரிமைகளை அடைந்தனள். அப்பெண் மணியின் குழந்தைக்குக் கல்வி கற்பிக்கும் பொருட்டு, சில தேர்ந்த தமிழ்ப் புலவர்களைச் சேர்த்துச் சங்கமாக்கினள். கல்வி கற்ற சிறுவன், பாண்டிய வேந்தன் போர் வீரரிற் சேர்ந்து, சண்டை நடத்திய வெற்றி பெற்றதற்கு மகிழ்ந்து காங்கேயன் என்ற பட்டமும் மற்றும் ராஜ சின்னங்களாகிய மாலை கொடி முதலியனவும் கொடுத்தனன். இதுவன்றிப் பின்பு இம்முடிச்காங்கேயன் - மன்றாடி என்ற பட்டங்களை இவன் சந்ததியார் அடைந்திருக்கிறார்கள்.

## கட்டி முதலி.

கற்றோர் வியப்புறு கற்பணிக் கோயில் கமலநன்னீர்
வற்றா துயரட்ட கோணக் குளமும் வகுத்ததன்றிச்
சுற்றோர் சதுரங்கம் வில்கயல் வேங்கை தொடர் கொடிகள்
மற்றோர்க் கிலையெனப் பெறுகட்டி யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சிற்பநூற் புலவர்கள் வியப்புறத்தக்க கற்பணிக் கோயிலும், எண்கோணமான குளமும் செய்ததல்லாது, சதுரங்கம் - வில் - மீன் புலி முதலிய விருதுக் கொடிகளையுஞ் சிறப்பாகக் கொண்ட கட்டிமுதலியுங் கொங்கு மண்டலம் என்பதாம். (எசு)

வரலாறு :—சிற்ப வேலை பேசுபவர்கள் **தாரமங்கலம் - தாடிக்கொம்பு** என்னும் இரண்டு ஆலய வேலை நீங்கலாக மற்றும் எந்தக் கோயிற் கற்பணிபோல வேனுஞ் செய்து கொடுக்கிறோமென்று பேசுவது வழக்கமாம். வெகு அருமைப் பாடான வேலை செய்திருப்பதை நாளும் பார்க்கலாம். தாரமங்கலம் கோயில் முன் மண்டபத் தூணொன்றில் ராமரும் மற்றொரு தூணில் வாலியும் வெட்டப் பட்டுள்ளது. வாலியிடத்து நம் கண்ணை ஒட்டிப்பார்த்தால் ராமர் தெரிவதில்லை. ராமரிடங் கண் பொருந்தப்பார்த்தால் வாலி தெரிகிறான் என அதிசயிக்கிறார்கள். தாரமங்கலங் கோயிலே அன்றி திருச்செங்கோட்டிலும் (திருநணா),பவானியிலும் பல கற்பணிகளும் பல கட்டளைகளுந் திருவாபரணங்களும் அர்ச்சகர்களுக்குத் திரு மடம் முதலியனவும், வேதாகம பாடசாலை வைத்துக் கல்வி கற்பித்துக் கொடுத்த தோடு அமையாது, படிப்பை ஆராய்ந்து தேறியவர்களுக்குப் பரிசு அளித்தும் திருவிழா முதலியன பல நடத்தியுமிருக்கிறார்கள். ஆற்றூர் அந்தியூர் முதலிய இடங்களிற் கோட்டையும் பல ஏரிகளுங் கட்டியிருக்கிறார்கள். வணங்காமுடிக் கட்டிமுதலி. சீயாலகட்டி முதலி-இம்முடிக்கட்டி முதலிஎன பல தலைமுறையினர் தாரமங்கலம், முதலிய பல இடங்களைக் கட்டி ஆண்டிருக்கிறார்கள். பாண்டியர், நாயக்கர், மைசூர் அரசர்கள் காலத்து மிகுந்த பராக்கிரமமாக வாழ்ந்திருக்கிறார்கள். வேளாளவகுப்பினராவர். இவர்கள் திருப்பணியைப்பற்றித் திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை, சேலம் மானியூல், கஜட்டியர், கோயமுத்தூர் மானியூலிலும் இவர்களது சரித்திரம் பரக்கக்காணலாம். அங்கங்கே பல கற்சாசனங்களு மிருக்கின்றன.

## அன்னத்தியாகி.

பன்னப் படாதருந் தப்புன லற்றிடோர் பஞ்சமுற்றங்
கன்னித் துறைப்பாண் டியன்படைக் கெல்லாங் களித்தமுதிட்

டன்னத்தியாகி யெனவச் செழிய னழைக்க வுயர்
வன்னப் பரிவேன் முளசையுஞ் சூழ்கொங்கு மண்டலமே

(க - ரை) உண்ணுதற்குத் தண்ணீரு மகப்படாத பஞ்சகாலத்திற் பாண்டியன் சேனைக்கு அமுதூட்டி அன்னத்தியாகி என்று புகழ்ப்பெயர்பெற்ற வேலன் என்பவனது முளசை நகருங் கொங்குமண்டலம் என்பதாம். (எஎ)

வரலாறு :—பாண்டிநாட்டிற் கொடும் பஞ்சம் பரவிய காலத்தில், அப்பொழுதுள்ள பாண்டிய ராசன் தன் சேனைகளின் ஒரு பகுதியை முளசை வேலப்பனிடம் அனுப்பினன். பஞ்சம் நீங்கும் வரையில் அப்படைக்கு அன்ன முதலியன உதவி நற்காலம் பிறந்தபின் சேனையை அனுப்புமாறு அரச நிருபம் வரும்வரையில் மகிழ்ச்சிகூறக் காப்பாற்றினன். இவ்வித அரிய பெரிய குணத்தை நன்கு மதித்து அன்னத்தியாகி என்ற பட்டங் கொடுத்தனன்

(மேற்) தென்னவன் படைக்குச் செழிப்புறு வரையி
லன்ன மளித்த அன்னத் தியாகி.—(முளசையார் மெய்க்கீர்த்தி.)

மாசிவிழாப் பூசவிழா வைகாசித் திருநாண்மண் டபங்கடாமும்
பூசைபடி தினமாறு படிமாலை திருவிளக்கும் புரிந்தேந்நாளுஞ்
தேசமது புகழ்ந்திடவே யேவைவளம் பதியன்னத் தியாகராசர்
நேசமுடன் பணிமலைவா ழுமைபாகர் தமைவணங்கி நிலைநின்றாரே.
—(திருச்-திருப்பணிமாலை.)

இவன் மரபினனொருவன், அடங்காத மரக்குதிரையேறி அடக்கிய வன்மையை வியந்த பாண்டியன், பெருத்த வெகுமதியும் அதிகாரமுங் கொடுக்கப் பெற்றுள்ளான் என்ற சரித்திரமு மிருக்கிறது.

அன்னத்தியாக பட்டன் என்கிற ஒரு புலவர் குடும்பத்தார் இன்னுமிருக்கிறார்கள்.

## காழிப்புலவன்.

பரந்த கடலுல கெல்லா மறியப் பரமசிவ
னிரந்தர மாயருள் சண்முக வேலனன் னேயத்தினாற்
புரந்தரன் போற்றும் நெருவூரிற் காழிப் புலவன்பட்ட
மரந்தழை யக்கவி பாடிய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சுப்பிரமணியர் அருளைக்கொண்டு நெருவூரிற் பட்டமரத்தைத் துளிர்விட்டுத் தழைக்கும்படி தமிழ்க்கவி பாடிய காளிப்புலவனுங் கொங்குமண்டலம் என்பதாம். (எஅ)

வரலாறு :—தொண்டைமண்டலத்து வல்லம் என்னுமூரில் இடையர்களிலே கல்வி கேள்விகளிற் சிறந்த நம்பிகாளி என ஒரு வித்வான் வாழ்ந்தனர். இவன் நெற்குன்றஞ்சென்று பெருங்கொடைவள்ளலாக விளங்கும். களப்பாளராஜன் என்னும் நெற்குன்றவாண முதலி மீது ஒரு பிரபந்தம் பாடினன். தமிழ் அறிவிற் சிறந்த அம்முதலியார் இவர் பாடிய பிரபந்தத்தின் உயர்வை நோக்கித் தன் ஊர்-வீடு முதலிய பொருள்களைக் கொடுத்ததுமன்றித் தானும் அடிமையாய்விட்டனர். பெற்றுக்கொண்ட வித்வான், கொடைவள்ளலை அடிமையினின்று நீக்கிவிட்டனன். பின்பு திருப்புகலூரை யடைந்து சிவபெருமான் மீது அக்களப்பாளர் திருப்புகலூரந்தாதி பாடினரெனக் கூறுவர்.

(மேற்) பன்னுந் தமிழ்க்கவன் மாமணை யாதி பரிசளிப்ப
முன்னம்பி காளிக்கு நெற்குன்ற வாண முதலியென்போன்
பின்னுஞ் சிலபல பொன்னுங் கொடுத்துத்தன் பேர்நிறுத்த
மன்னுந் தமிழ முரைத்தா னவன்றொண்டை மண்டலமே."

கற்குங் கவிவல்லை யாதவர்கோ னம்பி காளிக்கியாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன்ற மும்புகழ் கங்கா நதியும் பொதியமும்போ
னெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே.-(நாவலர் சரிதை)

பின்பு யாதவர் கோனான நம்பி காளி என்னுஞ் செந்தமிழ்ப் புலவர் தேச சஞ்சாரஞ் செய்து வரும் பொழுது கொங்குமண்டலத்தே நெருவூர் என்னும் நகரத்தைச் சேர்ந்தனர். கையேட்டுக்காரர்களால் இப்புலவரின் வாக்கு வல்லமையைக் கேட்டவிப்பிரர்கள் அழுக்காறுகொண்டு இந்நாவலரையுந் தமிழையு மிகழ்ச்சி கூறினார்கள். மாணுக்கர் மறுத்தெதிர் கூறினர். தமிழுந் தமிழ்ப்பாக்களுந் தெய்வ அருள் நிரம்பியதென்பது உண்மையாயின் பட்டுப்போன இந்த மரத்தைத் தழையும்படி பாடுவரோ? என்றார்கள். தெய்வத் தமிழ் என்னும் சொல்லை நிலையாக் குங்கவென்று மாணுக்கர் வேண்டுதலும் ஒரு வெண்பாக் கூறினர். பசுமையாய்த் தளிர்விட்டது என்பர்.

(மேற்) தேய்வத் தமிழென்னுஞ் செம்மொழியு மஃமொழிநேர்
செய்விப்பர் தேவரெனல் தேறத்—தெய்வத்
சுரந்தளிக்கு மாநெருவூர்ச் சோலையிலே பட்ட
மரந்தளிர்க்க வின்று வளர்ந்து.



அல்லாளன் இளையான்.

வடமுக நின்று வருகா விரியின் வனத்தையென்றுந்
திடமுறு கொங்கினும் பாசன மாகச் செலப்பிரித்த

அடல்கொ ளல்லாள னிளையான் பெருக்க மமைந்துவளர்
வடகரை யாற்றார் திகழ்வது வுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) வடதிசையினின்றுவந்த காவிரி நீரைக், கொங்குநாட்டினும் பாசனமாகும்படி வாய்க்காலாகப்பிரித்த வல்லாள இளையான் வாழ்கின்ற வடகரை ஆற்றூருங் கொங்கு மண்டலம் என்பதாம். (எக)

வரலாறு :—கொங்கு இருபத்து நான்கு நாட்டினுள்ளே கீழ்கரை அரைய நாட்டில் வடகரை ஆற்றூரிலே வேட்டுவரில் இம்முடித்திருமலை அல்லாள இளையா நாயக்கன் என ஒரு தக்கோன் இருந்தான். அவன் திருச்செங்கோடு ஸ்ரீநாகேசுரர், அர்த்தமண்டபம், மஹாமண்டபம் முதலிய திருப்பணிகள் செய்தான். கோயிற் கற்பணி வேலை மிகச் சிறந்தது எனலாம். மைசூர்ப் பெருங்கலகக்காரனும், கொள்ளைக்காரனுமான நஞ்சய உடையார், ஸ்ரீ அர்த்தநாரீசுரர் ஆலயத்திற் கொள்ளை அடித்துக்கொண்டு போனான்; என்றாலும் ஆறை இளையா நாயக்கன் பலத்த சேனையுடன் சென்று அவர்களை வழிமறித்துக் கொள்ளைப் பொருள்களைப் பிடுங்கிக்கொண்டு வந்து சேர்த்தான். அழிந்தவற்றிற்குத் தன்னுடையதாகப் பல உதவினான். சாலிவாக-சகாப்தம் 1565 தாரண ஐப்பசி மாதம் 25 தேதி (கி. பி. 1643) நாகேசுரர் கோயிலில் சம்புரோக்ஷணஞ் செய்வித்திருக்கிறான் காவிரியின் வடபுரம் அணையின்றி வாய்க்கால் பிரித்துப் பாசன வசதி செய்திருக்கிறான். இவ்வாய்க்காலை ராஜ வாய்க்காலென வழங்குகிறார்கள். முற்காலத்தில் ராஜ ராஜன் ஆட்சியில் வெட்ட ஆரம்பித்திருக்கலாம் என்று சிலர் எண்ணுகிறார்கள். இவன் மரபினருக்கு இவ்வாய்க்காலில் மரியாதை உண்டு என்பதன்றி கபிலைமலை முதலிய தேவஸ்தானமுள்ள கீழ்கரை அரைய நாட்டிலெல்லாம் முதன்மை இருக்கிறது.

(மேற்)

மூவருக்கு மகத்தியமா முனிவருக்கு மரசிருந்த முன்னை யோர்க்குந்
தேவருக்குந் திரும்பாத காவிரியைக் கோங்கேற்றித் திறை கோண்டாயே
பூவிருக்கு முரமாயன் கடலடைத்தா னவன்வேடம் புணர்ந்தவாரே
யாவருக்கு மிளையானே யல்லாள திருமலையா வீகையோனே.

திருச்செங் - திருப் - மாலை 262 செய்யுள் முதல் 268-வது செய்யுள் வரை நோக்குக. கபிலை மலைக்குழந்தைக் குமாரர் வருக்கக்கோவை 77-வது செய்யுளில் இவன் புகழப்படுகிறான். இந்நூல் கலி - 4740-ல் (கி.பி. 1640) அரங்கேற்றப் பெற்றது. சென்னை (சாசனபரிசோதக) ஆர்க்கலாஜிகல் 1907-1908 வருஷாந்த ரிபோர்ட்டு 2-வது பிரிவு 16-வது பக்கத்து இவன் குறிப்பு இருக்கிறது.

## அதி யேந்திர விஷ்ணுக்ரஹம். நாமக்கல்.

புதிதாய் மலையைக் குடைந்துநற் சிற்பப் புலவரைக்கொண்
டிதிகாச மான கதையைச் செதுக்குவித் திம்பர்மகிழ்ந்
ததியேந்த்ர விஷ்ணுக் கிரகமென் றேத்த வமைத்தவனும்
மதியூகி யான வதிகனும் வாழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) சிற்ப சாஸ்திரிகளைக் கொண்டு மலையைக் குடைந்து பழங் கதைகளான பிரதிமைகளைச் செதுக்கி அதியேந்திர விஷ்ணுக்கிரஹம் என்று ஆல யத்துக்குப் பெயர் கொடுத்த அதியன் வாழ்வதுங் கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு :— நாமக்கல் மலை இடையில் கீழ்ப்புறம் பாறையைக் குடைந்து அரங்க நாதனுடைய கோவிலமைக்கப்பட் டிருக்கிறது. இரண்டு தூண்களை யுடைய மேடை ஒன்று. அதனடிப்பாகம் மூன்றடுக்குகள். இரண்டு தூண்களை யுடைய கூடம். குகையின் மேற்பாகம் வளைவாக வந்து நீண்டிருக்கும் ஒரு தாழ் வாரம். தூண்களுக்குச் சரியாய்ச் சுவரெழுப்பி மூன்று கதவுகள் வைத்திருக்கிறார் கள். நடுக்கதவின் வழிதான் கோவிலுக்குப் போகவேண்டும். மற்ற இரண்டு வழிகளும் வைகுண்ட ஏகாதசியன்று திறக்கப்படுவன. உயரமான மேடையின் பேரில் கார்க்கோடகனென்னும் பாம்பைப் பாயலாகக் கொண்டு அரங்கநாத சுவாமி சயனித்திருக்கிறார். அக்குகையின் மேற்குச் சுவரின் சமீபத்தில் தும்புரு, நாரதன் பதஞ்சலி, பிரமன், நான்கு கந்தருவர்களைப்போலப் பிரதிமை செதுக்கப்பட்டிருக் கின்றன. சுவாமியின் பாதத்தின் சமீபத்தில் மேடையின் வடக்குச் சுவரில் மது, கைடவர் சந்திரன் இவர்களைப்போ லமைக்கப்பட்டுள்ளது. சூரியன் உருவம் சுவாமியின் சிரசுக்குச் சமீபத்தில் தெற்குச் சுவரிலிருக்கிறது. படுக்கையின் கீழ் பஞ்சாயுதங்க ளிருக்கின்றன. (மேடைக்கும் வெளியிரண்டு தூண்களுக்கு மிடையே) சாம்பவந்தன், மகாபலி, சில கந்தருவர்கள் வாமனவதாரத்தோடு திருவிக்கிரமாவதாரமுமிருக்கின்றன. இதற்கு எதிர்த்த வடக்குச்சுவரில் சிவனும், இடதுபுறம் விஷ்ணுவும் சேர்ந்த சங்கர நாராயணனது பிரதிமையிருக்கிறது. ஏழு முக்கிய நதிகளும், அவற்றிற்கருகே பால நரசிம்மனுருவமுமிருக்கிறது.

அதே மலையின் மேல்புறம் பாறையைக் குடைந்து நரசிம்ம சுவாமி கோவில் அமைக்கப்பட்டிருக்கிறது. சிற்ப வேலைகள் செய்த மூன்று அறைகளும் முன்னு லிரண்டு தூண்களும் ஒரு தாழ்வாரமுமிருக்கின்றன. உயர்த்தப்பட்டதும் இரண்டு இரட்டைத் தூண்களுடையதுமான நடுவறை மேடையின் மேலிருக்கிறது. நர சிம்ம சுவாமியின் உருவம் உட்கார்ந்த நிலையிலிருக்கிறது. சுவாமியின் பீடத்திற் குச் சரியான மட்டத்திற்கு வலதுபுறத்தி லொருவருக்குப் பின் ஒருவராக, உருத் திரன் - சூரியன் - சனகனும், இடதுபுறத்தில் சனந்தனன் - சந்திரன் - பிரமாவு மிருக்கிறார்கள். இதில் சூரியனும் சந்திரனும் சாமரம்போடுகிறார்கள். சனக

னுஞ் சனந்தனனும், உலகத்தில் நடக்குங் காரியங்களைத் தெரிவிக்கிறார்கள். உருத்திரனும் பிரமனும் இரணியனது வதத்தின்போதுண்டான கோபத்தைத் தணிக்கிறார்கள்.

இரண்டாவதறையில் இரணியனைத் தொடையிற் கொண்டு இரண்டு கைகளாலவன் வயிற்றைப் பீறுவதும், இரண்டு கரங்களால் அவன் கைகால்களைப் பிடித்துக் கொண்டிருப்பதும் மற்றுமிரண்டு கரங்களில் சங்கு சக்கிரமும், வேறிரண்டு கைகளில் வாளும் வில்லுங் கொண்டிருப்பதுபோலுங் காணப்படுகிறது. மூன்றாவது அறையில் வராக அவதாரம். வராகத்தின் தலைக்கு மேலே நான்கு வேதங்களாகிய நான்கு தலைகளிருக்கின்றன. அடியிலொரு புறம் ஆதிசேஷனும் மறு புறம் பூமி தேவியும் கலியுகத்தின் முடிவில் வரப்போகிற பாதங்களைக் காணக் காத்திருக்கிறார்கள். வடக்கு, தெற்கு இவ்விரண்டு சுவர்களிலும் இரண்டு மாடங்களிருக்கின்றன. தெற்கே இருப்பது வாமனாவதாரம். நடுவிலிருப்பது திருவிக்கிரமன். கீழே குடை பிடித்துக் கொண்டிருப்பது வாமனாவதாரம். மேலே தூக்கியுள்ள பாதத்தை பிரமன் பூசைசெய்வது போலவும், அதற்குப்பக்கத்தில் திருவிக்கிரமனது வெற்றிக்காக ஜாம்பவந்தன் பேரிகை யடிப்பது போலவும் காட்டப்பட்டிருக்கிறது. கீழே மகாபலி தானங்கொடுப்பதற்குச் செம்பில் தண்ணீரோடு நிற்கிறான். திருவிக்கிரமனது இடதுகாலுக்குச் சமீபத்தில் கருடன் சுக்கிரனது முதுகிலேறிக்கொண்டு, மாவலியின் கொடையைத் தடுத்ததற்காகத் துன்புறுத்துகிறான். வடக்குச் சுவரின் மாடத்தில் வைகுண்ட நாராயணனது பிரதிமையிருக்கிறது. தேவர்கள் தங்களைத் துன்புறுத்துபவனாகிய இரணியனைக் கொல்லுமுருவத்தைக் கண்டு களிக்க, ஸ்வாமி அபயாஸ்தங் கொடுப்பது போலிருக்கிறது. இவ்விரண்டு கோயில்களும் மலையைக் குடைந்தே தூண் கொடுங்கை மேடை விக்கிரகமெல்லாம் செய்யப்பட்டுள்ளன.

நரசிம்மசுவாமிக்கும், இரங்கநாதசுவாமிக்கும் முறையே தமிழ்ப் பழம்பெயர்; சிங்கப் பெருமாள், பள்ளிக்கொண்ட பெருமாள் எனச் சாசனங் கூறுகிறது. இது வடகொங்கு. ஏழூர்நாடு. இந்நூல் சஉ - வது செய்யுளின் கீழ் நோக்குக.

1906ஞூ த்திய சாசன பரிசோதனை அறிக்கை பக்கம் 74, 75, 76.

நெற்போர் வேவப்பாடியது

போயா தரவுடனெற்போர் கிடந்திடப் புற்றிரைச்சற்
றீயார வெந்து பொடிபட வென்றன்று செந்தமிழால்
ஓயாத வாக்கிதென் மங்கைச் சுவாமியென் றோர்புலவன்
வாயார வங்ககம் பாடின துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) விஜய மங்கலம் சுவாமிநாதப் புலவன், புற்றிரைச்சலுக்குப் போய் அங்கிருந்த நெற்போர் சாம்பலாகுமாறு வசைபாடியதுங் கொங்கு மண்டலம் என்பதாம். (அக)

வரலாறு:—குறும்பிநாட்டில் விஜயமங்கலத்துச் சாமிநாதப் புலவன் என்பவன் பொன்கலூர் நாட்டுப் புற்றிரைச்சல் என்னும் ஊருக்குப்போனான். அவ்வூரதிபனாக இருந்த முத்தான் என்பவனைக் கண்டு கஷ்டகாலமா யிருக்கிறது, தயவுசெய்து நெல் உதவ வேண்டுமென்று பலமுறை மிகப் பரிவுகொண்டு கேட்டனன். என்னிடத்திலில்லை எனக் கடிந்தனன். தன்னிடத்தே நிரம்ப வைத்துக்கொண்டு அன்புபாராட்டும் புலவனுக்கு இல்லை யென்றதற்கு மிக வருத்தமுற்று ஒருவசை வெண்பாப் பாடினன். அவனது நெற் போர்கள் தீப்பிடித்து வெந்து சாம்பராய் விட்டது என்பர்.

வசை வெண்பா.

(மேற்) பாழ்த்தவவப் புற்றிரைச்சற் பாவிமுத்தான் குன்றையொப்ப
வீழ்த்தநெற்போர் வெண்பொடியாய் வேகவின்றே—வாழ்த்தக்
கோடாதா னிடாதான் குறுந்துணியுந் தோய்த்தே
உடாதான் பெருந்துயரு ஊற்று.—(தனிப்பாடல்.)

## விஜயமங்கலம் - உலகுடையான்

சொல்லிக் கினிய வகத்துறைக் கோவை சொனபுலவன்
பல்லக் கெடுத்துக் கழனியும் பொன்னும் பரிசளித்த
வெல்லப் படைத்தலை வீர னுலகுடை வீரனமர்
மல்லர்க் கினிய குறும்பணை நீள்கொங்கு மண்டலமே.

(க - ரை) இனிமையான அகத்துறைக் கோவை பாடிய புலவனுடைய பல்லக்குச் சுமந்து வயனிலமும் பொருளும் பரிசு கொடுத்தவனான படைத்தலை வேளாளர்களில் உலகுடையான் என்பவனது குறும்பு நாடு சூழ்ந்தது கொங்கு மண்டலம் என்பதாம். (அஉ)

வரலாறு :—இச்செய்யுளிற் குறிப்பிடும் அகத்துறைக் கோவைச் செய்யு ளொன்றுங் கிடைக்கவில்லை. புலவன் பெயரும் சொல்வாரில்லை. ஆனால் அக் கோவையைக் கேட்டுப் புலவனது பல்லக்கைச் சுமந்து வயலும் பொருளும் உதவியவனான உலகுடையான் என்னும் பெயர் உள்ள ஒரு சாசனம், விஜயமங்கலம் நாகேசுர சுவாமி கோவிற் புறச்சுவரி லிருக்கிறது.

(No. 565-1905) 'ஸ்வஸ்திஸ்ரீ ஸுந்தர பாண்டிய தேவற்குத் திரு வெழுத்திட்டுச் செல்லாநின்ற...............கக-வது தை மாதம் குறும்பு நாட்டு

விஜயமங்கலத்து வெள்ளாழர் படைத்தலைகளில் (ந)ம்பி உலகுடையானேன் விஜயமங்கலம் ஆன அவத்தூரில் நாயனார் விக்ரம சோழீஸ்வரமுடையாற்கு வைத்த திரு நந்தா விளக்கு ஒன்றுக்கு ஒடுக்கின பணம்.............ங்கைக் கொண்டோமிக் கோயில் காணியுடைய சிவ ப்ராஹ்மணரில் கௌசிக கோத்ரத்து முதல் உத்த.............பதினயக னுள்ளிட்டாரும் காஸ்யப கோத்ரத்து பிறைசூடி அப்ப.............க்ரமவித்த னுள்ளிட்டாரு மாடல கோத்ரத்து பிள்ளை யூரம் வாழி...........னும் குடங்கொண்டு கோயில் புகுவான் சந்த்ராதித்த வரை எரிப்பதாக இது பந்மாஹேஸ்வரரக்ஷை.

## பூந்துறை வாரணவாசி

வாரண வாகன னேயென மன்னர் மனமதிக்குங்
காரண வாண்வணங் காமுடிக் கட்டி கனத்தபடை
பூரண வாகினி யுஞ்சிரந் தாழப் பொருது வென்ற
வாரண வாசி வளர்பூந் துறைகொங்கு மண்டலமே.

(க - ரை) வேந்தர்கள், இவன் தேவேந்திரனே யென்று மதிக்குங்காரணம் பெற்றவனான வணங்காமுடிக் கட்டி முதலியும், தகுதி வாய்ந்த அவன் முழுப் படைத் தொகையும் தலை கவிழுமாறு போர் செய்து வென்ற வாரணவாசி யென்பவன் வசித்துள்ள பூந்துறையுங் கொங்குமண்டலம் என்பதாம். (அங)

வரலாறு:— மேல் கரைப்பூந்துறை நாட்டுக்குத் தலைவன் வாரணவாசி யென்பவன், இச்சதகத்தின் ௬௩-ம் பாட்டிற் குறித்த குப்பிச்சி என்பவனது வழித் தோன்றலாவன். நாட்டதிகாரிகள் சிலம்ப வித்தை பழகியும் நாட்டுப்படை ஆக்கியும் வைத்திருப்பர். போர்த்தொழில் நன்கு பயின்றிருப்பர். இக்கொள்கை ௧௮-ம் நூற்றாண்டு வரையிருந்தது. பலவகையிலும் வலிமையுள்ள வணங்காமுடிக் கட்டி முதலியை இவ்வாரணவாசி வெற்றி கொண்டது விசாரிக்கத்தக்கது.

கட்டி முதலி என்பது ஒரு குடும்பத்தின் பொதுப் பெயராக உள்ளது. வேறு சிறப்புப் பெயர் சேர்ந்து ஒருவரைக் குறிக்க வரும். இவர்கள் தாரமங்கலம் அமரகுந்தி நகரங்களைத் தலை நகரங்களாகக் கொண்டிருந்தனர். தொண்டை மண்டல வேளாளர். இளமன் கட்டி கட்டினதால் இளமீசுரர் கோயிலென ஒரு சிவாலயம் தாரமங்கலத்திருக்கிறது. ஒளசல ராமநாத ராஜாவின் அரசியல் ஆண்டு 14-20 (கி. பி. 1268 ; 1274) சாசனங்களும் 2-வது ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் (கி. பி. 1281, 1289, 1290, 1302) ஆண்டுகளின் சாசனங்களும் இளமீசுரர் கோவிலிலிருப்பதால் சாசன காலங்களுக்கு முற்காலத்திலேயே, கட்டி

முதலி சந்ததியிருந்து சிவாலயத்திருப்பணி செய்துள்ளார்களென்று விளங்குகின்றது. தாரமங்கலம் கைலாசநாதர் கோயிலை மும்முடிக்கட்டி முதலியாலும், சீயால கட்டி முதலியாலும் முறையே செய்யப்பட்டு வணங்கா முடிக்கட்டி முதலியால் வேலை முடிவு பெற்றதாம். சேலம் ஜில்லா கோயமுத்தூர் ஜில்லாக்களில் பல கோயில்கள், குளங்கள், ஏரிகள், கோட்டைகள் கட்டி இருக்கின்றனர். தெய்வபத்தி, அடியார் பத்தி, கல்விப்பெருக்கு, பொது வகை உபகாரங்கள் முதலிய நல்லறங்கள் பல இயற்றி வாழ்ந்தனர். இவர்களது பெண்பாலரும் இத்துறையிற் றலைநின்றுளார் என்பதைப் பவானி சங்கமேசுவராலய சாசனம் காட்டும். திருச்செங்கோடு திருப்பணி மாலை 248 - முதல் 261 - வரையுள்ள பாடல்கள் திருச்செங்கோட்டிற் செய்த தருமங்களைக் கூறுகிறது.

கௌட சூடாமணி - வித்யாசமுத்திரம் எனப் பட்டப்பெயர் பெற்ற ஸ்ரீகண்ட தேவனது தகப்பனுருக்கு நிலதானம் அமரகுந்தி, தாரமங்கலம், செம்மணிக்கூடல், கணபதி நல்லூர், செட்டிமாங் குறிச்சி, முப்பௌவை சமுத்திரம், மூப்ப சமுத்திரம், திருவெள்ளரைப் பள்ளியும், வணங்காமுடி சமுத்திரம், இளமை சமுத்திர முதலிய கிராமங்களும் நிலங்களுந் தானஞ் செய்துள்ளார்கள். எழுகரை நாட்டு வரியைக்கொண்டு சிதம்பரத்துள்ள ஒரு சைவ மடம் நடைபெற்றதை விஜய நகரஞ் சதாசிவராயர் காலத்துசசாசனந் துலக்குகிறது. இவர்களது அதிகாரம், மும்முடித் தலைவாசல் கிழக்கு, கரூர் தெற்கு, தாராபுரம் மேற்குமிருந்தது. மதுரை சமஸ்தானத்துக்கு முக்கியமான 72 பாளயக்காரரில் கொங்குமண்டலத்துக்குத் தாரமங்கலங் கட்டி முதலியார் - சேந்தமங்கலம் இராமச்சந்திர நாய்க்கர் என்னும் இருவர்களாவார்கள். என (Mr. F. J Richards) சேலம் கஜட்டியரில் கூறுகிறார். மற்று ஒரு காலத்தில் திருச்செங்கோடு தாலூகா கொக்கராயன் பேட்டை மிட்டா இரையமங்கலம் தெற்கும், பவானித் தாலுகா அந்தியூர் மேற்குமாக இருந்தது.

மதுரை விசுவநாத நாயக்கரின் மாதிரியைப் பின்பற்றியே தலைகோட்டை யுத்தத்தின் பின்னர் 25 வருஷ காலம் கப்பங்கட்டும் ஆதிக்கத்தை வளர்த்து வந்தனர். விஜய நகர அழிவுக்கு ஏதுவான தொந்தரவுகளினால் மதுரை நாயக்கரோடு சேர்ந்துகொண்டு அவர்களுக்குச் செய்த உதவிக்காக மைசூரிற் சில நிலங்களை அடைந்து அவர்களோடே வேலை செய்து வந்தனர். திருமலை நாயக்கர் காலத்தில் மதுரையில் சிற்றரசர்களாகவுமிருந்தனர். கடைசியாக மைசூர் தொட்ட தேவ ராஜாவுக்குக் கீழ்ப்படிந்தனர். 1641-ம் வருஷத்தில் கந்தருவ நரச ராஜாவின் சேனைகள், காவேரிபுரம் கணவாய் வழியாக இறங்கி வணங்கா முடிக்கட்டி முதலியைத் தோற்கடித்தது. இந்தக் கந்தருவ நரசவேந்தன் சேனையில் வாரணவாசி சேர்ந்திருந்து வணங்கா முடிக்கட்டி முதலியுஞ் சேனையுந் தோல்விபெறச் செய்தனன் என்ப.

வெண்பா

(மேற்) மாற்றலர்மண் கோள்ளும் வணங்கா முடிக்கட்டி
ஆற்றலழிந் தேங்கி யடங்கினன்—தாற்றரம்பைப்
பூங்கனித்தேன் பாய்மருதப் பூந்துறையான் சேவணமதிற்
பாங்குறுத்துச் செய்கோடுமை பார்த்து.—(தனிப்பாட்டு)

## பயறு மிளகானது

அணித்திகழ் சேர்தென் கரைநாட்டி லப்பிர மேயருக்கு
பணித்தொழி லான தளர்ச்சியி னல்வெறுப் பாயொர்செட்டி
எணிதுதொலே யாத மிளகைப் பயறென வெம்பெருமான்
மணிப்பய றுக்கின தும்புகழ் சேர்கொங்கு மண்டலமே.

(க - ரை) தென்கரை நாட்டில் எழுந்தருளிய அப்பிரமேயருக்கு, மிளகைப் பயறென ஒரு செட்டி பொய் சொன்னவாறே அம்மிளகு பயறானதுங் கொங்கு மண்டலம் என்பதாம். (அ௪)

வரலாறு :—மலையாளத்துக் கொச்சியில் மிளகு கொண்ட ஒரு வேளாண் வணிகன் வறுமையில் மெலிந்து இனி வெளிச்சென்று வர்த்தகஞ் செய்யவேண்டு மென்று தீர்மானித்தான். எருதுகளின்மேல் மிளகுப் பொதிகளை யேற்றிக் கொண்டு ஆம்பிராவதி தீரமான தென்கரை நாட்டில் இடைஞானியாரால் பூசிக்கப்படும் சிவபெருமான் எழுந்தருளியுள்ள வனத்தில் வந்து இறங்கினன். ஒரு கிழப்பிராமணனாக அக்கோயிற் கடவுள் எதிர்தோன்றி, கொஞ்சம் மிளகு தருதல் வேண்டு மென்று கேட்டனர். இப்பொதிகள் பயறு என்றனர். “அப்படியே ஆகுக” எனப் போயினர். வணிகன் மூட்டைகளை எருதுகளின்மீது ஏற்றிக் கொண்டு திருவாரூர் போய்ச்சேர்ந்தான். மிளகு விலைபேசினன். தொகையைப் பெற்றுக்கொண்டு மூட்டையை அவிழ்த்துக் கொட்டினன். எல்லாம் பயறாகவே இருந்தது. வர்த்தகர்கள் எல்லோரும் இவன் புரட்டன் எனச் சினந்தார்கள். அப்பொழுது முன்வந்த கிழப்பிராமணன் வந்து செட்டியாரே, தென்கரை நாட்டில் நான் கொஞ்சம் மிளகு கேட்டபொழுது இது பயற்றுப்பொதியென்றீரே என்றனர். வணிகன் திகைத்து இப்பொழுது தோன்றியவரும், முன் வந்தவரும் சிவபெருமானே எனத் துணிவுகொண்டு வணங்கி எம்மடிகளே, மிளகைப் பயறுசெய்த நீரே, இப்பயறை மிளகு செய்தருளும் என்று வேண்டினன். தென்கரை நாட்டில் இடைச் சிறுவனிட்ட பந்தல் எமது கோயில். அதனைக் கற்பணி செய்யென மறைந்தருளினர். குவித்துள்ள பயறுகளெல்லாம் மிளகு ஆயின.

அவ்வி டத்திலுறை யும்பதத்துமுன தருகுவந்து மிள காசையாற்
செவ்வி பெற்றமெய் வருந்தி நின்றது போமுது போனகுறி தேறுவாய்
பவ்வ மற்றநெறி வணிகனே நமது பணிசெ யென்றுதவி பயறெலாம்
வெவ்வி யற்கைபெறு மிளகு செய்தருளி யேகினூர் பரம வெளியிலே.
—(அப்பிரமேயர் தலபுராணம்).

## இம்முடி மசக்காளி மன்றாடி.

நல்லார் புகழ்மசக் காளி கவசையி னுவினிசை
யெல்லாஞ் சொலினில்லை நில்லாமற் பல்லக் கிரவைபற்றிச்
சொல்லா லுயர்ந்த படிக்காசன் கட்டிச் சுமக்கக்கவி
வல்லா ரடித்துத் துறத்திய துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) மசக்காளி மன்றாடியின் கவசை (ஆறை நாட்டுள்ள சர்க்கார் சாமக் குளம்= கோயிற்பாளயம்) நகரில் நடந்த பா இயற்று வாதப்போரில் நிற்கவில்லை யென்று பல்லக்குஞ் சன்மானப் பொருள்களையும் பற்றிக்கொண்டு, மற்றை உள்ள வற்றை மூட்டை கட்டிப் படிக்காசுப்புலவர் சுமந்து நடந்து போகும்படி ஊரை விட்டகற்றிய கவிசொல்லுந் திறமுடையவருங் கொங்கு மண்டலம் என்பதாம். ()

வரலாறு :— படிக்காசுப் புலவர், இராமநாதபுரம் இரகுநாதசேதுபதியின் சமஸ்தான வித்வானுகவிருந்து பின் தலயாத்திரையாகக் கொங்கு புகுந்தார். கவசை ஆறை நாட்டுள் (சர்க்கார் சாமக்குளம் கோயிற்பாளயம் யென்னும்) *கவசை நகரிற் கல்வி கேள்விகளிலும் வள்ளன்மையிலுஞ் சிறந்த மசக்காளி மன்றாடி என்பவன் புகழொடு வாழ்ந்தான். அவன் சமூகத்திற் றமிழ்ப்புலவர் சபை ஒன்று கூடிற்று. அதில் வண்ணப்பாக்கள் சொல்வது என்ற வாதம் நடந்தது. அதில் படிக்காசுப் புலவர் எடுத்துக் கொடுத்தபடி முடிக்கவில்லை என்று அவர் கொண்டு வந்த பல்லக்கு முதலியவற்றை, முன்பேசித் தொடங்கிய சொற்படி கொங்குப் புலவர் பற்றிக் கொண்டனர். படிக்காசுப் புலவர் தனது ஆடை முதலியவற்றைச் சுமந்து கொண்டு,

“அஞ்சாலி மக்களுஞ் சாணுரும் பாணரு மம்பட்டருஞ்
செஞ்சாயக் காரரும் வேசையர் மக்களுஞ் செந்தமிழைப்
பஞ்சாகப் பன்னி யொருகாசுக் கோர்வண்ணம் பாடலுற்றார்
நஞ்சாகப் போச்சுதை யோவென் றமிழ்கொங்கு நாடெங்குமே.”

எனமனது சற்று நொந்தவராய்ப் பின் சித்த சமாதானஞ் செய்துகொண்டு மெல்ல மெல்ல நடந்தனர். கவசையினடந்த கவி வாத சம்பந்தமான பகைமையாற்

* கவசையம்மன் கோயில். கவுசிகநதியருகு உள்ள ஓரூர்.

கொங்குப்புலவர் வைத்த சூனிய வித்தைத் தீமையில் வருந்தித் திருச்செங்கோட்டுக்கு வந்தனர். ஸ்ரீ அர்த்த நாரீசுரர் மீது வருகைப்பதிகம் பாடித் தேக சுகமடைந்து உமைபாகப் பதிகம் பாடிப் பின் சமீபத்துள்ள மோரூர்க்குச் சென்று பரம்பலங் காரர் மீது வருக்கக் கோவை பாடி யாங்கேற்றிக் குமாரசாமிக் காங்கேயனுற் சன்மான முற்று,

> " அந்திப் பிறைச்சடை யாரர வாசல ராலயத்திற்
> கந்தப் பிரான்கதை கற்சிலை யாலமை காங்கேயரில்
> விந்தைப் புயக்கும ரேந்திர வேந்து வியந்தெமக்குத்
> தந்தச் சிவிகை கொடுத்தான் பெரும்புகழ் தாங்கினனே."

எனப்புகழ்ந்து சோழ நாட்டை அடைந்தனர்.

> வேலை சூழ்பணி மாமலை வேலரும் விமலரு மகிழ்வெய்தச்
> சீலமாகியோ ரைம்படி யரிசியுஞ் சில கறி பருப்போடே
> மாலை காவிரி மஞ்சனந் தீபமும் மனமிகு தயவாகிப்
> பாலை சேர்மசக் காளிசெங் கோடரைப் பணிந்திவை யளித்தானே.
>
> —(திருச்-திருப்பணி மாலை.)

இவன் இம்முடிப் பட்டம் பெற்றவன் என்பதை அடியிற் கண்ட செய்யுள் வலியுறுத்துகின்றது.

(மேற்)

> முன்னு ளூறைந்தைவரு மரசர்பெரு மானுலகில் முடிமன் னரிடதம்பிரான்
> முதுமொழி குலோத்துங்க சோழனருள் செய்தனன் முத்தமிழ்க் கம்பநாடன்
> அந்நாளி லேபொன்னி கரைகள்கட வாதுள் ளடங்கலிசை பாடலுக்கா
> ஆதித்த னுள்ளளவு மழியாத வதுவைவரி யளித்தனர்க ளென்று முதலாப்
> பன்னுத நிலைமைசெறி கொங்குநாட் டினின்மேவு படிகார வித்வச்சனர்
> பங்கென நடந்துவரு படிதனக் கிடரதாய்ப் படித்தசிலர் கைக்கொண்டதை
> இந்நாளி லேகீர்த்தி நிலையாக விடுவித்தவ் வியல்வாண ருக்களித்தான்
> இங்கிதம தாகவரு கவசைநகர் வாழ்வுற்ற இம்முடி மசக்காளியே
>
> —(தனிப்பாடல்.)

இம்முடி என இச்சதகத்து ௬௪-௯௪-ம் செய்யுட்கள் குறித்த மோரூர்க் காங்கேயர்களுக்கும், ௬௯-ம் செய்யுட் கூறும் கோபண மன்றாடிக்கும், ௭௬-ம் பாட்டுக் குறிப்பிடும் காடையூர்க் காங்கேயர்க்கும், ௭௯-ம் செய்யுள் விளக்கும் அல்லாளனிளை யானுக்கும் இம்முடி என்ற பட்டப்பெயருண்டு. இம்மடி என்று கூறுவதையுங் காணலாம். தேச மன்னர், குறுநில மன்னர், நாடு - ஊர் அதிகாரிகள், சில குருக்கள்களும் இம்முடி என்று பெயர் கொண்டு இருந்து இருக்கிறார்கள். அப்பெயரை

மிகு மேன்மையாகப் பாராட்டுகிருர்கள். இம்மடி (இம்முடி) என்பதன் பொருள் இரட்டை. அதாவது இரண்டாவதான் எனவே, இம்முடிக் குமார காங்கேயன் என்ருல் குமார காங்கேயன் என்பவன் ஒருவன் இருக்க, அவனுக்குப் பின் மற்ருெரு குமார காங்கேயன் வந்தால் அவன் இம்மடி (இரண்டாவது) குமார காங்கேயனுகிருன். இன்னுமொருவன் தோன்றினுல் மும்மடி (மூன்ரும்) குமார காங்கேயனுகிருன். ஐந்தாம் ஜார்ஜ் சக்கிரவர்த்தி என்பதிலிருந்து உய்த்துணர்ந்து கொள்க. என்பது சாசன பரிசோதகர் கருத்து.

## இம்முடிச் சோழி யாண்டான்

பாயு மணைநிற்க வேண்டி மகளைப் பலிகொடுத்துந்
தோயுந் திருப்புக் கொளிக்கோயிற் கற்பணித் தொண்டுமிசை
ஆயும் பொருளந்தை யிம்முடிச் சோழியாண் டானளியின்
மாயன் வடபரி சாரநா டுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) நொய்யல் ஆற்றின் அணை அடிக்கடி உடைந்து போகாது நிலைத்திருக்கக் கருதித் தான்பெற்ற மகளைப் பலிகொடுத்தும், அவிநாசி ஈசுரர் கோவிலில் கல் வேலையும் பிறதிருத்தொண்டும் செய்த பொருளந்தை குலத்துவந்த இம்முடிச் சோழி யாண்டானது உரிமையான வடபரிசார நாடுங் கொங்குமண்டலம் என்பதாம். (அசு)

வரலாறு:— வடபரிசார நாட்டுப் பால வேளாளரில் விஜயவிக்கிரம இம்முடிச் சோழியாண்டான் என்பவன் அவிநாசியப்பரின் துவஜஸ்தம்ப மண்டபம் முதலிய திருப்பணிகள் செய்துள்ளான். இவன் மங்கலத்தருகில் நொய்யலாற்றில் அணை கட்டினுன்; நிற்கவில்லை. உடைந்து உடைந்து போயிற்று. ஒரு சிறுமி பேரில் சந்நதம் வந்து ஒரு தலைக் கன்னிகையைப் பலிகொடுத்தால் நிற்கும் என்றது. பல நாளுக்குப் பல உயிர்கள் பிழைத்தற்கான தருமத்துக்கு ஒரு பெண்ணைப் பலி கொடுப்பது அரிதோ என்று உறுதிகொண்டு அருமையான தனது கன்னிகையைப் பலிகொடுத்துக் கட்டினுன், அணை நின்றது, மகிழ்வெய்தினுன். இவன் சாசனம் அவிநாசியிலிருக்கிறது. முதந்தை என்னுங் தூாக்குத் தளியிலுமிருக்கிறது.

ஸ்வஸ்திஸ்ரீ விஜயா ப்யுதய சாலிவாஹன சக வருஷம் ஆயிரத்து நானூற்று இருபத்து ஒன்றுக்குமேல் ஸித்தார்த்தி வருஷம் கார்த்திகைமீ கஎஉ ஸ்வஸ்தி ஸமஸ்த ஜகத்ராயிவடதியப்பஸ்ரீ கௌமாரஸநிவாஸ வத்ஸ வெல்லிமூலத்து முருகனூர் உடையார் தூாக்குத்தளி தம்பிரானுர்க்கு ஸ்ரீமன் மண்டலீஸ்வரன் ஸ்ரீ வீரனஞ்சராய உடையர் சேர்பிரதானன் (தெலுக்) வெவனக்

கணும்பைநாட்டு எம்மன்காலத்து நஞ்சரைசெட்டியார் மகன் ஒன்னக்களச் செட்டியார் புஉ—ம்பாபாநம் பண்ணிக்கொடுத்தபடியாவது முகுந்தனூர் நஞ்சராயன் குளக் கீழ் நிலத்து உடையவர் மானியத்து தொட்டக்கட்டையில் கொவிபைவுளிக்கு மேற்கு குளவாய்க்காலுக்கு கிழக்கு சோழீஸ்வரமுடையார் கோயிலுக்கு வடக்கு, கோட்டைக்குத் தெற்கு இந்த சது சீமையில் உடையவர் பண்டாரத்துக்கு கிரயம் நாலுபொன் கொடுத்து நாம் கொண்ட நிலம் சலகை ஒன்றுக்கும் இருநூறு தென்னம்பழம்போட்டு தோட்டம்பண்ணி இந்தத் தோட்டத்தினுலுண்டான ஆதாயமும் உடையவர் அங்கரங்கபோகத்துக்கு நடத்தக்கடவதாகவும். இந்த புஉ—ம் வட பரிசாரநாட்டுக் கவுண்டர்கள் செவ்வூர் அண்டா மன்றுமுடி மக்கள் சோழியாண்டான் சூரியதேவன் மசான உள்ளிட்டார் மக்கள் மக்கள் சந்திராதித்தவரை நடத்திவரக் கடவராகவும்.........

## உத்தமச் சோழன்

இத்தரை மீதினிற் சேனு பதியா யிருந்து வெற்றி
யொத்து வரப்பெற்ற தற்காத் தனக்கின் குறுபெயராம்
உத்தமச் சோழனென் றன்பாத் தரப்பெறு மோங்குபட்ட
வர்த்தனன் வாழ்வுறு மாணூர் திகழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) இவ்வுலகத்திற் சேனுபதியாக இருந்து சென்ற போர்களில் வெற்றி பெற்று வருவதைக் கண்ட உத்தமச் சோழன் என்னும் அரசன், தன் பெயரான **உத்தமச்சோழன்** என்னும் பெயரைப் பட்டப் பெயராகக் கொடுக்கப் பெற்று (சர்க்கரை) வாழும் ஆனூர் கொங்குமண்டலம் என்பதாம். (எஎ)

வரலாறு:— தாராபுரம் தாலூகா காங்கேயம் டிவிஷனில் (நத்தக்) காரையூர் என்னும் ஊருக்கும் ஆனூருக்குந் தலைமைப் பெற்றவர்கள் சர்க்கரை என்னும் பெயர்க்குடியினர். அம்மரபினரில் ஒருவர் உத்தமச்சோழ சக்கிரவர்த்தி இடத்துச் சேனுதிபதிப் பதவி பெற்றனர். சேனையை நடத்தி வெற்றி பெற்று வந்தனர். மகிழ்வுற்ற வேந்தன் **உத்தமச்சோழன்** என்று தன் பெயரை விருதுப்பெயராகக் கொடுத்தான்; என்பதற்கு அடியிற் குறித்தவைகள் சான்முக விளங்குகின்றன.

(மேற்) ஓங்கு சோட்டைக் காரர்கண்ட னுத்தமக்கா மிண்ட னென்றே
ஈங்குலகி லுன்னையல்லா லெவர்க்காகிலும் வருமோ—(கல்-காதல்).

நத்தக்காரையூர் சயங்கொண்டநாத ஈசுரர் ஆலயத்து உள் தூணில் **உத்தமச் சோழக்காமிண்டன்** நட்டதூண் என வெட்டப்பட்டுளது.

மடவளாக சிவாலய கர்ப்பக்கிரஹத்தின் வடபுறச்சுவரில் வெட்டப்பட்டுள்ள சாசனம்.

கட்டளைக் கலித்துறை

"சரங்கொண் டிலங்கை சமைத்தபெற் றன்றரி யாரிறைஞ்ச
உரங்கொண்ட காரைம னுத்தமச் சோழ னுபயபுய
மிரங்கும் படியரு ளான்மட வீரினி யென்னுயிரைக்
குரங்கின் கையிற்பட்ட பூமாலை யாக்குங் குளிர்தென்றலே."

எனக் காணப்படுகின்றது. பழய கோட்டைப் பட்டக்காரர்கள் உத்தமச்சோழன் என்னும் பட்டப் பெயர் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். தமிழ் வேந்தர்கள் தன் கீழுள்ள சிற்றரசர்களுக்கும் மந்திரி தந்திரிகளுக்கும் தம் பெயரை விருதாகக் கொடுப்பது வழக்கம். சைவப் பெயர் வளர்த்த சேக்கிழார் புராணச் செய்யுள் ஞாபகத்தில் வருகிறது.

அத்தகைய புகழ்வேளாண் மரபிற்சேக்கி ழார்குடியில்
வந்தவருண் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந்
தலைமையளித்தவர் தமக்குத் தனது பேரு
முத்தமச்சோ ழப்பல்ல வன்ற னென்று
முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர் நாட்டு
நித்தனுறை திருநாகே சுரத்திலன்பு நிறைதவினுன்
மறவாத நிலைமை மிக்கார்.

என்று சொல்லவவர் தமையழைத்தரச னிவரமைச்சரிவர் பட்டமும்
மன்றன் மாலைபுனை தொண்டைமானென வகுத்தபின் றமதுமண்டலம்
அன்றுவற்கம்வர வந்தடைந்தவரை யாற்றல் செய்து தொண்டை மண்டலம்
நின்று காத்தபெரு மானெனத்தமது பெயரை யெங்கும் நிறுத்தினர்.

இன்னன வகையிற் கூறி யினப்படை முற்றுங்காட்ட
மன்னனிவ் வீரனைப் போற் கண்டிலே மென்மகிழ்ந்து
கொன்னுற வழைத்து நாமங் கொந்தகப் பெருமானென்றே
நன்னெறிப் பட்டங்கட்டி நல்கினன் பரிவட்டங்கள்.

—(மெய்காட்டிட்ட திருவிளையாடல்.)

இவைகளால் அரசர் மகிழ்ச்சிக்கு உரியரானவர்களுக்குத் தன் பெயர் அல்லது கொள்வோரின் இனம்பற்றிய பெயர், காரணமான பெயர் முதலியனவாகப் பட்டப் பெயர் கொடுப்பது விளங்குகின்றன. வேளாளர்கள் மந்திரி தந்திரி சேனாதிபதிகளாக இருந்தமை, மானக்கஞ்சாற நாயனார் புராணத்து "அரசர் சேனாபதியாம் விழுமிய வேளாண்குடி (ஏ) என்றும், வளவர் சேனாபதிக்குடியாம் பொன்னிநாட்டு வேளாண்மையிலுயர்ந்த பொற்பினது." (ஞ) எனக் கூறப்பட்டுள்ளன காண்க.

---

* திருநெல்வேலி ஜில்லாவில் கொந்தகை வேளாளரென ஒரு வகுப்பினருளர்.

இச்சதகத்தின் ௬௧, ௬௨, ௬௩, ௬௭, ௯௯, ௯௭-எண்களுள்ள செய்யுட்கள் ஆனூர்ச் சர்க்கரையின் மரபினரைக் குறித்தன. இவர்களின் குல முதல்வன் (மூல புருஷன்) சர்க்கரை என்னும் பெயருடையவனாதலின் பட்டத்துக்கு வருபவர்கள் ஒவ்வொருவரும் இப்பெயரையும் உத்தமச் சோழன் - காமிண்டன் - மன்றாடி என்று தனித் தனித் தம் முன்னோர் பெற்ற விருதுப் பெயர்களையும் இணைத்து இட்டு வழங்கி வருகிறார்கள். மேற்குறித்த வண்ணமும் மற்றுஞ் சிறப்புகளைப் பெற்றது ஒரு காலத்து, ஒருவராலன்று. வேறு வேறு காலத்து அக்குடியில் உதித்தோர் ஆவரெனக் கொள்க. இப்பொழுது உள்ளவர் ஆங்கில அரசால் ராயபஹதூர் (Rai Bahadur) என்ற பட்டம் பெற்றபடி என்க. ஆனூர் (நத்தக்) காரையூர் என்னும் இரண்டுஞ் செய்யுட்களில் இவர்களுக்கு உரியதெனக் குறிக்கப்பட்டுள்ளன. பழயகோட்டை - நாட்டு வழக்கு.

## ஆகவ ராமன்

ஏய்ப்பொடு மீறு மொருவாணன் கொட்ட மெலாமடக்கக்
சோப்பெரு மாறு கவராம பாண்டியக் கோனெனவே
வேப்பலர் மாலையு மீனப் பதாகை விருதுமற்றும்
வாய்ப்புட னீயப் பெறுஞ் சூரியன்கொங்கு மண்டலமே.

(க - ரை) ஆறகழூர் வாணன் கொட்டத்தை அடக்கக்கண்டு மகிழ்ந்த பாண்டியன், ஆகவராம பாண்டியன் என்னும் விருதுப் பெயரும், வேப்பமாலையும், மீனக்கொடியும் இன்னுந் தனக்குள்ள விருதுகளையும் மகிழ்ந்து அளிக்க ஏற்றுக்கொண்ட சூரியகாங்கேயனும் கொங்கு மண்டலம் என்பதாம். (௮௮)

வரலாறு :— தனக்கு அடங்காது மீறி நடக்கும் ஆறகழூர்வாணனைத் தந்திரமாகப் பிடித்துத் தன்முனிறுத்திய சூரியகாங்கேயனது வலிமையைக் கண்ட பாண்டியன் மனது மகிழ்ந்து ஆகவராம பாண்டியன் என்ற தங்களது விருதுப் பெயரும், வேப்பமாலையும், மீனக்கொடியும் இன்னும் தனக்குள்ள விருதுகளையும் எழுகரை நாட்டாதிக்கமுங் கவரவமாகக் கொடுத்து உபசரித்தனுப்பினன். அவைகளை ஏற்றுக்கொண்டு கம்பீரமாக வாழ்ந்திருந்தனன். இந்நூல் ௬௪-ம் செய்யுளை இணைத்து நோக்குக.

### தக்கை ராமாயணம் பாயிரம்

(மேற்) அவனுஞ் சடையன் காராளனவன்றனூரும் வெண்ணெய் நல்லூர்
இவனு நலதம்பிக் காங்கேயனிவன்ற னூருமோகூராம்
அவனுங்கண்ணன் சரராம னகவராம னிவனுங் கண்ணன்
இவனு மகனைப்போ லுலகுதனில் ராமகதைதனைப் பாடுவித்தான்.

இந்த ஆகவராம பாண்டியன் என்னும் பட்டம் பெற்றுள்ளதற்கேற்ப **ஆகவராமபட்டன்** என்னுங் குடிப்பெயரோடு புலவர் குடும்பமிருக்கிறது. ஆண்டு ஆண்டு சன்மானமும் கலியாணம் முதலிய நாட்களில் உரிமையான வரியையும் இக்காங்கேயர்கள் சந்ததியாரிடத்துப் பெற்று வருகிறார்கள்.

எழுகரை நாட்டதிகாரம் உடையார் என்பதற்கு மற்றும் உதாரணம்.

**உரமன் எழுகரை நாடன் கண்ணன் உபயகுல சுத்தவேளாளன்**
**திரமன் புகழ்மோரு ரத்தப்பன்சோல் செஞ்சோனலதம்பிக் காங்கேயன்**
**வரமன் புவியாளத் தென்னவர்க்கு மகுடஞ்சூட்டுகை க்குவமை சொல்லப்**
**பரமன் றிருமுன்னே பரதன் பின்னேன் பரிதிபுதல்வற்கு மௌலி வைத்தான்.**

—(அரசியற்படலம், தக் - ராமா)

**மன்னனாகவராமன் வடகோங்கு மன்னியர் தினம் வாழ்ந்திடு நாடு**
**தென்னவன்றகு மெழுபது தண்டிகை சேரும்பூந்துறை நாடெங்கள் நாடே.**

—(மோரூர்ப்பள்ளு)

## கொங்கக் குயவன்

*கரிகாலச் சோழன் மகளுக்கு வந்த கனவலிப்பு*
*மெரியா முடலை மயக்கமட் கோவ னிறைமகளைப்*
*பரிபா லனஞ்செய மட்பாவை யிற்குறி பார்த்துச்சுட*
*மரியாம லவ்வலி யேகிய துங்கொங்கு மண்டலமே.*

(க - ரை) கரிகாலச் சோழன் மகளுக்கு நேர்ந்த பெரிய வலிப்பு நோயை, ஒரு குலாலன் மட்பாவை செய்து குறி பார்த்துச் சுட, அவ் வலிப்பு நோய் தீர்ந்தது கொங்கு மண்டலம் என்பதாம். (அக)

வரலாறு :— கரிகாலன் என்னும் சோழன் மகளுக்கு வலிப்பு நோய் வந்தது. எத்தனையோ வைத்தியர்கள் தங்களால் இயன்ற வைத்தியஞ் செய்துஞ் சற்றேனுங் குணமாகவில்லை. கொங்கு நாட்டிலிருக்கும் ஒரு குயவன் இந்நோயை வெகு விரைவில் நீக்குவானென்று பலர் சொல்லக் கேள்வியுற்றான். நீ சூடு போட்டு வலிப்பு நோயை நீக்குவாயெனக் கேள்விப்படுகிறேன்; ஆனால் என்னிளங் குழந்தை பொறாதே என்றனர். எம்மண்ணலே, அரசிளங்குமரியின் உருப்பிற்படாது சூடுபோட்டு நீக்குகின்றேன் என்றனன். அப்படியானால் செய் எனவே மண்ணால் இக்குழந்தை போல ஒரு பாவை செய்தனன். அச்சுந்தரிக்கு வலி எவ்விடத்திருக்கிறதோ என்பது தெரிந்து, அவ்வங்கக் குறி பார்த்து நெருப்பிற்காய்ந்த இரும்புக் கோலால் அந்த மட்பாவையிற் சுட்டனன். அந்நோய் நீங்கிற்று.

குறிப்பிட்ட பொருளில் உருச்செய்து அப்பாவையின் உருப்பில் ஊசி முதலியவற்றைக் குத்தல், சுடல் ஆன கருமஞ்செய்து, உண்டான வியாதியை நீக்கல்,

இல்லாத வியாதியை உண்டாக்கல் ஆண தொழில் செய்யும் முறை ஓட்டியம், சல்லியம் என்னும் மந்திர சாத்திரத்துக் கூறப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட நோய் தீர்ந்தது விக்கிரம சோழன் மகளென்றும், பொன்கலூர் நாட்டு வானவன் சேரி என்னும் ஊரில் இந்நிகழ்ச்சி நடந்தது; குறுப்பு நாடு கற்றுங்காணி ஊரிலுள்ள ஒரு கொங்குக் குயவன் அங்கு வந்து குறி சுட்டான் என்றும் குயவர்களிடத்துள்ள பழய ஒரு சுவடியிற் குறிக்கப்பட்டுள்ளது.

## விசுவகன்மியர் சாசனம்

இருப்புற்ற வீட்டுக்குச் சாந்திட்டுக்கொள்ள விரண்டுசங்கு
விருப்புற்ற வாழ்விலுஞ் சாவிலு மூத வெளிநடைகாற்
செருப்பிட்டுச் செல்லப் பெறுவீர்க ளென்னவச் செம்பியனால்
வரைப்பத் திரம்பெற்ற கம்மாள ருங்கொங்கு மண்டலமே.

(க - ரை.) குடியிருக்கும் வீட்டுக்குக் காரைபோட்டுக்கொள்ளவும், நன்மை தீமைகளில் இரட்டைச்சங்கு ஊதவும், வெளியில் போகும்போது காலுக்குச் செருப்புப் போட்டுக்கொண்டும் போகலாமென்றும் இராஜகட்டளைபெற்ற கம்மாளரிருப்பதுங் கொங்குமண்டலம் என்பதாம். (கூ௦)

வரலாறு :—முற்காலத்தில் கம்மியர்கள் மேற்கண்டவைகளை உபயோகிக்கக் கூடாதென்ற ஒரு வழக்கமிருந்ததைக் கோனேரி மெய்கொண்டான் என்னுஞ் சோழன் நீக்கியிருப்பதாகக் கரூர்ப் பசுபதி ஈசுரர் கோவிலிலுள்ள சாசனத்தால் தெரிகிறது.

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கிரவர்த்திகள் ஸ்ரீ கோனேரின் மெய்கொண்டான் வெங்காலநாட்டுக் கண்மாளற்கு கஙு-வது ஆடிமாதம் முதல் தங்களுக்கு நன்மை தின்மைகளுக்கு இரட்டைச்சங்கும் ஊதி பேரிகை உள்ளிட்டவை கொட்டுவித்துக் கொள்ளவும் தங்கள் வீடுகளுக்குச் சாந்து இட்டுக்கொள்ளவும் சொன்னோம். இப்படி இவ்வோலை பிடிபாடாகக்கொண்டு சந்திராதித்தவரை செல்வதாகத் தங்களுக்கு வேண்டின இடங்களிலே கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்க. இவை விழுப்பாதராயன் எழுத்து. S. I. I. V. III. P. I. P. 47. கோயமுத்தூருக் கடுத்த பேரூரிலு மிச்சாசனமிருக்கிறது.

## காங்கேயன்

அலைகடல் சூழு மவனியிற் செந்தமி ழாய்பவர்கள்
நலனுறத் தக்க வகையாக வுள்ள நனிமகிழ்ந்தே
இலகு முரிச்சொ னிகண்டுவெண் பாவி னிசைத்தகலை
வலவெழிற் காங்கேயன் வாழுமோ ரூர்கொங்கு மண்டலமே.

(க - ரை) தமிழிலக்கியங் கற்றவர்கள் எளிதிற் பாடஞ் செய்யவும், தெரிந்து கொள்ளவும் உதவியாகும்படி உரிச்சொல் நிகண்டு என வெண்பாவாற் செய்துதவிய காங்கேயன் என்பவன் வாழும் மோரூருங் கொங்குமண்டலம் என்பதாம். (கக)

பலதவலதேர் காங்கேயன் பட்ட முடையான்
உலகறியச் சொன்ன வுரிச்சொல்—(உரிச்சொல் நிகண்டு.)

முந்து காங்கேய னுரிச்சொல்.—(ஆசிரிய நிகண்டு.)

பெருத்த நூல்பலவுஞ் சுருக்கித் தமிழில்
உரிச்சொல் நிகண்டென உரைத்த காங்கேயன்
—(பாம்பணகவுண்டன் குறவஞ்சி)

காங்கேயனென்பது பட்டப்பெயர். இவன் இன்ன பெயரை உடைய காங்கேயனென்று விளங்கவில்லை.

கங்கைக் குலத்தவரான வேளாண்டலைவருக்குக் காங்கேயன் என்றபட்டப் பெயரிட்டு அரசர் அழைத்திருக்கின்றனர் போலும். புதுவைக் காங்கேயன் ஆட்கொண்ட காங்கேயன் எனும் பெயர்கள் வழங்கி வந்திருக்கின்றன.

வேறொருவர் இவ்வுரிச்சொல் நிகண்டு செய்தனர் எனச் சொல்வாரு முளர்.

இச்சதகத்துள் ருச, சுக - இவ்வெண்களுள்ள செய்யுட்கள் இம்மோரூர்க் காங்கேயர்களைக் குறித்தன. இவர்களுக்கு இம்முடி என்று பட்டப்பெயரிருக்கிறது.

## மருத்துவி

குறைவறு தெண்ணீர் நதியணை காந்த புரத்தொருநல்
விறைமக ளார்மக வீனப் பொறுதுட லேங்கவகிர்
துறைவழி யேற்று மகிழ்வூட்டு மங்கலை தோன்றிவளர்
மறைவழி தேர்நறை யூர்நாடு சூழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) நிறைந்த வெள்ளமுற்ற ஆற்றினை அடுத்த காந்தபுரத்தை ஆளும் வேந்தன், பெண் கருப்ப வேதனையுற்றுக் கருவுயிர்த்தற்கியலாது துன்புறுவதைக் கண்டு வயற்றைப் பீறிக் குழந்தையை எடுத்துச் சந்தோஷமுறச் செய்த மருத்துவி பிறந்து வளர்ந்த நறையூர் நாடு சூழ்ந்தது கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு :— நீர்ச் செழிப்புற்ற நதியை அடுத்துள்ள ஸ்காந்தபுரத்திலிருந்து இக்கொங்கு நாட்டை ஆண்டுவந்த வேந்தனது செல்வமகள் கருப்பமுற்றாள். சூல் முதிர்ந்து, மகப்பெறு வயற்றுவலி கண்டது. அருமைவாய்ந்த பல மருத்துவச்சி

கள் வந்தார்கள். தலை திரும்பிவிட்டது என்றார்கள். பொறுக்க முடியாது செல்வி வருந்துவதை அரசனும் மற்றையோரும் தெரிந்து மனமயர்ந்தார்கள். பிண்டத்துக்குத் தலை சற்றுப் பெரிதாக இருக்கிறது, சாதாரணமாக வெளிவராது, குழந்தையுந் தாயாரும் இவ்வாபத்தினின்று மீள்வது அரிது என்று சிலர் சொன்னார்கள். சிசுவை மாய்த்து எடுத்துச் செல்வியைத் தப்புவிக்கலாமென்று சிலர் சொன்னார்கள். கற்பத்துள்ள குழந்தையையும் கற்பிணியான என் மகளாரையும் பிழைக்கச் செய்வார் உளரேல் அவர்கள் விரும்பியவாறு பரிசளிப்பேன் என்று அரசன் கூறினான். ஒருவரும் முன் வரவில்லை; என்றாலும் நறையூர் நாட்டினளான ஒரு மங்கலை (கொங்கு நாவிதச்சி) ஆயுள்வேதத்திற் கைதேர்ந்தவள். அதிலும் பிரசவ நூலில் மிகுந்த அநுபவமுள்ளவள் முன்வந்தாள். வயிற்றிற் பிண்டமிருக்க ஒருத்தி மரணமுற்றால் வயிற்றைப்பீறிக்குழந்தையை எடுத்துத்தான் இடுகாட்டில்(கனனம்) அல்லது சுடுக்காட்டில் (தகனம்) இடுதல் மரபு. ஆதலின் கடைசிவரையில் இப்பிரசவத்தைப் பாருங்கள் ஒருவராலும் முடியாது என்ற தீர்மானத்தில் நான் பார்க்கிறேன். அதாவது அடிவயிற்றைப் பீறி வழி கண்டு சிசுவை எடுத்து ஈருயிர்களையும் வாழ்விக்கிறேன் என்றனள். கடைசி சம்மதித்தார்கள். இம்மருத்துவி பிரசவ வேதனைப்படும் ராஜ குமாரியைப் பக்குவமாகக் கிடத்திச், சொற்ப நேரத்தில் அடிவயிற்றைக் கீறிக் குழந்தையை எடுத்துக்கொடுத்து பீறியவாயை மூடித் தன்னிடத்துள்ள மருந்தைத் தடவினாள். மற்று ஏற்ற சிகிச்சை செய்ய அரசமங்கை நினைவுற்றாள் அரசன் மகிழ்ந்து காங்கேய நாட்டில் மங்கலப்பட்டி என்னும் ஊரை இறையிலியாகக் கொடுத்தான் என்பர்.

முற்காலத்து சஸ்திர வித்தையிற்றேர்ந்த மருத்துவ மாதர்களிருந்தார்களென்பதை இதனாலறியக் கிடக்கின்றது. இப்போதைய மேலைத்தேச மருத்துவ சாஸ்திரிகளும் இவ்விதம் வயிற்றைப் பீறி எடுத்துச் சிசுவையும் கருவுற்றாளையுங் காப்பாற்றுகிறார்கள் என்பதை அடியிற் குறித்தவற்றாற் றெரியலாம்:—

மருத்துவ சாஸ்திரத்தில் கூறிய வண்ணம் அநேக காரணங்களால் பூரண கர்ப்ப ஸ்திரியின் சிசுவை வெளியாக்கச்செய்யும் ஆயுத சிகிச்சைக்கு (Caesarean Section) சிசேரியன் செக்ஷன் என்பது உண்டு. அது இரண்டு விதம்.

1. சிசுவை வெளிப்படுத்தல்.

2. சிசுவை வெளிப்படுத்தி இனிக் கர்ப்பமடையாது கர்ப்பப் பையைத் துண்டித்து விடுதல்.

இப்பொழுது சிசுவை வெளிப்படுத்துதலைப்பற்றி யோசிப்போம்.

சிசு பிரசவ காலத்தில் சாதாரண வழியாய் வர இடமில்லாமல் பல தடைகளால் நின்றுவிடும். அவை எலும்புகள் குறுகல், வழியைக் குறுக்குங் கரணைகள். அதிக ரணத்தால் ஆறின வடுவு சுருங்கின தழும்பு. அங்கங்களை வேறு படுத்தின

---

* இதை அன்பு கூர்ந்து எழுதிவிடுத்தவர் ஸர்ஜன், ஸ்ரீமான்-P E. முத்துக் குமாரசாமி முதலியாரவர்கள்.

சிசு வழியாய்ச் செல்ல மார்க்கமில்லாத தடைகள் முதலியவைகளிருந்தால் (Caesarean Section) சிசேரியன் செக்ஷன்கள் செய்யக் காரணங்களாகும்.

மேற்கண்ட காரணங்களால் ஜீவனுள்ள சிசு வெளிப்படத் தடையிருக்கும் பக்ஷத்தில் இந்த ஆப்ரேஷன் செய்யவேண்டும். அநேகமாய் உள் அளவு நெருங்கியதும், தட்டையான மேல் வீஸ்சும் இருக்கும் பக்ஷத்தில் சிசேரியன் செக்ஷன் செய்வதனல் சிசுவுக்கும் தாய்க்கும் க்ஷேமமுண்டு.

பிரசவ காலத்தில் சிசு திடீரென்று இரத்தப் பெருக்கு வழியை அடைத்துக்கொள்ளும் அடை முதலிய கேசுகளே, ஆயுத சிகிச்சையினல் நிவர்த்தி செய்து தாயும் சிசுவும் சுக ஜீவர்களாய் வாழ்ந்தார்கள் என்று பிரசவ நூல்களிற் கூறி இருக்கிறது. திருஷ்டாந்தம் ஆயுத சிகிச்சை தீர்மானித்த பின் கர்ப்பப் பையை வேருக்க மற்ற வியாதிகளில்லாத பட்சத்தில் சிசுவை வெளியிடப் போதுமான ஆயுத சிகிச்சை செய்வது தான் யுக்தமானது.

ஆயுத சிகிச்சை ஆரம்பிக்க பிரதான செய்கை:— 36 மணி நேரத்துக்கு முன் தாய்க்குப் பேதிக்குக் கொடுத்து சிகிச்சைக்கு முன் (Enema) எனிமா என்று சொல்லுங் குடல் சுத்திசெய்து கர்ப்பிணிக்கு நன்ருய் ஸ்நானஞ் செய்வித்து அசுத்த நிவர்த்தி செய்ய செவ்வீரம் கூட்டிய தண்ணீரில் நனைத்த துணியால் மூடி படுக்கையிற் சேர்த்துப் பின்பு துணியை நீக்கிப் பிறுதல் வேண்டும்.

பிரசவ நோய் ஆரம்பித்த பின்னும், பனிக்குடம் உடைகிறதற்கு முன்னும் செய்யவேண்டுமென்ற எண்ணத்தோடு அநேகமாய் நடத்தி வருகிருர்கள். காரணம், பிரசவநோயாற் கருப்பப்பை சுருங்கவும் குறையவும் ஏதுவாவதுடன் கருப்பப்பையினின்று உண்டாகும் பிரசவ அழுக்கு வெளிப்பட வழி பிரசவநோய் ஆரம்பித்த பிறகு தான் விரியுமாகையால், பிரசவ நோய் உண்டானபின் இந்த வேலை செய்யத் துணிகிருர்கள். ஆனல் இதில் ஒரு பெரிய இடையூறிருக்கிறதை மருத்துவ சாஸ்திரி ஒருவர் தெரிந்து, பிரசவ நோய் உண்டாகுமுன் ஆயுத சிகிச்சை செய்யத் துணிந்தார். காரணம் அநேகமாய்ப் பிரசவ நோய் உண்டாகிறது இராக்காலம், சூரிய வெளிச்சமில்லை. கற்பிணி கடைசியாய் மாதவிடாயான நாள் முதல் கணக்கிட்டு 280-நாள் அல்லது 40-வாரம் அல்லது ஒன்பது மாதம் ஒரு வாரம் கடந்த பின்னும், ஏற்படுத்தின அளவு செய்யும் ஆயுதத்தினல் அளவும் பருமனும் ஜீவஸ்திதியும் அறிந்தும் இன்னும் மற்ற சின்னங்களால் தீர்க்கமாகத் தெரிந்து, இதர ஆயுத சிகிச்சைகளுக்கு ஏற்படுத்துவதுபோல் இந்த சிசேரியன் செக்ஷனுக்கும் வசதியாய் நாள் மணி குறிப்பிட்டு செய்வதனல் மிகவும் நல்ல காலமென்று துணிவுகொண்டார். இதுபோல் தற்காலம் சிலர் கையாடி வருகிருர்கள். இப்படி செய்வதற்கு முன் பிரசவ நோய் இல்லாதபடியால் கற்பப் பையின் வாயை அகலப்படுத்தி அழுக்கு வெளிப்பட இடங்கொடுக்க வேண்டியது அவசியம். ஆனல் இவ்வித முடிவு அநேகமாய் இடங்கொடுக்கிறதில்லையாகையால் சந்தர்ப்பம் போல் ஆயுத சிகிச்சை செய்வது தான் உத்தமம். முன் கூறிய

இரண்டு வித காலங்களில் பல மருத்துவ சாஸ்திரிகள் செய்த ஆயுத சிகிச்சை சங்கைகளைக் கணக்கிட்டுப் பார்த்ததில் மொத்தம் 289-கேசுகளில் 82-பிரசவ நோய் ஏற்படுவதற்கு முன் செய்தது. இதில் மரணம். 1. பிரசவ நோய் உண்டான பின்னும் பனிக்குடம் உடைவதற்கு முன்னும் செய்த கேசுகள் 158. இதில் மரணம் 6. இரண்டு காலங்கழித்துச் செய்த மீதி 49-கேசுகளில் மரணம் 6. ஆம்.

சிகிச்சை செய்யுமிடம் ;—கற்பிணியின் வயிற்றின் மத்திய பாகத்தில் நோய் 8 அங்குல நீளமுள்ளதாய் மூன்றில் ஒரு பங்கு தொப்பூழின் மேலாகவும், இரண்டு பங்கு தொப்பூழின் கீழாகவும் வயிற்றைப்பீறிக், கற்பப் பையையுங் கீறி சிசுவை இரண்டு காலைப் பிடித்துத் தூக்கிக் கடைசியாய்ச் சிரசை வெளிப்படுத்தி, மற்ற சிசுவைச் சேர்ந்த வெளிப்படுத்த வேண்டியவைகளை வெளியாக்கிக் கற்பப் பையை முதலிற் கீறிய பாகத்தை ஒன்றோடொன்று பொறுத்தித் தைத்து அதன் நிலையில் விட்டு, பின்னால் கீறபட்ட வயிற்றை சாஸ்திரவிதியின்படித் தைக்க வேண்டும். அப்போது வயிற்றிலுள்ள ஈரல் குடல்கள் குறுக்கிடாது. பீறும் பொழுதுங் குறுக்கிடாது. பின்னிட்டு நான்கு மணிக்கு ஒரு முறை மருத்துவ சாஸ்திரி பிரசவித்த பெண்ணையும் குழந்தையையும் பார்வையிட்டு, உபகருவிகளைக் கொண்டு அவுஷதங்களைக் கொண்டு ரணஜன்னி முதலியவை பீடிக்காமற் பாது காக்க வேண்டும். கீன்றப்பட்ட காயம் 7-நாள் முதல் 10-அல்லது 12-நாளிற் குணப்படும். குழந்தையும் தாயும் க்ஷேமமடையச் செய்கிற சிசேரியன் செக்ஷன் தற்காலம் அநேக மருத்துவ சாலைகளில் நடந்தேறி வருகின்றன.

இந்த மருத்துவச்சியை நறையூர் நாட்டினள் எனக் குறிப்பிடப்பட்டுளது. தாராபுரமுஞ் சில ஊர்களுஞ் சூழ்ந்த பாகத்தை நறையூர் நாடு என்று வழங்கி வந்திருக்கிறார்கள்.

1886-ம் வருஷத்தில் வெளியான சாசன பரிசோதனைப் புத்தகம் (Vol. I. B. 127-ம் பக்கம் பழனி என்ற பாகத்தில்) கொங்குமண்டலம் நறையூர் நாடு வஞ்சிலாடபுர சீர்மையில் வைகாபுரி நாட்டில் பழனி எனக் குறிக்கப்பட்டுளது. கொற்றனூர் சிவாலயத்தும், பழனிக்கடுத்த பெரியாவுடையார் கோவிலிலும், விஜயமங்கலம் No 582, 1905-சாசனங்களிலும் இப்பெயர் காணப்படுகின்றன.

இராஜமா நகரமான ஸ்காந்தபுரத்தைப்பற்றித் தமிழ் நூல்களிற் காணக் கிடைக்கவில்லை. கொங்கு ராஜாக்கள் தானஞ் செய்த பட்டயங்களிலிருந்து ஸ்காந்தபுரமென்பது வெளியாகிறது. பூர்வகாலத்தில் இங்கு வந்துபோன மேல் நாட்டுத் தேசஞ் சுற்றிகள் எழுதியுள்ள குறிப்புகளில், நதிக்கரையில் நஞ்சை நிலத்தின் நடுவிலிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளாராதலால் தாராபுரம் அல்லது கரூராக இருக்கலாம். தாராபுரத்தில் இடிந்த கோட்டை இருக்கிறது. கரூரை, ரோமாபுரி யாத்திரீகர் (Ptolomy) டாலாமி ராஜாங்கப்பட்டணம் என்று சொல்லி இருக்கிறார், கரூர் சோழர்களின் ராஜமாநகரத்தில் ஒன்றென்று பெரியபுராணம் நன்கு தெரிவிக்கின்றது. இவ்விரு ஊர்களில் ஒன்று ஸ்காந்தபுரமானால் ஸ்தல புராணங்களும் சாசனங்களும் புலப்படுத்தாமற் போகா.

கஜால் அட்டிக்குச் சமீபத்தில் ஸ்காந்தபுர மிருந்திருக்கவேண்டும் எனச் சொல்லப்படுவதால் நீலகிரித் தொடரில் குண்டாமலைத் தொடரிற்றோற்றி வடக்கு நோக்கிச் சென்ற மாயாறு, காவேரியின் உபநதியான பவானியாற்றிற் சேரும் இடத்துக்குச் சமீபமான தணுக்கன் கோட்டை என்னுஞ் சிறந்த ஊர்தான், அப் பவானி நதிக்கரையில் நஞ்சை நிலங்களாற் சூழப்பெற்று (லாசன் அபிப்பிராயப் படிக்கு) கஜார அட்டிக்கண வாயை அடுத்திருக்கிறது. இது முன் ஒரு காலத்து சங்ககிரித்துர்க்கம் துன்றத்தூர் கூற்றம் - தாராபுரக் கூற்றம் என்பன போலத் தணுக்கன்பேட்டைக் கூற்றம் என்றிருந்திருக்கிறது. இக்கூற்றத்தைச் சூழ்ந்த நாடுகள் ஏழு. இதை அடுத்துள்ள பவானி அணை உடைந்துபோன பின்பு நஞ்சை நிலங்கள் பாழ்த்து வனமாயிருக்கலாம். கற்றாழை முதலியவற்றால் மூடப்பெற்று யானை முதலிய கொடிய விலங்கினங்கள் நடமாடும் வனமானாலும் கோவில்கள் இருக்கின்றன. தென்னைமரங்களும் நிற்கின்றன. 25 - வருஷங்களின் முன் சிகாரிகளின் துணை கொண்டு சென்று 3 - நாள் கோயிலினுளிருந்து அங்குள்ள பவானி ஈசுரருக்கு, அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்தோமென்று திருச்செங் கோட்டுக் குருக்கள் ஒருவர் கூறுகிறார். இப்பொழுது கோபிசெட்டிபாளயத் துள்ள தாலூகாகச்சேரி இதன் முன் சத்திய மங்கலத்தும், அதன் முன் தணுக்கன் கோட்டையிலு மிருந்ததாம்.

கொங்கு மன்னர்கள் 9-ம் நூற்றாண்டிலும் ஆண்டார்களென்றும் அப்பால் சோழர்கள் வெற்றிகொண்டு நாட்டைக் கைக்கொண்டார்களென்றும் ஆராய்ச்சி யாளர் கருதுகிறார்கள். ௬00-வது செய்யுளை இணைத்து நோக்குக.

### செய்யான் பல்லவராயன்

தொல்லுல கத்தினிற் றூட்டரை வெட்டித் துணித்த தனூற்
சொல்லிய போசள வீர புசபலன் றூகளறு சீர்
பல்லவ ராய னெனப்பட்ட மீயப் படை செலுத்த
வல்லவன் வேட்டுவச் செய்யானும் வாழ் கொங்கு மண்டலமே.

(க - ரை) போஜள வீர புஜபலனென்னும் அரசனது சேனையைச் செலுத்தி, அவனது பகைவனை வென்றபடியால் "பல்லவராயன்" என்று பட்டங் கொடுக்கப்பெற்ற வேட்டுவச் செய்யானுங் கொங்குமண்டலம் என்பதாம்.

வரலாறு:— மேல்கரைப் பூந்துறை நாட்டைச்சார்ந்த அறைச்சலூரில் கரைய வேட்டுவரில் செய்யான் என்பவன் ஒய்சல வீர வல்லாள வேந்தனிடத்தில் சேனு வீரனுக இருந்தான். அவனது யுத்த தந்திரத்தை நன்கு மதித்து அந்த அரசன் பல்லவராயன் என்று பட்டப்பெயர் கொடுத்தான். தன்பெயருடன் செய்யான் பல்லவராயன் என்று புகழுடன் வாழ்ந்தான். இவன்மீது சில பிரபந்தங்களும் இருக்கின்றன. இவனது சாசனம் அறச்சலூர் புற்றிடங் கொண்ட நாயனூர் ஆல

யத்தின் தென்புறச் சுவரில் இருக்கிறது.........ஸ்வஸ்திஸ்ரீ போஜளவீர புஜபல *வீரவல்லால தேவர் பிரிதிவி ராஜ்ஜிய பரிபாலனம்......மேல்கரைப் பூந்துறை நாட்டு அறச்சலூர் கரையவேட்டுவரில் செய்யான் பல்லவராயனேன் இவ்வூரில் உடையார் புற்றிடங்கொண்ட நாயனார் கோயிலில் திருக்கட்டளையில் திருநிலைக் காலும் செய்வித்தேன்.........இச் சாசனமிருக்கிறது.

## வேணாவுடையான்

கொற்றையில் வீற்றரு ளப்பிர மேயர் கொடிஞ்சி செலப்
பெற்றதன் பிள்ளையை வெட்டிவிட் டானற் பெருமையுற
உற்றுள ராயர்பொற் சிம்மா தனத்தி லுவந்து வைத்த
மற்றெறி நீள்புய வேணாடன் வாழ்கொங்கு மண்டலமே.

(க ை ர) கொற்றவனூரில் எழுந்தருளிய அப்பிரமேய ஈசுரர் தேர் ஓடும் படி தன் பிள்ளையை வெட்டிப் பலிகொடுக்கக் கண்ட ராயர், இந்தத் தீரச் செயலுக்கு வியந்து சிம்மாதனத்து வைக்கப்பெற்ற வேணாடன் வாழ்வது கொங்கு மண்டலம் என்பதாம். (கூச)

வரலாறு :— தென்கரை நாடு தாராபுரத்தை அடுத்த கொற்றனூரில் வீற்றிருந்தருளும் அப்பிரமேயா, எழுந்தருளியுள்ள தேர் நிலை விட்டுப் பெயரவில்லை. இரதம் நிலைக்கு வந்து சேர்ந்த பின்பு புசிப்பது என்ற கொள்கையுள்ள பெரியோர்கள் பலர் வருந்தினார்கள். எத்தனை ஆட்கள் இழுக்கினும் வடம் அறுந்து போவதன்றித் தேர் நகர்வதில்லை. இது கண்டு அங்குள்ளார்களெல்லாம் வருந்தினார்கள். அப்பொழுது அங்கு வந்துள்ள ஒரு சிறுமி ஆவேசமுற்று ஏன் மயங்குகிறீர்கள். இது ஒரு பூதத்தின் செய்கை. ஒரு மகனை தலைப்பிள்ளையை வெட்டிப் பலி கொடுத்தால் தேர் நிலை பெயரும் என்று சொன்னாள். அந்நாட்டுத் தலைமை பெற்ற பெரிய குலத்தானை வேணாடன் என்பான் இதனைக்கேட்டு பல மெய்யன்பர்கள் வருத்தந்தீர ஒரு பிள்ளையைப் பலியிடுதல் ஒரு பெரிய காரியமோ எனத் திடங்கொண்டு, தலைப்பிள்ளையான தன் குழந்தையைப் பிடித்து வெட்டித் தேர்க்காலிற் பலிகொடுத்தான். உடனே தேர் நடந்தது. பத்தர்கள் களி கூர்ந்தார்கள். இதனைத் தெரிந்த விஜய நகரராயர் இவ்வரிய வீரச்செயலை மெச்சிப் பல மேன்மைகள் செய்தான். என்ப.

வெண்பா.

(மேற்) நாத னிரதம் நடவாது செய்கொடிய
பூத மகலப் புதல்வனை வி—நோதமுற
வெட்டிப் புகழ்படைத்தான் வேணுடையான் கோற்றையான்
எட்டுத் திசைமகிழ வே.

* சகம் 1245, 1249-ல் எழுதிய ஒய்சல அரசனான வீரவல்லால தேவனது சாசனங்கள் விஜயமங்கலத்திலிருக்கின்றன. (No 552, 598, 1905) இந்த அறச்சலூர் என்பது ஈரோடு காங்கேயம் ரோட்டில் 11-வது மயிலிலிருக்கிறது.

## அடியார்க்கு நல்லார்.

குருவை யுணர்ந்த விளங்கோ வடிகளுட் கொண்டுசொன்ன
தருவை நிகருஞ் சிலப்பதி காரத் தனித்தமிழுக்
கருமை யுரைசெ யடியார்க்கு நல்லா ரவதரித்து
வருமைப் பொழினிரம் பைப்பதி யுங்கொங்கு மண்டலமே.

(க - ரை) சற்குரு (தீர்த்தங்கரர்) நிலையை நன்குணர்ந்து துறந்த இளங்கோவடிகள் (சாத்தனாற்) கேள்வியுற்ற கதையைக் கருத்திற்கொண்டு விரும்பிக் கேட்டவற்றைத் தரும் தருவைப்போல எல்லாப் பொருளையும் தன்னு ளடக்கியுள்ள சிலப்பதிகாரம் என்னும் ஒப்பற்ற முத்தமிழ் நூலுக்கு அருமையான உரை கண்டருளிய அடியார்க்கு நல்லார் அவதரித்து வந்த நிரம்பையென்னும் நகரமுங் கொங்கு மண்டலம் என்பதாம். (கூ௫)

வரலாறு:—தமிழ்ப்பெருங் காப்பியங்களைந்தினுள் இரண்டாவதான சிலப்பதி காரம் என்னும் சிறந்த நூலுக்கு உரை எழுதியவர் அடியார்க்கு நல்லார் என்பவ ராவர். இவர் அந்நூலுக்கு உரையெழுதி யிலரேல் அக்காப்பியத்தின் அரிய பொருள் கண்டு பிற்காலத்தார் எழுதமாட்டார்கள். இயல், இசை, நாடகம் என் னும் முத்தமிழ் நூல்களும் ஐயந்திரிபற ஆராய்ச்சி செய்தவர். ஒவ்வொரு இடத் தும் எடுத்துக்காட்டும் மேற்கோள் செய்யுள் இந்த நூலிலுள்ளது என்று விளக்கிக் காட்டும் சிறந்த இயல்புள்ளவர்.

இவர் கொங்கு மண்டலத்திலே நிரம்பையென்னும் நகரில் உதித்தவரென் றும், பொப்பண காங்கேயனென்னும் கொடையாளியின் ஆதரிப்பில் வாழ்ந்தவ ரென்றும் சிலப்பதிகார உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்களால் விளங்குகிறது. நிரம்பையென்பது குறுப்பிநாட்டு ஊர்த்தொகைச் செய்யுளில் காணப்படுகின்றது. அவ்வூர் விஜயமங்கலத்துக் கணித்தாக இருந்திருத்தல் வேண்டும்.

(மேற்) ஓருந் தமிழொரு மூன்று முலகின் புறவகுத்துச்
சேரன் தெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்தபொரு
ளாருந் தெரிய விரித்துரைத் தானடி யார்க்கு நல்லான்
காருந் தருவு மனையா னிரம்பையர் காவலனே.

காற்றைப் பிடித்துக் கடத்தி லடைத்துக் கடியபெருங்
காற்றைக் குரம்பைசெய் வார்செய்கை போலுமக் காலமெனுங்
கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண காங்கேயர் கோனளித்த
சோற்றுப் பெருக்கல்ல வோதமிழ் மூன்றுரை சொல்வித்ததே.

காங்கேயர் என்ற பட்டப் பெயர் கொண்டு வாழும் பரம்பரையார் இன்னும் இம்மண்டலத்திருக்கிறார்கள். காங்கேய பட்டமுற்றவர்கள் செய்வித்த கோயில் குளங்களும், நூல்களுமிருக்கின்றன.

## வாணராயன்

தொங்கவைத் துள்ள பனையேட்டில் வாயிற் சொலாதெழுதி
யங்குவைத் தாலதிற் கண்டதை யன்பி னரிதினல்கி
யிங்குமற் றும்வரு வீர்புல வீரென் றிசைபவள
வங்கிசத் தார்வாண ராயனும் வாழ்கொங்கு மண்டலமே.

(க - ரை) வீட்டின் முகப்பில் பனையேடும் எழுத்தாணியும் தொங்கவிட்டு, வேண்டியவற்றை வாயாற் சொல்லாமல் எழுதிவிட அதிற் குறித்தவற்றை வந்த புலவருக்கு உதவி, மறுபடியும் வரவேண்டுமென்று உபசரிக்கும் பவள குலத்தவனுன வாணராயனுங் கொங்குமண்டலம் என்பதாம். (கூசு)

வரலாறு :— கொங்கு வேளாளரில் பவள கூட்டத்தில் வாணராயன் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்று மிருந்த தமிழ் அபிமானங்கொண்டவனும் படித்தவர்களை நன்கு போற்றி அவர்கள் நல்லுபதேசங்களைப் பாராட்டி இல்லையென்னுது கொடுத்து உபசரிக்குங் கடப்பாடு உடையவனுக ஒருவனிருந்தான்.

மண்ணவராகப் பிறந்தார் கல்வி, யறிவு, கைவரப் பெற்றவரேல் விண்ணவரே போல்வர் என்பது, புலவர் என்னும் பெயர் இருபாலாரக்கும் ஒப்ப வழங்குதலானே தெளிவாம். கற்றுருள்ளும் நல்லிசைப் புலமை வாய்ந்த சான்ருேர் பெருமை அளப்பரியதொன்ருகும்.

உலகம் பொல்லார் உறவை விடுத்து நல்லோரிணக்கங்கொண்டு யாவரிடத்தும் அன்புகொண்டு நடக்குமாறு செய்வதே தொழிலாக உடையவர்கள் தமிழாய்ந்த புலவர்கள். அவர்கள் ஒருவனிடத்துள்ள குற்றங்களை எடுத்துப் பிற இடத்தும், எதிரிலும் அஞ்சாது இடித்துரைப்பர். இதனுல் அவர்களைச் சிலர் வெறுப்பர்; அவர் அறியார். அவர்களுககு வேண்டுவன உதவிச் சிலர் அவர் கூறும் இசைமொழியைக கேட்டு மகிழ்வர். இதனுல் உலகம் நல்வழிப்பட்டு ஒழுகும். அப்புலவர்கள் உலகினாகளுக்கு இதோபதேசஞ் செய்தலே பொழுதுபோக்காக இருப்பதால், தங்கள் குடும்ப நிர்வாகம் கஷ்டமாக நடக்கவேண்டி இருக்கும். ஆதலின் தங்கள் முக ஒளி இழந்து எனக்கு இது தா என்று கேட்க நாணுவார்கள் என்று நினைந்து, தன் வீட்டு முகப்பில் ஒரு எழுத்தாணியும் ஓலையுந் தொங்கவிட்டிருப்பர். சென்ற புலவர்கள் தாங்கள் விரும்பியவற்றை அதில் எழுதி விடுவார்கள். ஏவாலாளர்கள் உடனே அதை எடுத்துப்போய்க் கொடுப்பர். அவற்றை முன்னே உதவிப் பின்பு அப்புலவர்களைப் பார்ப்பது அவ்வுபகாரியின் கொள்கை. நேரிற் கண்டு சந்தோஷ மொழிகள் பேசி அடிக்கடி வந்துகொண்டிருக்க வேண்டுமென்று பல முறை இரந்து கூறி வழியனுப்புவர் என்பர்.

வாணராயர் என்ற பட்டப்பெயரை உடையவர்களாய் சமத்தூர் ஜமீன் (பாளையப்பட்டு) மரபினர் வாழ்கிருர்கள். அவர்கள பவள குலத்தவர்களே. சமத்

தூர் சோழீசர் கோயிலிலும் இவ்வூருக்கு 3 மயிலில் பாலாற்றங் கரையிலுள்ள சித்தாண்டீசுரா ஆலயத்தும் வாணராயன், வாணாதிராயன், வாணவராயன் என்றுள்ள கல்வெட்டுகளிருக்கின்றன. பிரித்து அடுக்கும்பொழுது சில கற்கள் அற்றுப் போனதால் சரியாகவில்லை. ஆனால் வீரராஜேந்திரன் — விக்கிரம சோழன் சாசனங்களிருக்கின்றன.

சேரமான் பெருமான் என்னும் அரசனால் சகம் 713 என்று கண்டு இவர்களிடத்துள்ள ஒரு தாம்பிர சாசனத்தாலும், இம்மரபினர் ஒரு சாமய்ய தியாகராஜ பண்டிதருக்குக் கொடுத்த நிலதான சாசனத்தாலும் இவர்கள் பூர்வ சரித்திரம் தெரிகிறது. ஆனகுந்தி சமஸ்தானத்தரசர்கள் இவர்களின் முன்னோரில் ஒருவருக்கு **வளர்கடாயைக் காதறுத்த வணங்காமுடி வாணராயன்** என்ற பட்டப்பெயர் கொடுத்திருக்கிறார்கள். கோயமுத்தூர் ஜில்லா பொள்ளாச்சித் தாலூகாவைச் சார்ந்தது இந்த ஜமீன் (பாளையப்பட்டு.) இப்போதுள்ள ஜமீன்தார் பெயர் **வேங்கட சுப்பு ராமசாமி வணங்காமுடி வாணராயர்** என்பதாம். வளர்கடாவைக் காதறுத்த பஹதூர் தொண்டைமான் எனப் பெருமையுற்றார் ஒருவர், இம்மண்டலத்துளர் என்பதை இந்நூல் கூ-ம் செய்யு ளுரையில் காணலாம்.

(மேற்) வாயிலிற் றேங்கு மேட்டில் வரைந்ததைப் புலவர்க் கென்றும்
ஓய்விலா துதவு கீர்த்தி யோங்க வாழ் பவளன் வாண
ராயனை நாளும் போற்ற நலமருள் சித்தாண்டீசர்
வாயிலைக் காக்குங் கட்டி யக்காரன் வருகின்றானே.
—(சித்தாண்டீசர்—மோகனி விலாசம்)

## முட்டை என்ற முருகவேளும், பொய்யா மொழிப்புலவரும்.

முட்டையென் பேர்சுரம் போக்கா வொருபா மொழியெனக்கேட்
டிட்ட முறுபொய் யாமொழி பொன்போ லெனவுரைக்கச்
சுட்டழ கில்லையீ தென்று விழுந்த துளியென் றுநன்
மட்டவிழ் தார்முரு கோன்சொன்ன துங்கொங்கு மண்டலமே.

(க - ரை) முட்டை என்பது என் பெயர், சுரம்போக்காக ஒரு கவி கூறுவாயாக என்றதில் மகிழ்ந்து, பொய்யாமொழி என்னும் புலவன் பொன்போலுமென்ற முதலையுடைய வெண்பாக் கூறுதலும், இது அழகில்லை என்று குறித்து விழுந்த துளியென்ற ஒரு கவியை முருகவேள் பாடியது கொங்கு மண்டலம் என்பதாம் (கள)

வரலாறு :—இளமையிற் கல்வி பயிலுகையில் ஆசிரியர் வயலைக் காக்கும்படி அனுப்பப்பட்டார். வெயிலில் களைத்து அருகிருந்து காளிகோயிலில் படுத்து

உறங்கிவிட்டார். ஒரு குதிரை பயிர்க்கதிரை மேய்ந்துவிட்டது. உபாத்தியார்க் தண்டிப்பரே எனப் பயந்து காளிகோயிலை நோக்கிக்கதறினர். இளையோன் வேண்டுதலுக்கு இரங்கிய காளி யநுக்கிரகித்தனள். கவிபாடுந் திறமையுற்று யது காளியம்மையை நோக்கி,

> வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
> ஆய்த்த வருகா ரணிவயலிற்—காய்த்த
> சதிரைமா ளத்தின்னுங் காளிங்க னேறுங்
> குதிரைமா ளக்கொண்டு போ.

என்று கூற அக்குதிரை வீழ்ந்திறந்தது. அரசன் குதிரையென்றறிந்த ஆசிரியர் பயந்து நடுங்கி நிற்க முன் சொல்லிய வெண்பாவின் ஈற்றடியினைக் "குதிரைமீளக் கொண்டுவா" என மாற்றிக் கூற குதிரை உயிர்த்தெழுந்தது. அவருடைய ஆசிரியர்,

> "புலியி லகத்தியனுய்ப் பொய்யா மொழியாய்
> சிதைவில் புலவர் சிறப்பாய்த்—துதிசெய்யச்
> செங்காட்டங் கோட்டத் துறையூ ரேனுந்தலத்தில்
> தங்காட்டங் கொண்டிருப்பாய் தான்."

என வாழ்த்தினர்.

குமாரக்கடவுள் இவர்பால் வெளிப்பட்டுத் தம்மைப் பாடும்படி கேட்க, பெட்டையையும் பாடி முட்டையையும் பாடுவதா என்றனர் என்று கதை கூறுவாருமுளர்.

சில நாளின் பின் தமிழ் நாட்டினர் இவரைக் கொண்டாடினார்கள். அகப்பொருள் புறப்பொருள் கூறுவதில் தமக்கு மிக்காரும் ஒப்பாரும் இல்லை என்ற எண்ணங்கொண்டிருந்தனர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிலை நிறுத்தும் நோக்கமாகக் கொங்குநாட்டின் வழிக்கொண்டு சென்றனர். அப்பொழுது கலையுரை புலவராகிய முருகவேள் வேடுருவங்கொண்டு "செல்வோன் யார்" என வினவ, நாம் புலவரெனப் புலவனுகில் இப்பாலை நிலத்தைச் சிறப்பித்துச் சுரம் போக்காக ஒரு வெண்பாக் கூறுகவென, புலவர் உன் பெயர் யாது என்றனர். என் பெயர் முட்டை யெனவே,

> பொன்போலுங் கள்ளிப் பொரிபறக்குங் கானலிலே
> என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலு
> மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
> கானவேன் முட்டைக்குங் காடு.

எனக்கூற, அக்கவி அவ்வளவு சிறந்து விளங்கவில்லை யென்று முருகவேள்,

விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்

எனத்திருவாய் மலர்ந்தருளினதை வினவி குமாரக்கடவுளெனத் துதித்து வணங்கித் துதிக்க வெளிப்படையாகி அருள் சுரந்து நாவில் வேற்படையூன்றிச் சென்றனர். இதனை அருணகிரிநாதரும்,

(மேற்) முற்றித்திரி வேற்றிக்குருபர முற்பட்டமு ரட்டுப்புலவனை
முட்டைப் பெயர் செப்பிக்கவிபெறு பெருமாளே.

இந்நிகழ்ச்சி திருமுருகன்பூண்டித் தலத்தருகில் நடந்ததென்று கர்ணபரம்பரையாகப் பெரியோர் கூறுகிறார்கள்.

குமாரக்கடவுள் அருள்பெற்ற புலவர் காளையார் கோயில்சென்று பிரசித்தமடைந்து பின்பு புறப்பட்டு தஞ்சை வாணன்மீது கோவைபாடி மதுரை சென்று சில அற்புதங்கள் நடத்திப்பின் சீனகசுன் என்னும் உபகாரியின் நட்பினராக இருந்து அவர் உயிர் துறக்கவே அவர் உடலுடன் உடன்கட்டை யேறினர் என்பர்.

## பாரியூர், செட்டி பிள்ளையப்பன்

கலியின் மெலிந்து புகல்கவிக் கீயக் கயிலின்மையால்
புலியி னுழைபுக்குக கள்வர்கள் பங்குப் பொருட்டிரளை
மலிய வெடுத்தப் புலவனுக் கீந்த வடகரையான்
வலியன் கனவாளன் செட்டிபிள் ளான்கொங்கு மண்டலமே.

(க - ரை) வறுமையால் தளர்வுகொண்டு கூறிய பாட்டுக்கேட்டுக் கொடுதற்குப் (பொருள்) கையிலில்லாததால் புலிவாழிடத்திற் புகவே, அவ்விடத்துத் திருடர்கள் பங்கிட்ட பொற் குவியலைப் பெற்றுப் பெருக்கமாகக் கவிபாடிய புலவனுக்குக் கொடுத்த வடகரை நாட்டினனை செட்டிபிள்ளான் என்பவனுங் கொங்கு மண்டலம் என்பதாம். (கக)

வரலாறு :—காஞ்சிக்கோயில் நாடு (இப்பொழுது கோபிசெட்டிபாளயம் தாலுக்கா) பாரியூரில் புலவர்களுக்கு இல்லையென்னாது கொடுப்போனைக் கொங்கு வேளாளரில் கனவாள கூட்டத்தில் செட்டி பிள்ளையப்பன் எனப் பெரிய கொடையாளி ஒருவனிருந்தான். அவன்மீது கவிபாடிக்கொண்டு ஒரு புலவன் வந்தான். கொடுத்திளைதத தாதாவாக உள்ள அந்தச் செட்டி பிள்ளையப்பன் என்பவன் மெத்த வருந்தி சிந்திக்கின்றான். உலகத்தில் ஒருவனிடஞ் சென்று எனக்கு இல்லை, கொடு என்று கேட்பது சிறுமை. கேட்டோனுக்கு இல்லையென்ற சொல்

சிறுமையினும் மிகச்சிறுமை. அதினும் நமக்கும் நம்குலத்துக்கும் புகழை விளை விக்கும் கவிபாடிவந்த புலவனுககு இல்லை என்று கூறுஞ்சொல் நமக்கும் நம இனத் தவர்களுக்கும் வசை தேடிக்கொண்டதாகும். ஒருவருக்கு வரும் இசையும் வசை யும் புலவர் வாய்ச்சொல்லால் நிலை பெறுகிறது. ஆதலின் இல்லை என்று சொல் வதைவிடச் சமீபத்துள்ள புலித்துறிற் புகுந்து அப்புலிக்கு உணவாகச் சாவது புகழையீட்டும் எனத்துணிந்து புலிவாழிடத்துட் புகுந்தான்.

கொள்ளைகொண்ட பொற் குவியல்களை அப்புலிப்புதர் மறைவில் பங்கிட்டுக் கொண்டிருந்த திருடர்கள், இக்கொடையாளி வருகையை நோக்கிப் பயந்து ஓட லாயினர். கூறுகளாகக்கிடக்கும் பொற் குவியல்களைக் கண்டு ஒருவாறு மகிழ்ந்து அவற்றை எடுத்து வந்து கவிபாடியுற்ற புலவனுக்குக் கொடுத்து உபசரித்தனன் என்ப.

பாரியூர் ஸ்ரீ அமரவிடங்கப் பெருமானுர் திருப்பள்ளி எழுச்சிக்கு நிலதானம் செய்த ஒரு கற்சாசனம் அச்சிவாலயத்திருக்கிறது. அது இது:—

ஸ்வஸ்தி ஸ்ரீ௨௧ வுாதாவபூக்கிரவர்த்தி பொஜஉ௨தஜவில வீர வல்லாள தேவர் வுாதிவி ராஜ்ஜியம் பண்ணியருளா நின்ற வுாஸவஸம் வத்ஸரத்து ஆவணிமாத முதல் காஞ்சிக் கூவல்நாட்டிப் பாரியூர் வெள்ளாளன் களில் செட்டி பிள்ளையப்பனேன் உடையார் அமரவிடங்கப் பெருமான் திருப் பள்ளி எழுச்சிக்கு ..........................

ஹொ (ஓ)ய்சலர் என்பது போஜளர் என்பதாம். 72-93-ம் செய்யுட்களின் கீழ் நோக்குக.

(மேற்) இட்டமான கவிசொல்லும் பாவலர்க்
கில்லையென்று சொலற்கஞ்சிக் காட்டில்வாழ்
துட்ட வன்புலித்துறிற் புகுந்தநற்
றூயவன் கனவாள குலத்தினன்
செட்டி பிள்ளையப் பன்றினந் தொண்டுசெய்
தேவிமாமலை மாதொரு பங்குள
கட்டு செஞ்சடையமர விடங்கனுர்
கதித்துவாழ் பாரியூ ரேங்களூரே.—அமரவிடங்கர் குறவஞ்சி.

## கொங்கு வேளிர்.

நீதப் புகழுத யேந்திரன் காதை நிகழ்த்துதற்குக்
கோதற்ற மங்கையின் மூன்று பிறப்புற்ற கொள்கையன்றி
மேதக்க சொற்சங்கத் தார்வெள்க வேகொங்கு வேளடிமை
மாதைக் கொண்டுத்தாஞ் சொன்னது வுங்கொங்கு மண்டலமே.

இது உதயணன்கதை என்றும் பெருங்கதை யென்றுங் கூறும் கொங்கு வேண்மாக்கதை இயற்றி அரங்கேற்றிய சரிதம் என்று மாத்திரம் விளங்குகிறது. மற்றை விவரம் நன்கு விளங்காமையால் உரை எழுதவும் இயலவில்லை. (கக)

வரலாறு :— வச்ச தேச அரசனுகிய உதயணன் சரித்திரத்தைச் சொற்சுவை பொருட்சுவைகளில் மிகச் சிறந்ததாகக் கொங்கு வேளிரால் மிக விரித்துக் கூறப் பட்டது. ௬-பகுப்பினையுடையது. க-வது உஞ்சைக்காண்டம் ருக-பகுப்பினை யும், உ-வது இலாவாணகாண்டம் உ0-பகுப்பினையும், ௩-வது மகதகாண்டம் உஎ-பகுப்பினையும், ச-வது வத்தவகாண்டம் கஎ-பகுப்பினையும், ரு-வது நரவாணகாண் டம் ௬-பகுப்பினையும், உடையன. ஒவ்வொரு சிற்றுறுப்பும் மிகப் பெரிய ஆசி ரியப்பாவொன்றால் இயற்றப்பட்டுள்ளது. இது கதை யெனவும் பெருங்கதை எனவும், கொங்குவேள்மாக் கதை எனவும் வழங்கும். சிந்தாமணி முதலிய காப்பி யங்களிலும் இதனை மிக மேலாக மதித்து அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரை யில் மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

(மேற்) "தலமுத லூழியிற் றானவர் தருக்கறப்
புலமக ளாளர் புரிநரப் பாயிரம்
வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச்
செலவுமுறை யெல்லாஞ் செல்கையிற் றெரிந்து
மற்றை யாழுங் கற்றுமுறை பிழையான்
பண்ணுந் திறனுந் திண்ணிதிற் சிவணி
வகைநயக் காணத்து தகைநய நவின்று
நாரத கீதக் கேள்வி நுனித்து
பரந்தவந் நூற்கும் விருந்தின னன்றித்
தண்கோ சம்பி தன்னக ராதலிற்
கண்போற் காதலர்க் காணிய வருவோன்
கார்வழி முழக்கிற் நீர்நசைக் கெழுந்த
யானைப் பேரினத் திடைப்பட் டயலதோர்
கான வேங்கைக் கவர்சினை யேறி
யச்சமெய்தி யெத்திசை மருங்கினு, நோக்கினன்."
—உதயணன் கதை - வத்தவகாண்டம் யாழ்பெற்றது.

அவநிதன்

தவநித நோற்கு மறவாணர் மேவத் தழைகுடிகள்
நவநிதி யோங்கத் தரியலர் தாழ நலம்பொருந்தி
அவநித னுதியரசர் வடக்கு மடங்க மணி
மவுலி தரித்துப் புகழ்நீண் டதுகொங்கு மண்டலமே

(க - ரை) நாளுந் தவம்புரியும் புண்ணியவான்கள் பொருந்த வளர்ச்சி யுற்றுக் குடிகள் நவநிதி பொருந்தப் பகைவர் வணங்க இன்பமோங்க அவநிதன் முதலிய அரசர்கள் வடநாட்டையும் வென்று மகுடம் புனைந்து அரசு புரிந்து புகழ் கொண்டது கொங்கு மண்டலம் என்பதாம். (௧00)

அவநித ஞதியரசர் என்றிருப்பதால் அவநிதன், கொங்கணி, பிரதிவி கொங்கணி முதலிய கொங்கு அரசர்கள் ஆம். கேரளத்தைச் சார்ந்த பொன்னுடு முதலிய ராஜ்ஜியங்களை அவநிதன் என்னும் அரசன் வென்று ஆண்டிருக்கிறான். கொங்கணி என்னும் அரசன் 5-வது நூற்றாண்டில் தானம் செய்த நிலம் வடக்கே நந்தி துர்க்கத்திலிருக்கிறது. 6-வது நூற்றாண்டின் தொடக்கத்தில் அவநிதன் தானஞ் செய்த நிலம் அதன் வடக்கிலும், 8-வது நூற்றாண்டில் துங்கபத்திரைக் கரையிலுள்ள ஊரில் பிரிதிவி கொங்கணியின் தான நிலமிருப்பதால் அது வரை கொங்கு ராஜாக்கள் வென்று ஆண்டிருக்கிறார்கள் என்பது நன்கு விளங்குகிறது. சங்க நூல்கள் கொங்கு - கொங்கர்கள் என்றும், சேரர் - கேரளம் என்றும் வேறு பிரித்துக் கூறுகின்றன. கொங்கு அரசர்கள் கேரளத்தை வென்றதும், கேரள வேந்தர் கொங்கு நாட்டை வென்றதும் அங்கங்கு கூறப்பட்டுள்ளன. பல நாடுகளை ஒரு அரசன் ஆண்டிருக்கிறான். இது மாறி மாறி வருவதுண்டு. கேரள அரசருக்குத் தலைப்பட்டணம் கள்ளிக்கோட்டை, வஞ்சி. கொங்குக்குத் தலைப்பட்டணம் ஸ்காந்தபுரம்-தவலனபுரம் அல்லது குவலாலபுரம் என்றுங் காணப்படுகிறது. 9-ம் நூற்றாண்டில் சோழவேந்தாகள் வெற்றி பெறுகிற வரையில் இந்தஸ்காந்த புரத்திலிருந்து தான் அவநிதன் முதலிய கொங்கு அரசர்கள் புகழோங்கி வாழ்ந்தார்கள்.

பொன்னுடு முதலிய சேரராச்சியத்தைக் கட்டி யாண்ட அவநிதன் என்னும் அரசன் எட்டுத் தொகையுள் ஒன்றான ஐங்குறு நூறு-மருதம்-க-வேட்கைப் பத்து கூறும் அவிநி என்பவனுவன் என்போர் கூற்று காலத்தோடு ஒக்குமாயின்,

(மேற்) வாழியாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்சிறிது சிறக்க
வென வேட்டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டோமே.

இவ்வேட்கைப்பத்து ஒன்று முதல் ௧0-பாக்களும் முதலடி ஒவ்வொன்றும் வாழியாதன் வாழியாவினி என்றே நிலவுகின்றன.

கொங்குமண்டலசதக மூலமும் உரையும் முற்றிற்று.

உ

# முகவுரை.

---

தமிழ் வழங்கும் நிலமானது முடியுடைவேந்தர் மூவர்க்கும் உரிய என்பதால், கீழ்கடல் சோழனுடையதும், தென்கடல் பாண்டியனுடையதும், மேல்கடல் சேரனுடையதும் ஆம். கொங்கு சேரனைச் சார்ந்தது. அது ஒரு சேரனது இரண்டு மக்களுள் இளையவனுக்குக் கீழ்ப் பகுதியைப் பிரித்துக் கொடுத்தான், அப்பகுதிதான் * கொங்கமண்டலம் என்கிறார்கள். இதற்குப் போதிய ஆதரவு இன்னுங் கிடைக்கவில்லை. வெகு காலமாகக் கொங்கு என்பது தனி நாடாக இருந்திருக்கிறது. சங்க நூல்களுள்ளுஞ் சேரரென்றுங் கொங்கரென்றும் பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. 2-ம் நூற்றாண்டிலிருந்த செங்குட்டவன் "கொங்கர் செங்களம் வேட்டான்" என்றிருத்தலானும், கொங்கிளங்கோசர் கண்ணகைக்கு விழா நடத்தினனென்றிருத்தலானும், பெருஞ் சேரலாதன் தகடூர் பெற வேண்டி அதிக மானிடம் போர் புரிந்திருத்தலானும், கொல்லிமலையைப் பெறக் கருதி மலாடு நாட்டு அதிபனான காரியை வேண்ட அவன் வல்வில் ஓரியைப் போரில் வென்றபின் கொல்லிமலையைப் பெருஞ்சேரல் இரும்பொறை பெற்றிருத்தலானும், அதிகமானுக்குத் துணையாகச் சேரரும் வந்து தோற்றோடினரென்று காணப்படுகின்றமையானும் ஏறக்குறைய ஓராயிர ஆண்டினிடையில் சேராதிக்கத்திற் கொங்குமண்டல மிருந்ததாக விளங்கவில்லை. பின்பு ஏக தேசம் ஒன்பதாம் நூற்றாண்டினின்று சோழ வரசாட்சியிலும், பின்பு பாண்டியர் ஆளுகையிலும் கொங்குநாடு இருந்திருக்கிறது. ஆதலின் சேரர் பெயர் பொறித்த சாசனங்கள் கொங்குநாட்டில் அகப்படுவதில்லை.

சேலம் ஜில்லாவின் தென் பகுதியும், கோயமுத்தூர் ஜில்லாவும், மதுரை ஜில்லாவிற் சிறு கூறுஞ் சேர்ந்தது கொங்கு ராச்சியம். ஸ்காந்தபுரத்தை ராஜதானியாகக் கொண்டு கி. பி. 190 லிருந்து 9-ம் நூற்றாண்டு வரை கொங்க அரசர்கள் ஆண்டு வந்திருக்கிறார்கள் என்பது இப்போதைய சரித்திரக்காரர் கருத்து. கருநாடக தேசம் பிடிபட்ட பிறகு இப்போதைய மைசூர் ராஜ்ஜியத்தின் ஒரு பகுதி வரையில் வடக்கே நகர்ந்தது. பொன்னாடு முதலிய சிறிய நாடுகள் அவநீதன் என்பவனாற் பிடிக்கப்பட்டது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குள் வடக்கே நந்திதுர்க்கம் வரையிலும், ஆறாவது நூற்றாண்டின் றொடக்கத்தில் இன்னும் நகர்ந்தது.

---

* மண்டலம் என்பது ஒரு தேசத்தினின்று பிளவுற்றது.

8-ம் நூற்றாண்டில் துங்கபத்திரை நதிவரை பரவிற்று. * 8-ம் நூற்றாண்டிலேயே சோழவேந்தர் ஆதிக்கத்துக்குட்பட்டது.

காவேரி நதியின் வடபாகம் (சேலம் ஜில்லா) **வடகொங்கு** என்றும், தென் பகுதி, **தென்கொங்கு** என்றும், மேல் பகுதி **மேல்கொங்கு** என்றும் வகுக்கப்பட்டது. இவைகளை 24 † நாடுகளாகப் பிரிக்கப்பட்டன. இந்த இருபத்துநான்கு நாடுகள் சில சமயங்களில் பலவிதமாகப் பிரிக்கப்பட்டும், உபநாடுகள் அமைக்கப்பட்டும், பின்பு சேர்க்கப்பட்டும் வந்தனவாகத் தெரிகின்றன. குன்றத்தூர் (சங்ககிரி துர்க்கம்) கூற்றம் - தாராபுரக்கூற்றம் - தணுக்கன் கோட்டைக்கூற்றம் என்றும் வகுத்து விஜயநகரராயர் காலத்தும் மதுரை நாயக்கர் காலத்தும் ஆளப்பட்டு வந்திருப்பதாகத் தெரிகிறது.

கொங்குமண்டல சதகத்துள் காணப்படுங் கதைகள் நிகழ்ந்த ஊர்கள், இந்நாட்டினுட்பட்டது என்பது எளிதிற் கண்டுகொள்ளும் பொருட்டாக இவ்வூர்த்தொகை இதன் அநுபந்தமாகச் சேர்த்தது. இவற்றை அறிதற்காக ஒவ்வொரு நாட்டிலும் புகுந்து அந்த அந்த நாட்டைச் சார்ந்த ஊர்களைக் காட்டும் பாட்டுகளைக் கண்டும், பாட்டு அகப்படாத நாட்டின் ஊர்களை ஆதாரத்துடன் தேடிப் புதிய பாட்டுகளியற்றி * இவ்வித அடையாளக் குறிப்பிட்டும் இத்துடன் சேர்த்துள்ளேன். இதில் நாட்டின் எல்லைகளிலுள்ள ஊர்கள் சிலவற்றை இரு நாட்டினுஞ் சேர்த்திருக்கிறார்கள். பல பழய நூல்களிற் கூறும் ஊர்கள் மறைந்து போயின. சில பழம்பெயர் மாறியும் பிற்காலத்து விடுபட்டுமிருக்கின்றன. புதிய ஊர்களைச் சேர்த்தும் எண்ணுவோரு முண்டு. இதிற் பல தவறுகளிருக்கவுங் கூடும். இப்படி நேர்வது இயல்பு என்று பொறுமை கொண்டு ஆன்றோர் தெரிவிப்பின் வந்தனத்துடன் ஏற்றுக்கொண்டு மறுபதிப்பில் திருத்தமாக வெளியிடுகிறேன். இம்மண்டலத்துப் படம் (Map) ஒன்று எழுதுவித்து இதன் இறுதியில் வைக்க முயற்சித்தேன். சில பெரியோர்கள் விரைவில் வெளியாக்கக் கருதுவது கண்டு மறுபதிப்பிற் சேர்க்கலாமென்று நிறுத்திவிட்டேன்.

நாடு-ஊர்-கதைகள் தெரிதற்பொருட்டு இம்மண்டலத்திற் சென்ற காலங்களில் அங்கங்கே போதுமான செளகரியங்களைச் செய்து கொடுத்த நண்பர்களின் அபிமானத்தை ஒருநாளும் மறப்பேனல்லேன்.

திருச்செங்கோடு,
1—1—23.

தி. அ. முத்துசாமிக்கோனார்.

---

* அங்கங்கு இவர்கள் தானஞ் செய்த நில சாசனங்க ளிருக்கின்றன.

† சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தின் முன்னரே பிரிக்கப்பட்டது "**கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்**" தேவாரம்.

உ

விநாயகன் றுணை

# கொங்குமண்டல ஊர்த்தொகை

காப்பு

விருத்தம்

* பொங்கு மண்டல மாசுண பூடணற் பரசி
இங்கு மண்டல மொழிகளு ளிறைபரு டமிழ்மான்
றங்கு மண்டல †மேழினுட் டாழ்வறு வளஞ்சேர்
கொங்கு மண்டல வூர்த்தொகை குணமுறக் குறிப்பாம்.

## நூன் முறை

தண்டமிழாய் பவர்பதிக டரிசிப்போர் தொன்மைச்
சரிதமுறை விவகரிப்போர் தமொற்றுரு து
மண்டலத்து ளிருபத்து நான்குநா டவற்றை
மருவுபநா டொவ்வொன்றின் மன்னியபே ரூரைப்
பண்டாசர் செப்பேடு கல்லெழுத்துத் தமிழ்நூல்
பலவாய்ந்து பிழைபோக்கு பழங்கவியு மதுகொள்
வண்டெனயா னிசைகவியுந் தொகுத்ததனைக் கொங்கு
மண்டலவூர்த் தொகையெனப்பேர் வழங்க விளக்கினனே.

## கொங்கு இருபத்துநான்கு நாடுகள்

ஆசிரிய விருத்தம்

சொல்லவரி தானபூந் துறைசை தென்கரைநாடு தோன்றுவா ரக்கநாடு
தோலாத பொன்கலூர் நாடுதிக ழாறையளி தோய்ந்தவா ரக்கநாடு
வல்லமை செறிந்ததிரு வாவினன் குடிநாடு மணநாடு தலையநாடு
வாதட்டை பூவாணி யரையநா டொடுவெங்க வடகரை கிழங்குநாடு

---

* முதலில் இக்குறியிட்ட பாடல்களெல்லாம் உரையாசிரியர் தி. அ. முத்து சாமிக்கோனுரால் இயற்றிச் சேர்க்கப்பட்டன.

† சோழமண்டலம் - ஜயங்கொண்ட சோழமண்டலம் - ராஜ ராஜ மண்டலம் - சோழகேரள மண்டலம் (வீரசோழ மண்டலம்) - கங்கைகொண்ட சோழ மண்டலம் - நிகரிலி சோழமண்டலம் - ஈழமண்டலம். என ஏழு.

நல்லுருக் கன்னாடு வாழவந் தியுமண்ட நாடுவெங் காலநாடு
நாவலர்கள் சொல்கா வடிக்கநா டானைமலை ராசிபுர நாடுநிதமும்
இல்லறம் வளர்த்துதவி மல்குகாஞ் சிக்கோயி லியல்செறி குறுப்புநாடு
மினியபுகழ் சேர்கொங்கு மண்டலந் தனிலான இருபத்து நான்குநாடே. (௧)

| | | |
|---|---|---|
| பூந்துறை நாடு | தலையநாடு | வாழவந்தி நாடு |
| தென்கரை நாடு | தட்டயநாடு | அண்ட நாடு |
| காங்கேய நாடு | பூவாணியநாடு | வெங்கால நாடு |
| பொன்கலூர் நாடு | அரையநாடு | காவடிக்கநாடு |
| ஆறை நாடு | ஒடுவங்க நாடு | ஆனைமலை நாடு |
| வாரக்கநாடு | வடகரை நாடு | ராசிபுர நாடு |
| திருவாவினன்குடி நாடு | கிழங்கு நாடு | காஞ்சிக்கோயினாடு |
| மண நாடு | நல்லுருக்கநாடு | குறும்புநாடு |

—ஆக ஊர்கள்—௨௪.

## பூந்துறை நாட்டில்

### மேல்கரைப் பூந்துறை நாடு

பூந்துறைசை வெள்ளோடை நசியனூ ரெழுமாதை புகழ்சோபி டாரிநகரம்
பூங்கமழு மீங்கியூபெ ருந்துறை சாத்தனூர் பொன்காள மங்கலமதும்
ஆய்ந்ததமிழ் கூறுங் குழாநிலை கிழாம்பாடி யாண்மைகொண்மு டக்குறிச்சி
யநுமநகர் பழமங்கை குளவிளக் குக்காக மறச்சலூர் விளக்கேத்தியும்
வேந்தர்மகி ழீஞ்சநகா சத்திமங் கலமதும் மிக்கசே மூர்மங்கலம்
வீரநக ரீரோடு பேரோடு சித்தோடு மிக்கான திண்டற்புதூர்
சேர்ந்துமழை பெய்ந்தருளு மிலவமலை திருவாச்சி திகழ்பனசை யோடாநிலை
தென்முருங் கைத்தொழுவு முப்பத்தி ரண்டூர்சி றந்தபூந் துறைசை நாடே.

| | | | |
|---|---|---|---|
| பூந்துறை | சாளமங்கலம் | அறச்சலூர் | பேரோடு |
| வெள்ளோடை | குழாநிலை | விளக்கேத்தி | சித்தோடு |
| நசியனூர் | கிழாம்பாடி | ஈஞ்சம்பள்ளி | திண்டல்புதூர் |
| எழுமாத்தூர் | முடக்குறிச்சி | சத்திமங்கலம் | இலவமலை |
| பிடாரியூர் | அநுமன்பள்ளி | சேமூர் | திருவாச்சி |
| ஈங்கூர் | பழமங்கலம் | மங்கலம் | பனயம்பள்ளி |
| பெருந்துறை | குளவிளக்கு | வீரநகல்லூர் | ஓடாநிலை |
| சாத்தம்பூர் | காகம் | ஈரோடு | முருங்கைத்தொழு |

—ஆக ஊர்கள்—௩௨.

இந்நாட்டுக்குத் தலைமைத்தலம் சென்னிமலையாதலின் அது ஊர்த்தொகை யுட் சேரவில்லை.

## கீழ்கரைப் பூந்துறை நாடு

மோரூருடன்முளசை குலவுமே மப்பள்ளி முற்றுதக டப்பாடியும்
மோடமங் கலமேழி பள்ளியிரு புலிபிரிதி முட்டில்சிறு முளசையணிமூர்
நீரூர்கு மரமங்கை யகரஞ்சே தாபுரம் நிழலுற்ற கருமாபுரம்
நீதிவட்டூர் மணலி கோக்கலையு முஞ்சினியு நிலைகொள் கூத்தம் பூண்டியும்
சீரூருமானங்கூர் கொக்கரா யன்பேட்டை தேவை காடச்சி நல்லூர்
செயமா விரட்டியுட னேலத்தி வாடியுஞ் செய்யபடை வீடுபட்லூர்
ஏரூர் வயற்கழனூர் மண்டபத் தூர்தோக்கை யின்பமிகு சித்தளந்தூர்
இணையில் கத்தாரியுடன் முப்பத் திரண்டூர்க ளினியபூந்து றைநாடே. (௫)

| | | | |
|---|---|---|---|
| மோரூர் | சிறுமுளசை | கோக்கலை | லத்திவாடி |
| முளசை | அணிமூர் | உஞ்சினி | படைவீடு |
| ஏமப்பள்ளி | குமரமங்கலம் | கூத்தம்பூண்டி | பட்டிலூர் |
| தகடப்பாடி | அகரம் | ஆனங்கூர்[ட்டை. | கழனூர் |
| மோடமங்கலம் | சேதாபுரம் | கொக்கராயன் பே | மண்டபத்தூர் |
| மேழிப்பள்ளி | கருமாபுரம் | தேவனுங்குறிச்சி | தோக்கைவாடி |
| இருப்புலி | வட்டூர் | காடச்சிநல்லூர் | சித்தளந்தூர் |
| பிரிதி | மணலி | மாவிரட்டி | கத்தேரி |

—ஆக ஊர்கள்—௩௨.

இந்த ஊர்கள் சூழ்ந்த மலைக்கோட்டையுள்ள கடிஸ்தலம் சங்ககிரி துர்க்கம். இதில் பிரதி காவலரிருந்து அதிகாரம் புரிவர். குன்றத்தூர்க் கூற்றம் என்று பெயர். இக்கூற்றத்தைச்சார்ந்த நாடுகள் ௧௨. இம்மண்டலத்துப் பொதுவான தேவநகரம் திருச்செங்கோடு. ஆதலின் இவ்விரு நகரங்களும் ஊர்த்தொகையுட் சேரவில்லை.

## பூந்துறை நாட்டின் இணை நாடுகள் (2)

### 1. பருத்திப்பள்ளி

சீர்பருத் திப்பள்ளி மல்லை கோட்டைப்பதி திகழ்கருங் கற்பட்டியுந்
திறமிகுங் கொண்ணையா றவிநாசிபட்டியுஞ் செய்மேவு பண்டிநத்தம்
ஏர்கொழுங் கொண்டைகூத் தாநத்தம் வைகுந்த மிசைகரும னூர்தாழையூர்
ஏகாபுரம் புள்ளா நகர்நவே னேரியுட னேற்றகன் னந்தேரியும்
பேர்கொள்தப் பக்குட்டை கூடலூர் மங்கலம் பேசிடங் கணசாலையும்
பேணு கச்சுப்பள்ளி யிரணு புரங்கனகை பெய்சண்பை பாலைமுஞ்சை
பார்கொள் பல்லக்குழி கண்டமாணிக்கமும் பகராட்டையாம் பட்டியும்
பழுதில்மாம் பூண்டியின் னும்பனி மரப்பறை பருத்திநன் னுடுதானே. (௬)

பருத்திப்பள்ளி
ராஜசிம்ம சதுர்வேதி
மங்கலம்-சித்திரமேழி
விண்ணகரம்
மல்லசமுத்திரம்
கோட்டைப்பாளயம்
கருங்கல்பட்டி
கோண்வணயாறு
அவிநாசிபட்டி
பண்டிநத்தம்
கொழுங்கொண்டை
கூத்தாநத்தம்
வைகுந்தம்
கருமனூர்
தாழையூர்
ஏகாபுரம்
புள்ளாநத்தம்
நடுவனேரி
கன்னங்தேரி
தப்பக்குட்டை
கூடலூர்
மங்கலம்
இடங்கணசாலை
கச்சுப்பள்ளி
இராணபுரம்
கனககிரி
சண்பகமாதேவி
பாலமேடு
முஞ்சனூர்
பல்லக்குழி
கண்டகுளமாணிக்கம்
ஆட்டையாம்பட்டி
மாம்பூண்டி
மின்னும்பள்ளி
மரப்பறை

—ஆக ஊர்கள்—௩௨.

## 2 ஏழூர் நாடு

ஏழூரினேடுநாட் டாமங்கை கலியாணி யெழினவனி முசிரி புத்தூர்
இணையில் தாழம்பாடி தும்பைநகர் மானத்தி இளநகரி மாறப்பனூர்
தாழா மரூர்ப்பட்டி முதலையின்பட்டியொடு தனிநல்லி பாளயமுடன்
தங்குகொண் டப்பனூர் சிவியான னகரிமுத் தக்காளூர் மின்னும்பளி
வாழைமிகு சேந்தமங் கலமோர்துத்திக்குளம் வண்மை காளப்பனூரும்
மாழைவெட் டுக்காடு வேளைகரு தானியும் மாபுடங்கந் திருமலை
காழிகண் ணூற்பட்டி யோடுடுப் பங்காரை கவின்கலங் காணியகரம்
கருது முத்தப்பனூர் முப்பத்திரண்டி வூர் காணுமே ழூர்நா டரோ. (௬)

ஏழூர்
நாட்டாமங்கலம்
கலியாணி
நவனி
முசிரி
புத்தூர்
தாழம்பாடி
தும்பங்குறிச்சி
மானத்தி
இளநகரி
மாறப்பனூர்
மரூர்ப்பட்டி
முதலைப்பட்டி
நல்லிபாளயம்
கொண்டப்பனூர்
சிவியாம்பாளயம்
முத்தக்காள்பட்டி
மின்னும்பள்ளி
சேந்தமங்கலம்
துத்திக்குளம்
காளப்பநாய்க்கன்பட்டி
வெட்டுக்காடு
வேளுக்குறிச்சி
கருதானி
புடங்கம்
திருமலைப்பட்டி
கண்ணூறுப்பட்டி
கலங்காணி
உடுப்பம்
காரைக்குறிச்சி
அகரம்
முத்தப்பனூர்

—ஆக ஊர்கள்—௩௨.

ஏழூர் நாடு - வாளவந்தி நாடு - விமலை நாடு இவைகட்கு எல்லையாக இருப்பது நாமக்கல். இதற்கு "அதியேந்திர விஷ்ணுக்ரஹம்" என்று பெயர். அதியனு லமைக்கப்பெற்றதால் இப்பெயராயிற்று. இது ஏழூர் நாட்டில் மலைக்கோட்டையுள்ள பெருநகரமாதலின் ஊர்த்தொகையுட்சேரவில்லை. 'வடகொங்கு' என்ற சாசனமிருக்கிறது.

## தென்கரை நாடு

### விருத்தம்

*கோதிலாக் கொற்றனூர் மூலனூருங் குறிச்சியிளம் பிள்ளைவீ ராச்சியோடு*
*ஏதிலா ரும்புகழுந் தாரம்பாடி யெதிரனூர் பிரமியமும் நீலம்பூரும்*
*ஊதியூ ருடன்கொழுமண் குழிகிழானு ருயர்குண்ட லுடன்பன்னி ரண்டூர் சேர்ந்து*
*நீதிசேர் தென்கரைநா டாகுமென்றூர் நிரம்புகல்வி கற்றபெரும் புலவர்தாமே.* (௬)

| | | |
|---|---|---|
| கொற்றனூர் | வீராச்சிமங்கலம் | நீலம்பூர் |
| மூலனூர் | தாரம்பாடி | ஊதியூர் |
| குறிச்சி | எதிரனூர் | கொழுமண்குழி |
| இளம்பிள்ளை | மாம்பாடி | கிழான்குண்டல் |
| மூளையான் பூண்டி | பிரமியம் | |

—ஆக ஊர்கள்—௧௨.

இந்த ஊர்கள் சூழ்ந்துள்ள தாராபுரம் நிலக்கோட்டையுள்ள கடிஸ்தலம், ஒரு அரசப்பிரதிநிதி இருந்து அதிகாரஞ் செலுத்துவது. இக்கூற்றத்தைச் சார்ந்த நாடுகள் 24. ஆதலின் கிராமத்தில் தாராபுரஞ் சேர்த்து எண்ணப்படவில்லை.

தாராபுரம் பழனி முதலிய சில ஊர்களைச் சேர்த்து நறையூர் நாடு என்று வழங்கினதும் உண்டு.

## காங்கேய நாடு

*காங்கயத்துடன் வல்லிதன் காடையூர் கந்தர்மேவிய பட்டாலி கீரனூர்*
*ஓங்கு பார்ப்பதி நற்பரஞ் சேர்வளி யுற்றகாரை மருதுறை வெண்முத்தூர்*
*தேங்குகன்ன புரம்வெள்ளை கோவிலுஞ் சிறந்தவாறு தொழுவாலாம் பாடியும்*
*தீங்கிலாத கங்காகுல நாட்டார் செழிக்குங் காங்கேய நாடெங்கள் நாடே.* (௭)

| | | |
|---|---|---|
| காங்கேயம் | பட்டாலி | பரஞ்சேர்வளி |
| வல்லியிறைச்சல் | கீரனூர் | காரையூர் |
| காடையூர் | பார்ப்பதி | திருபுவன மாதேவிபுரம் |

| | | |
|---|---|---|
| மருதுறை | கன்னபுரம் | ஆறுதொழு |
| முத்தூர் | வெள்ளகோவில் | ஆலாம்பாடி |

—ஆக ஊர்கள்—௧௭.

சிவமலை இந்நாட்டின் பொதுத்தலமெனக்கொண்டு கிராம (ஊர்)த் தொகையிற் சேர்க்கவில்லை

## பொன்கலூர் நாடு

### விருத்தம்

பொங்கலூர் கொடுவாயி செம்பை குன்றுபுரம் புற்றிரைசை யுகாயனகரம்
புகல்பெருந்தாபுரி திருப்பையூருடனேநற் புகழ்பெரும் பிள்ளை நகரம்
தங்குமிச்சிக்காணி வானவன் சேரியொடு தளிகைநிறை யங்கிநகரம்
சாரரண நல்லூர்பல் லாபுரி குடிமங்கை தகைமையுட னேதுதென்னு
மங்கலந் தென்பள்ளி லக்கர் பெற்றம்பள்ளி வாய்த்தநம ருரியெழில்சேர்
மண்ணரை முருந்தநல் லூரமுக் கயங்கற்றை மாவூற்றலூர் சிறந்த
புங்கமிகு காஞ்சிநதி லவணநதி யாண்கொல்லி புராரிநதி மாமாங்குசூழ்
பூர்வீக வலகுமலை யாண்டவன் அரசுபுரி பொன்கலூர் நாடுதானே. (அ)

| | | |
|---|---|---|
| பொன்கலூர் | இச்சிக்காணி | தென்னமங்கலம் |
| கொடுவாயி | அலகுமலை | தென்பள்ளி |
| செம்புத்தொழு | தளிகை | இலக்கம்பாடி |
| சொக்கம்பாளயம் | அவிநாசியபாளயம் | பெற்றம்பள்ளி |
| குன்றிடம் | நிறையூர் | நமருரி |
| புற்றிரைச்சல் | அங்கித்தொழு | மண்ணரை |
| உகாயனூர் | அரவணைநல்லூர் | நல்லூர் |
| பெருந்தொழு | பல்லாக்கோயில் | அமுக்கயம் |
| திருப்பூர் | பொட்டிக்காம்பாளயம் | கற்றுங்காணி |
| பெரும்பிள்ளையூர் | குடிமங்கலம் | ஊற்றுக்குழி |

—ஆக ஊர்கள்—௨௭.

## தென் பொங்கலூர் நாடு

### நேரிசை வெண்பா

*கீரனூர் பொம்மனல்லூர் கேழல் பருத்தியூர்
நாரிபொன்னி பாடியொடு ராயகுளம்—வீரமிகத்
தங்குகூடத் தம்பூண்டி தானுமா ரூருந்தென்
பொன்கலூர் நாடாய்ப் புகல். (௯)

கீரனூர்
பொம்மனல்லூர்
பருத்தியூர்
பொன்னிபாடி
ராயகுளம்
கூத்தம்பூண்டி

—ஆக ஊர்கள்—௬.

இதனை வையாபுரி நாட்டுக்கு அடைசல் (இணை)நாடு என்றுங் கூறுவர்.

## ஆறை நாடு

†சேவைநக ரன்னியூர் வெள்ளாதி கோமங்கை திசைபுகழவாழ் முடுதுறை
தென்கவசை துடியலூர் நீலநகர் பேரையொடு தெக்கலூர் கரைமாதையும்
மேவுபுக ழவிநாசி கஞ்சை கானூர்கரவை வெண்பதியு மிருகாலூரும்
விரைசேரு முழலையொடு வடதிசையி லுறுகின்ற வெள்ளையம்பாடி நகரும்
நாவலர்க் கினிதான திருமுருகு பூண்டியொடு நலசெவளை பழனைநகரும்
நம்பியூ ரோடெலத் தூருக்கிரம் புலவர் நகராமுட னினிமையான
கோவினகா தொண்டைமான் புத்தூரு முட்டமே கூடலூர் சிங்கநகருங் [நாடே.
குடக்கோட்டூர் குள்ளந்து றைப்பதியு வாள்வந்தி கோட்டைகரை யாறை

சேவூர்
அன்னூர்
வெள்ளாதி
கோமங்கை
கோயின்முத்தூர் - கோயமுத்தூர்
முடுதுறை
கவசை
கோயிற்பாளையம் - சர்க்கார் சாமக்குளத்தருகுள்ளது
துடியலூர்
நீலம்பூர்
பேரூர்
தேக்கலூர்
கரைவழிமாதப்பூர்
அவிநாசி
கஞ்சப்பள்ளி
கானூர்
கருவலூர்
வெள்ளயன்பதி
இருகாலூர்
உழலை
வெள்ளயன்பாடி
திருமுருகன்பூண்டி
சேவளாபுரி
நடுவச்சேரி
பழவை
பெருமானல்லூர்
நம்பியூர்
எலத்தூர்
உக்கிரம்
புலவர்நகர்
கருக்கம்பாளையம்
கோயிற்பாளயம்
தொண்டாமுத்தூர்
முட்டம்
கூடலூர்
சிங்காநல்லூர்
குடக்கோட்டூர்
மொக்கணீசுரம் - திருவாசக வைப்புத்தலம்
குள்ளந்துறை
வாளவந்தி
கோட்டைக்கரை

—ஆக ஊர்கள்—௩௫.

---

† இவ்விருத்தத்தைத் திருத்தமாக எழுதியனுப்பினவர் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் - குமாரசாமி பிள்ளையவர்கள்.

இந்த ஆறைநாட்டைப் பற்றி மற்றொரு வகையை அறிவிக்குஞ் செய்யுள் வழங்குகிறது. அவிநாசி முதலிய சில ஊர்களைச் சேர்த்து **வட பரிசார நாடு** என்று வழங்கினதும் உண்டு.

காவியஞ்சூழ் கோவைகோ வங்கநாடு கவித்துவள ரன்னியூர் மன்னிநாடு
மேவியசா மக்குளத்தூர் கவையநாடு மிக்கசேலூர் தனக்குச் செம்மைநாடு
தேவிநடு வச்சேரி தணக்குநாடு சேய்சவள பூண்டியாம் பெருமாநல்லூர் [ணுதே.
ஆவிபெறும் பழனநா டிவையென் றோது மாறுநாட் டிதன்பெருமை யளக்கொண்

## வாரக்க நாடு

பூமேவு தென்சேரி திருவளர் களந்தையும் புகழ்கொண்ட பல்லடமுடன்
பூமலூரழகாய பேறைமா நகரமும் புகல் குயிலை சூரனூரும்
தேமேவு சோலைசெறி சாமளா புரமெழிற் செய்புதுவை வெள்ளலூரும்
திரமான கோடிநகர் மங்கலம் வாகையொளிர் சோநிகம மாவலூரும்
பாமேவு வாணிகுடி கொண்டிலகு மிரவலர்கள் பகரவரி தாயபுத்தூர்
பன்னுமறை யந்தணர்கள் வாழ்விற் செழித்திடும் பழமைமிகு சிங்கநல்லூர்
மாமேவு செந்தாமரைப் பொய்கை யுங்காஞ்சி மாநதிவயங்கு மேலாம்
மாநிலம் புகழ்மந்திர கிரிமுருகர் வாசஞ்செய் வாரக்க நாடுதானே. (௧௨)

| | | |
|---|---|---|
| தென் (செஞ்)சேரி | சூரனூர் | நிகமம் |
| களந்தை | சாமளாபுரம் | ஆவலப்பூம்பட்டி |
| பல்லடம் | புதுவை | புத்தூர் |
| பூமலூர் | வெள்ளலூர் | சிங்காநல்லூர் |
| பேறை | கோடிநகர் | |
| குயிலை | மங்கலம் | |

—ஆக ஊர்கள்—௧௬.

## வையாபுரிநாடு

விருத்தம்.

*திருமிகும் பழனியூர் கோதைமங் கலமுடன் செப்புகலையம் புதூரும்
சேரமா னூரிறைய மங்கல மடத்துரு திகழ்கடத் தூரினுடனே
அருமைமிகு கணியூாகண் ணுடிப்புதூருடன் அழகுமிகு கோட்டைத்துறை
ஆகுங்கொழுங் குண்டை மேல்கரைப் பட்டிலூ ரமர்தேவதா குடியுமே
பெருமைமிகு மாய்க்குடியி னுேடமரா பூண்டியும் பிசகாம ணிச்சிலம்பு
பீடுறுங் கொழுமம்வாழ் கரையோடை ரொன்பதூர் பிறங்குபுக ழோங்குநாடு
முரிமையுட னிரவலர்கள் மனநிலைமை யாய்ந்துள் ளுவந்துதவு கின்றசெங்கை
உத்தமர்கள் மேவுதிரு வாவினன் குடியென்ன வுயர்வுமிகு வளநாடரோ.(௧௩)

| | | |
|---|---|---|
| பழனியூர் | கடத்தூர் | தேவதாகுடி |
| கோதைமங்கலம் | கணியூர் | ஆய்க்குடி |
| கலையம்புத்தூர் | கண்ணாடிப்புத்தூர் | அமரர்பூண்டி |
| மானூர் | கோட்டைத்துறை | மணிச்சிலம்பு |
| இறையன்மங்கலம் | மேல்கரைப்பட்டிலூர் | †கொழுமம் |
| மடத்தூர் | கொழுங்கொண்டான் | வாழ்கரை |

—ஆக ஊர்கள்—கஅ.

மலை மேலுள்ள ஆலயத்தைப் பழனி என்றும், இரக்கத்துள்ள கோயிலைத் திருவாவினன்குடி என்றும் வழங்குவர். வைகாவி நாடு என்று சாசனம்.

## மணநாடு

நேரிசை வெண்பா.

*தென்னிலை கூடலூர் சேர்கோடந் தூர்நடந்தை
சின்னத்தா ராபுரமுஞ் சேர்ந்துமிக—உன்னிதங்கள்
சூழ்ராஜ மாபுரமும் சூடா மணியிலவை
வாழ்மணலூர் நாடாய் வழுத்து. (கசா)

| | | |
|---|---|---|
| தென்னிலை | நடந்தை | சூடாமணி |
| கூடலூர் | சின்னத்தாராபுரம் | இலவனூர் |
| கோடந்தூர் | ராஜபுரம் | |

—ஆக ஊர்கள்—அ.

## தலையநாடு

*தங்குபுங்கம் பாடியா வக்கு றிச்சி
தகுசேந்த மங்கலமு நன்மு டக்கூர்
பொங்குசாந் தப்பாடி யிணுங்க னூரும்
புகழ்வேளாண் பூண்டியெழிற் றலையூ ரோங்கும்
மங்கைகன்னி வாடிகிழான் கொண்டல் சின்ன
மருதூரிடக லப்பாடி யறிஞ ரெல்லாம்
புங்கமிகு குமாபா ளயத்தி னோடு
போந்தபதின் மூன்றூருந் தலைய நாடே. (கரு)

---

†கொழுமம் முதலிய ஊர்களைச் சேர்த்து கரைவழி நாடு என்று வழங்கினதும் உண்டு.

புங்கம்பாடி
இனுங்கனூர்
கிழான்கொண்டல்
அரவக்குறிச்சி
வேளான்பூண்டி
சின்னமருதூர்
சேந்தமங்கலம்
தலையூர்
இடக்கலப்பாடி
முடக்கூர்
கன்னிவாடி
குமாரபாளையம்
சாந்தப்பாடி

—ஆக ஊர்கள்—௧௩.

## தட்டய நாடு

*வண்மைமிகு புலியூ ருப்படமங்க லத்திளொடு மணவாடி சவதாப்பு நீள்
வாலரா சன்புரந் தான்றோன்றி யேழூரு வாழ்வுமிகு வெள்ளியணையுந்
திண்மைமே லைப்பாள யத்துடன் கட்டளை திருவனூர் சனப்பரட்டி
சீரங்க நாதபுர மணவாசி ராமகிரி திகழாச்சி மங்கலமுடன்
அண்மையுள கூடலூர் நொச்சிபட் டியுமப்பி யாபாளயஞ் சிறப்பா
யமர்கோயி லூர்பிச்சை பட்டிகொடை யூர்மூக்க னூங்குறிச் சியுமண்ணுளோர்
உண்மையுரை தோரணக் கற்பட்டி யறிஞருக் குதவிடும் பாதநத்தம்
உரைத்தவிவ் விருபத்தோ டைந்தூர்க ளுஞ்சேர வுற்ற தட்டயநன் னாடே.

புலியூர்
கட்டளை
நொச்சிப்பட்டி
உப்படமங்கலம்
திருவனூர்
அப்பியாபாளயம்
மணவாடி
சனப்பரட்டி
கோயிலூர்
சவதாப்பு
ரங்கநாதபுரம்
பிச்சம்பட்டி
வாலராசபுரம்
மணவாசி
கொடையூர்
தான்தோன்றி
ராமகிரி
மூக்கனூங்குறிச்சி
ஏழூர்
ஆய்ச்சிமங்கலம்
தோரணக்கற்பட்டி
வெள்ளியணை
கூடலூர்
பாதநத்தம்
மேலைப்பாளயம்

—ஆக ஊர்கள்—௨௫.

## பூவாணிய நாடு

*தாரைகச் சுளிகாடை யாம்பேட்டை வனவாசி சார்ந்தசின் னப்பனூருந்
தங்குதோப் பூருடன் கோனேரி பட்டியுஞ் சாற்றிடைப் பாடிதுளசை
ஆரோம லூர்கருப் பூர்நங்கை வல்லிவேள் ளாறுமேச் சேரிமுப்பை
யாசரூ மணியமா குந்திரு ரப்பள்ளி யணிகொங்க ணாபுரமுடன்
வீரமிகு சோழபாண் டியுநடுவ னேரியு மேவுசித் தூருதேவூர்
மிக்கபூ லாம்பட்டி பக்கநா டதிவலிமை மிஞ்சுறு பெருமபாலையாம்
பேரிலகு மிருபத்தா றூரோடு மேன்மைமொழி பெற்றநதி களும்வரைகளும்
பேசரிய சிற்பமமர் கோயிலுங் கட்டிபுகழ் பெருகுபூ வாணிய நாடே. (௧௭)

| | | |
|---|---|---|
| தாரமங்கலம் | ஓமலூர் | கொங்கணாபுரம் |
| கச்சுபளி | கருப்பூர் | சோழபாண்டி |
| காடையாம்பேட்டை | நங்கைவல்லி | நடுவனேரி |
| வனவாசி | வெள்ளாறு | சித்தூர் |
| சின்னப்பன்பட்டி | மேச்சேரி | தேவூர் |
| தோப்பூர் | முப்பை - சமுத்திரம் | பூலாம்பட்டி |
| கோனேரிபட்டி | அரசருமணி | பக்கநாடு |
| இடைப்பாடி | அமரகுந்தி | பெரும்பாலை |
| துளசம்பட்டி | சூரப்பள்ளி | |

—ஆக ஊர்கள்—உசு.

பூவாணிய நாட்டின் வடக்கு எல்லையான பெரும்பாலையே அதிகமானது இராஜமாநகரமான தகூர் (தருமபுரி) நாட்டுக்குத் தென் எல்லை ஆம்.

## மற்றொருவகை

### வெண்பா

*நங்கைவல்லி நாடு நணியபக்க நாடுடனே
தங்குபெரும் பாலையெனச் சார்நாடுந்—தங்குபுகழ்ப்
பூவா ணியநாடுட் பூத்தனவென் றோதினர்
பாவாண ருள்ளம் பரிந்து. (கஅ)

பூவாணிய நாட்டினுள் நங்கைவல்லி நாடு (இதை வஞ்சிநாடு என வழங்கினதுண்டு.) பக்கநாடு - (இதை வெள்ளாறு நாடு என்பாருமுளர்) பெரும்பாலை நாடு எனச் சில ஊர்கள் சேர்ந்ததாய்ச் சிறு சிறு நாடு ஆகப்பிளவுகொண்டும் வழங்கப்பட்டுளது.

## மேல்கரை அரயநாடு

என்னிலமெ னுந்தலைசை வெங்கனக ரஞ்சூரு மிம்பர்மகிழ் மொஞ்சனூரும்
இன்பாக வளர்கொல்லங் கோயில்மிகு கொந்தள மெழிலாக வருகரைசையும்
மன்னவ ருறும்விதரி யெழுநூற்று மங்கலம் வண்மையிள வாசநல்லூர்
வல்லிபுர கார்வளியி னேடுதுக் காச்சியும் வடிவுடைய நகரூஞ் சலூரா
முன்னிலைமை யாகத் திருக்காடு துறையுடன் முத்தமிழர் கொண்டாடவே
முற்றுமே யிந்திரன் பதிபோல் விளங்கியே மொய்ம்பேற வேதழைத்து
அன்னவயல் சூழ்கதலி தென்னைமா துளைபுன்னை யரசுநிலை பூகமாதி
யரியதரு நீடுபூஞ் சோலைசூழ்ந் தோங்குமே லரயநன் னாடுதானே. (கக)

| | | |
|---|---|---|
| தலையநல்லூர் - சிவகிரி | கொடுமுடி | கார்வளி |
| வெங்கம்பூர் | விதரி - அத்திப்பாளயம் | துக்காச்சி |
| அஞ்சூர் | எழுநூற்றுமங்கலம் | வடிவுடையமங்கலம் |
| மொஞ்சனூர் | இளவரச நல்லூர் | ஊஞ்சலூர் |
| கொல்லங்கோயில் | வல்லிபுரம் | திருக்காடுதுறை |
| கொந்தளம் | | |

—ஆக ஊர்கள்—கசு.

## கீழ்கரை அரயநாடு

*திருவுலவு மிடையாறு திடுமெல்வன் பொத்தனூர் திகழ்கபிலை பாண்டமங்கை*
*தென்கபிலை மாநகர் வெங்கரைசி ராப்பள்ளி சிகசை மருதூர் கொந்தளம்*
*மருவுலவு மானங்கூர் குன்னம்வட கரையாறை வண்மைசிறு நல்லிகோயில்*
*வளர்கொற்ற மங்கைமா தேவிந விளம்பள்ளி வாய்மைகொ ளிராமதேவம்*
*தருவுலவு சோழன்சி காமணியு டன்சித்த சன்னகர்பெ ருங்குறிச்சி*
*தகைமைநல் லூர்மணிய னூரொடு செருக்கலை தாளக்கரைகோ லாரம்*
*பருவமுயர் பாமத்தி சேலூரு மாவையும் பண்ணுமா ணிக்கநத்தம்*
*பகர்கலங் காநிலையு மானநா லெட்டூர்கள் பழுதில்கீ ழரய நாடே.* (உ௦)

| | | |
|---|---|---|
| இடையாறு | ஆனங்கூர் | நல்லூர் |
| திடுமெல் | குன்னம் | மணியனூர் |
| பொத்தனூர் | வடகரையாற்றூர் | செருக்கலை |
| கபிலமலை | சிறு நல்லிகோயில் | தாளக்கரை |
| பாண்டமங்கலம் | கொற்றமங்கலம் | கோலாரம் |
| கபிலைக்குறிச்சி | மாதேவி | பமுரத்தி |
| வெங்கரை | இளம்பள்ளி | சேலூர் |
| சிராப்பள்ளி | ராமதேவம் | மாவிரட்டி |
| சிகசை | சோழ சிரோன்மணி | மாணிக்க நத்தம் |
| மருதூர் | சித்துப்பூண்டி | கலங்காநிலை |
| கொந்தளம் | பெருங்குறிச்சி | |

—ஆக ஊர்கள்—௩உ.

## ஒடுவெங்க நாடு

*சீருலவி டுந்தடப் பள்ளிகூ டற்கரை திருக்கணும் பேட்டையுடனே*
*திகழ்சத்தி மங்கையா வக்கோட்டை கலையனூர் திறமைமிகு சிறுமுகைநிதங்*
*காருலவி வருமிரு காலூர்கா ராப்பாடி கருத்துறும திப்பானூருங்*
*கனிவுமிகு வானிபுத் தூரெழில்விண் ணப்பள்ளி கனமா மிரும்பறையுடன்*

*ஏருலவு மாலத்தூர் செம்மநாய்க் கன்பட்டி யிணைமேவு சதுமுகையதும்
இறையவர்க் குபதேச மோதுமலை யாண்டவ னின்பஞ் சிறப்பதான
பாருலகி லுத்தண்ட தவளமலை யான்கிருபை பாலிக்க நின்றுவளரும்
பரிவுமிகு மொடுவங்க நாட்டிலுள வினைவரும் பலகால மிக வாழ்கவே. (உக)

| | | |
|---|---|---|
| சடப்பள்ளி | சிறுமுகை | விண்ணப்பள்ளி |
| கூடற்கரை | இருகாலூர் | இரும்புறை |
| திருக்கணும்பேட்டை | காரைப்பாடி | ஆலத்தூர் |
| சத்தியமங்கலம் | மதிப்பாளூர் | செம்மநாய்க்கன்பட்டி |
| அரவக்கோட்டை | வானிபுத்தூர் | சதுமுகை |
| கவலயனூர் | | |

—ஆக ஊர்கள்—கசு.

ஒடுவங்கநாட்டின் இணைநாடுகளாகத் தணுக்கன்கோட்டை நாடு - ப(ஹ)டி நாடு என்னுங் கொள்ளே காலத்தையுஞ் சோத்துக்கூறுவாரு முளர்

வடகரை நாடு

*அந்தியூ ரும்பட்டி லூருங்கு றிச்சிபீ லாம்பட்டி சம்பைவானி
ஆப்புகூ டலினோடு கீழ்வானி மூங்கிலக ரானமூ கப்பனூரும்
பைந்தரு விளங்குகரு வல்வாடி தன்னோடு பகரமாப் பேட்டைபொன்னிப்
பழநதிக் கரைநெருஞ் சிப்பேட்டை வளவயற் பரவெண்ண மங்கலமுடன்
செந்திரு விளங்கவளர் கோட்டை பூதப்பாடி சேருநக லூருலகடம்
செழிய கன்னப்பிலி பருவாசி பிரமயஞ் சீர்கட்டி யின்சமுத்திரம்
வந்தனை செயும்பெரியர் தங்குபூ ஞச்சியுடன் வளர்சென்னம் பட்டியென்ன
மாகவினூர் சாற்றுமிரு பத்துநான் கூர்களும் வடகரைநாடுதானே. (உஉ)

| | | |
|---|---|---|
| அந்தியூர் | மூங்கில்பட்டி | நகலூர் |
| பட்டிலூர் | மூகயனூர் | உலகடம் |
| குறிச்சி | கருவல்வாடி | கன்னப்பிலி |
| பீலாம்பட்டி | அம்மாப்பேட்டை | பருவாசி |
| சம்பை | நெருஞ்சிப்பேட்டை | பிரமியம் |
| பவானி | எண்ணமங்கலம் | கட்டிசமுத்திரம் |
| ஆப்புக்கூடல் | கோட்டை | பூஞச்சி |
| கீழ்வானி | பூதப்பாடி | சென்னம்பட்டி |

—ஆக ஊர்கள்—உச.

## †கிழங்கு நாடு

*திருவேட்ட மங்கலமும் புகழியூருஞ்
செழியதோட் டக்குறிச்சி தேவரெல்லாங்
கருவேட்டுப் பாவுகடம் பன்குறிச்சி
கருதரிய வாங்கனெரூ ராமாறூரும்
மருவேட்டு மலர்கரைசேர் காஞ்சியின்கீழ்
மன்னியெழிற் காவிரித்தென் கரையி னீடி
ஒருவேட்டி லெழுதவொண்ணா வளப்பமெல்லாம்
உயர்ந் தொளிரும் பழம்பதியாங் கிழங்குநாடே. (உரு)

| | | |
|---|---|---|
| வேட்டமங்கலம் | தோட்டக்குறிச்சி | வாங்கல் |
| புகழியூர் | கடம்பன்குறிச்சி | நேரூர் |

—ஆக ஊர்கள்—சு.

## நல்லுருக்கனாடு

*சமத்தூர்மா னுப்பட்டி அந்தியூர் புக்குளம் தளிவாழை வாடிசித்தூர்
தாழ்வில்பூ லாங்கிணறு சுஞ்சிவா டியினோடு சாற்றுடுக் கம்பாளயம்
நிமித்தமுறும் அங்கலக் குறிச்சி யேர்ப்பட்டியும் நீள்குறிச சிக்கோட்டையும்
நேமமுறு முடுமலைப் பேட்டைவே லூர்வளம் நீள்குறுஞ் சேரியூரும்
அமைத்தகோட் டூர்புதூர் மலையாண்டி பட்டண மழகிளைய பாளயத்தோ
டமர்சடைய பாளயமு மேலமில வங்கமுல கரியமிள காதிவிளைவும்
திமிர்த்தன மிலங்குவெண் கோட்டிபமு மோங்கிச் செழித்துவளர் பூனாச்சியுந்
திகழவல் லார்க் குதவி புரியுநல் லார்கணிறை செறியுந லுருக்கனாடே. (உச)

| | | |
|---|---|---|
| சமத்தூர் | பூலாங்கிணறு | வேலூர் |
| மானுப்பட்டி | சுஞ்சிவாடி | குறுஞ்சேரி |
| அந்தியூர் | உடுக்கம்பாளயம் | கோட்டூர் |
| புக்குளம் | அங்கலக்குறிச்சி | புதூர் |
| தளி | ஏர்ப்பட்டி | மலையாண்டி பட்டணம் |
| வாழைவாடி | குறிச்சிக்கோட்டை | இளைய பாளயம் |
| சித்தூர் | உடுமலைப்பேட்டை | சடைய பாளயம் |

—ஆக ஊர்கள்—உக.

---

†பாசூர் ஸ்ரீமான் - ஆறுமுகக் கவுண்டரவர்கள் உதவியாற் கிழக்கு நாட்டின் விவரங் கிட்டியது.

## வாழவந்தி நாடு

### விருத்தம்

வாகுசேர் தருவாழ வந்திகூ டற்சேரி வாய்த்தபுல் லூர்மோ கனூர்
மருவுகீ ரம்பூரு வல்லிபுர மதனொடு மனத்திடத்தோ ளூரினும்
மேகமென நீடுசாத் தம்பூரு சொல்லுக்கு மேலான திண்டமங்கை
வித்தக நடந்தையும் ஆரியூர் கோதையூர் மேலசாத் தம்பூருடன்
ஆகமந் தெரிபிள்ளை கரையாறு கோதூரு மம்பிகை மடப்பள்ளியும்
அழகுறு பிராந்தகம் தளிகை செங்கைப்பள்ளி யருண்மேல யாரியூரும்
கோகநக முத்தாறு குடகனொடு காவேரி குலவு சீரங்கமதுவும்
கொங்குமண் டலமேவு நாலாறு நாட்டினிற் குடவாளவந்தி நாடே. (உரு)

| | | |
|---|---|---|
| வாழவந்தி | சாத்தம்பூர் | கோதூர் |
| கூடற்சேரி | திண்டமங்கலம் | மடப்பள்ளி |
| புல்லூர் | நடந்தை | பிராந்தகம் |
| மோகனூர் | ஆரியூர் | தளிகை |
| கீரம்பூர் | கோதையூர் | செங்கைப்பள்ளி |
| வல்லிபுரம் | மேலசாத்தம்பூர் | மேலயாரியூர் |
| தோழூர் | பிள்ளைகரை | |

—ஆக ஊர்கள்—உ௦.

## வாழவந்திநாட்டுக்கு உபநாடுகள் (2)

### 1. தூசூர் நாடு

மருவுலவு தூசியூர் குவளமா பட்டியுடன் வளம்பெரிய தோகைநத்தம்
வளர்சிதம் பரபட்டி முத்தக்கா பட்டியும் வருபழய பாளயமுடன்
தருவுலவு வேப்பையும் வசந்தரா யன்கோயில் தருலத்தி வாடிபாளி
தாதுலவு பொன்னேரி புதுபட்டி புதுகோட்டை தங்குபாலப்பட்டியும்
விரிவுதிகு நாமக்கல் கோடங்கிபட்டியும் வெற்றி சீரங்க னல்லூர்
வீருனதிப்பிரமா தேவி யெருமைப் பட்டி வீரசோழராசை நத்தம்
திருவுலவு ரட்டையம் பட்டிமேட் டுப்பட்டி சீர்கொள்ளு மருவூடன்
செய்ய புத்தூரலங் காநத்த முஞ்சேர்ந்து செயதூசூர் நாடுதானே. (உசு)

| | | |
|---|---|---|
| †தூசியூர் | தோகைநத்தம் | முத்தக்காபட்டி |
| குவளம்பட்டி | சிதம்பரப்பட்டி | பழயபாளயம் |

†இந்தத் தூசியூர்த் திருக்கற்றளியுடைய பரமேசுரர் கோயில் சம்பந்தமான ஒரு தாம்பர சாசனத்தால், கோ ராஜகேசரி வன்மன் ஈழத்தின்மேற் படையெடுத்தமை விளங்குகிறது.

| | | |
|---|---|---|
| வேப்பநத்தம் | பாலப்பட்டி | அரசநத்தம் |
| வசந்தராயன்கோயில் | நாமக்கல் | ரட்டையம்பட்டி |
| லத்திவாடி | கோடங்கிபட்டி | மேட்டுப்பட்டி |
| பரளி | நல்லூர் | அரூர் |
| பொன்னேரி | திப்பிரமாதேவி | புத்தூர் |
| புதுப்பட்டி | எருமைப்பட்டி | அலங்காநத்தம் |
| புதுக்கோட்டை | | |

—ஆக ஊர்கள்—உ௫.

## 2. விமலை நாடு

*கருணையயி லூருடன் விருதுகாட் டுப்புதூர் கனகடாரம் உன்னியூர்*
*காமதரு வாஞ் சிலாப் பிள்ளைபுத் தூர்நத்தங் கமழ்நாக யநல்லூரும்*
*அருமைதனில் மேலாம்பி டாரமங் கலமுட ஞெருவொரு வந்தூரதும்*
*அருமைமெய்க் காநாய்க்கன் பட்டிகாட் டுப்பட்டி அமர்சேர்வை காரனூரும்*
*வருணமழை பொழிகளத் தூர்முருங் கைப்பதியு வண்மையாண் டாபுரமுடன்*
*வரிசைமேட் டுப்பட்டி தமிழ்வலைய பட்டியும் வாஞ்ஞெங்கு புத்தூருமே*
*திருகொள்வேந் தன்பட்டி அரசலூர் முதலபல செல்வமிகு நகரமெல்லாம்*
*சேர்ந்துபல வளமையுட ஞெங்குமலை நதிபரவு சீர்விமலை நாடுதானே* (உஎ)

| | | |
|---|---|---|
| அயிலூர் | பிடாரமங்கலம் | ஆண்டாபுரம் |
| காட்டுப்புத்தூர் | ஒருவந்தூர் | மேட்டுப்பட்டி |
| கடாரம் | மேய்க்காநாய்க்கன்பட்டி | வலையர்பட்டி |
| உன்னியூர் | காட்டுப்பட்டி | புத்தூர் |
| சீப்பிள்ளார் புத்தூர் | சேர்வைகாரன்பட்டி | வேந்தன்பட்டி |
| நத்தம் | களத்தூர் | அரசலூர் |
| நாகய நல்லூர் | முருங்கை | |

—ஆக ஊர்கள்—உ0.

## அண்ட நாடு

**சீர்கொண்ட பொன்னிநதி வானியான் பொருனையுஞ் சேர்கொங்கு மண்டிலத்திற்*
*சிறப்புமிகு மிருபத்து நான்குநாட் டிற்கலை தெரிந்தநா வலர்மிகுந்து*
*பேர்பெறு விருப்பாச்சி பெரியநற் கோட்டையும் பெருமைசேர் கொற்றை மேடு*
*பிரபலம் பெறுபுரவி யூர்கள்ளி மாங்தொத்து பிசகாத கரைசைப் பொது*

---

வாழவந்தி நாடு தூசூர் நாடு - விமலை நாடு இம்மூன்று நாட்டின் ஊர்ப்பாட்டுகள், வாழவந்திமிட்டா ஜமீன்தார் ஸ்ரீமான் - சிங்கய கவுண்டரவர்கள் எழுதியனுப்பினவை.

பார்புகழு மாம்புறையி னேடிடைய கோட்டையும் பகர்குட்டமொடு கவுத்வம்
பண்புமிகு கல்லா புரம்புகழ்பூ திப்பரம் பலக்கணூற் றென்னும்பதி
நார்கொண்ட கேதின் குறும்புபுலி யூர்நத்த நவிலுமிம் மூவைந்தெனும்
நகர்சூழ்ந்த வளநாடு புவனிபுகழ் தருகின்ற நல்லண்ட நாடுதானே (உ அ)

| | | |
|---|---|---|
| விருப்பாச்சி | கரைசைப்போது | கல்லாபுரம் |
| பெரிய கோட்டை | மாம்புரை | பூதிப்பரம் |
| கொற்றைத்திட்டு | இடைய கோட்டை | பலக்கணூற்று |
| புரலியூர் | குட்டம் | கேது குறும்பு |
| கள்ளி மாங்தேத்து | கவத்துவம் | புலியூர் நத்தம் |

—ஆக ஊர்கள்—கரு.

## வெங்கால நாடு

*காருற்ற புன்னம் பவுத்திரநா கம்பளி காளிக்கு றிச்சிகுப்பம்
கமழ்தும்பி வாடியு நெடுங்கூர் கோயம்பள்ளி காசிபாளயங் கோயிலூர்
சீருற்ற விகுருதநா யகாவெஞ்ச மாக்கூடல் சிராம புரமதோடு
சேர்பள்ள பாளயம் வெங்கடா வரமுடன் றிகழ்நிமிர்ந் தம்பட்டியும்
பேருற்ற வாற்றூரு முதலபதி னூறூர்கள் பெருமைபெற வேபொருந்தி
பிணிமுகப் பீலியுங் கயமருப் பாரமும் பிரசமுழு தாதுமலரும்
ஏருற்ற மறியலைச் செங்கையா லிருகரை யெறிந்துவரு சிற்றாறுடன்
இணையிலான் பொருனைநதி சூழவா னிலையோங்கு மின்பவெங் காலநாடே.

| | | |
|---|---|---|
| புன்னம் | நெடுங்கூர் | ராமபுரம் |
| பவுத்திரம் | கோயம்பள்ளி | பள்ளபாளயம் |
| நாகம்பள்ளி | காசிப்பாளயம் | வெங்கடாவரம் |
| காளிக்குறிச்சி | கோயிலூர் | நிமிர்ந்தம்பட்டி |
| குப்பம் | வெஞ்சமாக்கூடல் | ஆற்றூர் |
| தும்பிவாடி | | |

—ஆக ஊர்கள்—கசு.

இராஜமாநகரமாதலின் கரூரை ஊர்த்தொகையுட் சேர்த்து எண்ணப்பட வில்லை. வேங்கல நாடு என்பாரும் உண்டு. இது தென் கொங்கு.

## வெங்கால நாட்டின் இணை நாடு

## இடைப்பிச்சனூடு

வெண்பா

*பொன்னூரி யூர்நெடுங்கூர் போற்றுபா முத்தியுடன்
முன்னூருஞ் சேர்நான்கு மூதூர்கள்—கன்னிச்
சடைப்பிச்ச னூடுந் தலமேவு கொங்கில்
இடைப்பிச்ச னூடென் றியம்பு. (௩௦)

| | | | |
|---|---|---|---|
| ஆரியூர் | நெடுங்கூர் | பரமுத்தி | முன்னூர் |

—ஆக ஊர்கள்—௪.

இதை மண நாட்டிற்கு இணை நாடு எனச் சொல்வாருமுளர்.

## ஆனைமலைநாடு

ஆசிரிய விருத்தம்

* ஆனைமலை காளியா சூர்மஞ்ச நாயக்க னம்பிச்சி யின்புதூரும்
அர்த்தநா ரிப்பாளயம் பாரமடை ரெட்டி யாரூர்கோ டங்கிபட்டி
சோலைபொழி பெரியபோ துப்பிலிய னூர்முத்தூர் சொல்பூச்ச நாரியுடனே
தொகுதியுறு மாட்டுப்புள் ளாச்சிமா றப்பனூர் சுகசின்ன யன்பாளயம்
ஞானமுறு தாத்தாரா வுத்தன் புதூரோடு நற்கம்பா லப்பட்டியும்
நாவலர்கள் புகழ்கின்ற வேட்டைகா ரன்புதூர் நவமாகு முடையகுளமும்
வானைமிர் மலையோங்கு காடருட னிறவுளர்கள் மலைசர்களு மடைவதாக
மாதங்க வேட்டைபுரி யானைமலை தனிலின்று வளமாகு மிருபதூரே. (௩௧)

| | | |
|---|---|---|
| ஆனைமலை | ரெட்டியாரூர் | மாறப்பகவுண்டன்புதூர் |
| காளியாபுரம் | கோடங்கிபட்டி | சின்னய்யன்பாளயம் |
| அரசூர் | பெரியபோது | தாதாராவுத்தன்புதூர் |
| மஞ்சநாயக்கன்பட்டி | உப்பிலியனூர் | கம்பாலப்பட்டி |
| அம்பிச்சிகவுண்டன்புதூர் | முத்தூர் | வேட்டைக்காரன்புதூர் |
| அர்த்தநாரிபாளயம் | பூச்சநாறி | உடையகுளம் |
| பாரமடை | ஆட்டுப்புள்ளாச்சி | |

—ஆக ஊர்கள்—உ௦.

## காவடிக்கணுடு

* உண்மைமிகு பொள்ளாச்சி நகமஞ்சந் த்ராவரம் ஊற்றுநகர் ராமபட்டணம்
ஓதுநா கூர்வடுக பாளயம் கோமங்கை யொத்தகோ பாலபுரமும்
வண்மைமிகு மாய்ச்சிநகர் மாவலுப் பன்பட்டி வருசலத் தூர்சிராமி
வண்ணூரின் மடைகறைப் பாடிசிங் காநல்லூர் மருவு வெள்ளாளரூரும்
பண்மைமிகு ராசக்கா பாளயம் மாய்க்கனும் பட்டியுட னேபுதூரும்
பருவமழை யகலாது பொழியவள மொடுவயல்கள் பலனுதவி வினிதிலேங்கு
திண்மையொடு குடிசெழித்துத் தான தருமந் திருக்கோயிலுந் தொழில்களுஞ்
சேரச் சிறந்தழுகி தேவடிக் கன்புவிளை செய்காவ டிக்கணுடே. (௩௨)

---

வேட்டைக்காரன் புதூர் ஸ்ரீமான் - பழனிச்சாமிக் கவுண்டரவர்கள், ஆனைமலை நாட்டு விவர சகாயம் புரிந்தனர்.

| | | |
|---|---|---|
| பொள்ளாச்சி | கோமங்கலம் | கறைப்பாடி |
| நகமம் | கோபாலபுரம் | சிங்காநல்லூர் |
| சந்திராவரம் | ஆய்ச்சிபட்டி | வெள்ளாளபாளயம் |
| ஊற்றுக்குழி | மாவலுப்பன்பட்டி | ராசக்காபாளயம் |
| ராமபட்டணம் | சலத்தூர் | மாய்க்கனும்பட்டி |
| நாகூர் | சிராமி | புதூர் |
| வடுகபாளயம் | வண்ணூர்மடை | |

—ஆக ஊர்கள்—உ0.

## இராசிபுரநாடு

*வளமிகுமி ராசைநகர் பாச்சலா லத்தூரு வருபட்ண மத்தனூரும்*
*வண்மையின் னும்பள்ளி மல்லூரி னேடுவட கன்பட்டி சீராப்பள்ளி*
*குளமிகுபிள்ளா நல்லூர் கூனவே லன்பட்டி குணநத்த மேடுகல்லங்*
*குளத்திஞெடு மின்னக்கல் ஒடுவன் குறிச்சியுங் குவிசிங்க ளாந்தபுரமும்*
*தெளிவேள் குறிச்சிகல் லுக்குறிச் சியிஞெடு சேர்ந்தகரு தானியூருஞ்*
*செய்யதுத் திக்குளம் சேந்தமங் கலமழகு சேர்தொப்பை பட்டியுடனே*
*இளைஞர்சேர் நாமகிரி பேட்டைகலி யாணியுட னிருபத்து நான்கூர்களும்*
*எங்கோ முஞ்சோம்ப வில்லாமல் வாழ்கின்ற இராசிபுர நாடுதானே.* (௩௩)

| | | |
|---|---|---|
| இராசிபுரம் | சீராப்பள்ளி | வேளுக்குறிச்சி |
| பாச்சல் | பிள்ளாநல்லூர் | கற்குறிச்சி |
| ஆலத்தூர் | கூனவேலன்பட்டி | கருதானி |
| பட்டணம் | நத்தமேடு | துத்திக்குளம் |
| அத்தனூர் | சல்லங்குளம் | சேந்தமங்கலம் |
| மின்னும்பள்ளி | மின்னக்கல் | தொப்பைபட்டி |
| மல்லூர் | ஒடுவன்குறிச்சி | நாமகிரிப்பேட்டை |
| வடகன்பட்டி | சிங்களாந்த புரம் | கலியாணி |

—ஆக ஊர்கள்—உ௪.

*இந்த ராசிபுர நாடு எழூர் நாடு முதலிய நாடுகள் சூழவுள்ள கொல்லிமலையின்மேல் 14 நாடுகள்.*

*வாளவந்தி நாடு, வலப்பூர் நாடு, குண்டூர் நாடு, தின்னனூர் நாடு, அரியூர் நாடு, தேவனூர் நாடு, சேலூர் நாடு.* 7.

*குண்டுணி நாடு, ஆலத்தூர் நாடு, திருப்பள்ளி நாடு, இடைப்புல்லி நாடு, சித்தூர் நாடு, பிறக்கரை நாடு, பயில நாடு,* 7. *இவ்வூர்த்தொகையின் பாட்டு* உ௫, உ௬ *நோக்குக.*

## சேலம் நாடு

### இது ராசிபுரநாட்டின் உபநாடு

*வளமிகுந்திடு சேர ராயன்மலை நின்றுவரு மணிமுத்து நதிசெழிக்கும் [மல்லூர்
வண்மைசேர் சேலம்வெண் ணந்தூ ரமாப்பேட்டை வளர்செவ்வாய்ப்பேட்டை
தளமிகுங் குமாரக ரலைவாய் நடுப்பட்டி சௌதாபுர மினக்கல்
தணிவில்மிசி ஞும்பட்டி குமாரசா மிப்பட்டி தங்குசெம் மாண்டபட்டி
உளமகிழ விமிரிளம் பள்ளிராக் கிப்பட்டி யொயிலான வீரபாண்டி
ஓதறிஞர் சந்தகம் வந்துதமிழ் பாடிடு முத்தமச் சோழபுரமும்
அளவில்பய னுதவியின் புறுகாரி பட்டியு மாண்மை வீராணமுடனே
யயோத்தியணி நகரமுஞ் சேரவரு மிருபதூ ரழகான சேலநாடே. (நு௪)

| | | |
|---|---|---|
| சேலம் | நடுப்பட்டி | ராக்கிப்பட்டி |
| வெண்ணந்தூர் | சௌதாபுரம்-ஓலைப்பட்டி | வீரபாண்டி |
| அம்மாப்பேட்டை | மின்னக்கல் | உத்தமசோழபுரம்-காபாம் |
| செவ்வாய்ப்பேட்டை | மிசிஞும்பட்டி | காரிபட்டி |
| மல்லூர் | குமாரசாமிப்பட்டி | வீராணம் |
| குமாரபாளயம் | செம்மாண்டபட்டி | அயோத்திப்பட்டணம் |
| அலவாய்ப்பட்டி | இளம்பள்ளி | |

—ஆக ஊர்கள்—உ0.

சேலத்தை அடுத்த சேர்வராயன் மலைமேல்

| | | |
|---|---|---|
| முட்டநாடு | மோகநாடு | சேலம்நாடு |

என மூன்றுநாடுகளுள்ளன.

மலைமேல் சேலநாடு என்னும் பகுதியில் ஏற்காடு இருக்கிறது. அங்கு ஐரோப்பியர் பங்களாக்களும் கச்சேரிகளுமிருக்கின்றன.

## காஞ்சிக்கோயில் நாடு

பண்ணுதமி ழின்பஞ் சிறந்த தென் காஞ்சிநகர் பண்பான கூவலூரும்
பார்புகழ்ந் தருள்கவந் தப்பாடி யுடனதிக பழனமுள பாரியூரும்
பொன்னினியல் வாழும் பெருந்தலைசை யூருடன் பொருவில்புலியூர் முடச்சூர்
புங்கமிகு பங்கயமி லங்கியக லிங்கயம் புகழேவிளங்கி நாளும்
மன்னுமணி மேடைதிகழ் மின்னிய வழுக்கொளி வளமிகு குளப்பலூரும்
வானவர் விளங்குதா ஞுன்றியும் பூஞ்சோலை மருவுபுக ழுயிலூருடன்
கன்னிபங் காளர்திரு நீலகண்டேசுரர் கவுரியுமை கருணை யதனால்
காஞ்சிவள நாட்டவர்கள் நீடூழி காலமுங் காசினியின் வாழ்கமாதோ. (நு௫)

| | | |
|---|---|---|
| காஞ்சிக்கோயில் | பெரும்புலியூர் | தாளுன்றி |
| கூகலூர் - கூவலூர் | முடச்சூர் | விக்கிரமசோழபுரம் |
| கவந்தப்பாடி | கலிங்கயம் | அயிலூர் |
| பாரியூர் | அழுக்கோளி | |
| பெருந்தலையூர் | குளப்பலூர் | |

—ஆக ஊர்கள்—கஉ

## குறும்பு நாடு

குருமந்தூர் கோசனஞ் செவியூரயி லூருடன் கூறுங்கு ளப்பலூருங்
கோளு வலங்கய முடச்சியூர் கலிங்கயங் கோலமுறு மாதியூரும்
பெருகுசிவ லூர்குன்னத் தூரழுக் கொளியுடன் பெருமைதரு தாளுன்றியும்
பீடுபெறு திங்களூர் மூதூரநல் லூருடன் பேசுந்திருப்பூர் வாய்ப்பூர
வருவிஜய மங்கையு நிரம்பையுங் கூடலூர் மறுவறு சிறுக்கழிஞ்சி
மாசில்செங் கைப்பள்ளி மண்ணறைசீ ஞபுரம் வன்மைசெறி பால் தொழு
திருவுலவு வெள்ளரி வளிமுகுந் தைப்பதி சிறந்தகற் றுங்காணியுந் [வுடன்
தேர்ந்தகொடு மணலமுக் கயந்தக்க ளூரூற்று சேர்குழி குறிப்பிநாடே.

| | | |
|---|---|---|
| குருமந்தூர் | தாளுன்றி | மண்ணறை |
| கோசனம் | திங்களூர் | சீனுபுரம் - பவணந்தி |
| செவியூர் | மூதூர் | முனிவர் பிறப்பிடம் |
| அயிலூர் | நல்லூர் - குலோத்துங்க | பால்தொழு |
| கோளப்பலூர் | சோழநல்லூர் | வெள்ளரிவள்ளி |
| அலங்கயம் | திருப்பூர் | முகுந்தை - குரக்குத்தளி |
| முடச்சியூர் | வாய்ப்பூர் | கற்றுன்சாணி |
| கலிங்கயம் | விஜயமங்கலம் | கொடுமணல் |
| ஆதியூர் - ஆதஊர் | நிரம்பையூர் | அமுக்கயம் |
| சிவலூர் | கூடலூர் | தக்களூர் |
| குன்னத்தூர் | சிறுக்கழிஞ்சி | ஊற்றுக்குழி |
| அழுக்கோளி | செங்கைப்பள்ளி | |

—ஆக ஊர்கள்—௩உ.

## முற்றிற்று.

---

* காஞ்சிக்கோயில் நாட்டு விஷயங்கள், கோபிசெட்டிபாளயம் ஸ்ரீமான் முத்துவேலப்ப கவுண்டரவர்கள் உபகரித்தனர்.

† கூவலூர் சிவாலய சாசனத்தில் காஞ்சிக்கோயில் நாடு. நாட்டுக்காமிண்டன் என்பன முதலிய குறிப்புகள் இருக்கின்றன.

‡ கொங்குவேளிர் விஜயமங்கலத்தவர் என்பர்.

இப்புத்தகத்தை வாங்குவோர் முதலில் திருத்தத்தைச் செய்துகொண்டு வாசிக்கவேண்டும்.

## சதகத்துப் பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 12 | வலரொன்றும் | வலர்கள் |
| 8 | 26 | புலியுளமுன்னமி | புலியுறமுன்னமி |
| 10 | 17 | மெழு | றெழு |
| 32 | 29 | நாயகன் | நாயன் |
| 35 | 4 | வயி[illegible]ம் | [illegible]யறும் |
| 36 | 15 | புண்ணி[illegible] | பு[illegible]ண்ய |
| 40 | 23 | செய[illegible]க் | [illegible]செய்யுங் |
| 45 | 29 | வாய்[illegible] | [illegible]ாய்த்த |
| 62 | 16 | சானங் | சாசனங் |
| 72 | 16 | வியாசசியான | வியாக்கியான |
| 78 | 4 | போரதவு | போராதரவு |
| 79 | 24 | கொக்கி | கொங்கி |
| 80 | 24 | பதினெந்தாவது | பதினெந்தாவது நாள் |
| 85 | 23 | லழுது | லமுது |
| 88 | 24 | சிறப்புமிக | துரைத்தனமு |
| 93 | 5 | ப்பெறு | க்கொள் |
| 115 | 23 | றுகளறு | சூள |

## ஊர்த்தொகைப் பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 20 | வாரக்க | காங்கேய |
| 2 | 13 | ஊர்கள் | நாடுகள் |
| 11 | 25 | கரைசை | கறைசை |
| 12 | 21 | பமுர்த்தி | பாமுத்தி |